## அடியவரது அன்பும் அதிசய அநுபவமும்

திண்டிவனத்தின் கிழக்கே ஐந்தாவது மைலில் எளவாளப் பாக்கம் என்னும் கிராமத்தில் திரு. வேங்கடவரத ரெட்டியார் வீட்டில் அன்பிற் சிறந்த அடியவர்கள் இராக் காலங்களில் பூசை அறையை மெழுகிக் கோலம் இட நேரங் காணுது சோர்ந்து படுத்துவிட்டு விடிந்து எழுந்து கண்டதும், அற்புதமான கோலங்கள் இட்டிருப்பதைப் பார்த்து ஒரு புறம் ஆச்சரியமும் மற்றொரு புறம் பயமும் கொண்டு விட்டனர். சுவாமிகள் அவ்வூருக்கு வந்தபோது தங்கள் அச்சத்தைத் தெரிவித்தார்கள். "ஏன் பயப்பட வேண்டும்? பில்லி சூனியம் குட்டிச்சாத்தான் என்று எண்ணிக்கொள்ளுகிறீர்களா? ஆண்டவனுடைய அருள் செய்யும்முறை அது!" என்று சுவாமிகள் விளக்கினுர்கள்.

வாணியம்பாடி திரு. சம்பங்கி செட்டியார் வீட்டில் சுவாமிகளது படம் யார் கையும் படாமல் திடீரெனப் பூசை மாடத்திலிருந்து தரையில் வந்து தங்கும். உடனே சுவாமிகள் அவ்வூருக்கு வருகின்றுர்கள் என்ற விஷயத்தை அவ் வீட்டார் அறிந்து கொள்ளுவர். இந்த அநுபவத்தை இன்றைக்கும் அச்செட்டியார் மனைவி திரு. மங்கையம்மாள் கூறி மகிழ்வர்.

iii ஆபத்தில் அருந்துணை

அடியவர்களுக்குள் துணையோ ஆபத்தான நிலைகள் ஏற்பட்ட காலத்திலே, சுவாமிகளை உறுத்து நினைத்ததால், வந்த ஆபத்து வழி தெரியாமல் போய் விட்டிருக்கிறது. திருச் சாத்தனூரிலிருந்து சுவாமிகளது வாணியம்பாடி உற்சவத்தைத் தரிசிக்க, சின்னகம்பத்தம் திரு. முத்துநாராயண ரெட்டியாரும், அவரது தாயும் தங்கையும் விழுப்புரம் இரயிலடிக்கு இரவில் வண்டி கட்டிச் சென்றபோது, வீதியில் பதினைந்து பதினுறுபேர் திருடர்கள் வழிமறிக்க வந்தனர். ஏராள நகைகள் அணிந்து இருந்ததால் அச்சத்திற்கு அளவில்லை. கைக்கு எட்டு தூரத்திலே திருடர்கள் வந்தும், குருநாதரது திருவடிகளையே சிந்தித்தமையால், "போக்குவண்டியடா இது. இதில் யாருமில்லை" என்று அவர்களேசொல்லிக் கொண்டு போய்விட்டனர். இதேபோல, ஆனத்தூரிலிருந்து சாத்தனூர் திரு. முத்துராம ரெட்டியார் அவசர

வேலையாக இரவிலே பண்ணுருட்டிக்குப் போக நேர்ந்தது. சுவாமிகள் அப்போது அங்கே வந்திருந்தார்கள். வழியில் திருடர் பயம் என்று சுவாமிகளிடம் தெரிவிக்க, "ஏதுக்கும் அஞ்ச வேண்டாம், செல்லட்டும்" என்று சுவாமிகள் வாக்குக் கொடுத்தார்கள். அப்படியே இரெட்டியார் அணிந்திருந்த தங்கக் கடியாரச் சங்கிலி முதலியவற்ளேடு சென்ளுர். வழியில் திருடர்கள் வண்டியைத் துரத்தி அருகே வந்து "காலி வண்டி இது" யென்று சொல்லிக்கொண்டே போய் விட்டனர்.

ஆனத்தூர் திரு. ஜகந்நாத ரெட்டியார் தமக்கை திரு. ஆதிலக்ஷிமியம்மாள் சட்ட அநுஷ்டானம்வழுவாதவர். ஒருநாள் அந்தம்மை மயக்கமாகச் சாய நேர்ந்தபோது, சுவாமிகள் அவரது கைகளைப் பிடித்துமெல்லஉட்காரவைத் தது போன்றிருந்தது. அப்படியே அமர்ந்திருந்து மயக்கம் தெளிந்ததும் சுவாமிகளைக் காணுது, 'இப்போது என் கை களைப் பிடித்து அமரவைத்த சுவாமிகள் எங்கே? யென்று எல்லோரையும் கேட்கலாயினர்.

இம்மாதிரி நிகழ்ச்சிகள், தெரிந்த அளவிலேயே ஏராள மாக இருக்கின்றன. தெரியாதன இன்னும் எவ்வளவோ உண்டு. அவை யாவற்றையும் இங்கு எழுதுதல் அடியார்க் கும் மற்ருர்க்கும் அன்பைப் பெருக்கி உறுதியை மிகுத்துமா ளுலும், இடங்காணுது விட்டு விடவேண்டியிருக்கிறது. கனவிலும், நனவிலும் காட்சி கொடுத்து, வந்த ஆபத்து கள் இந்த இந்த வேளையில் நீங்கும் என்று, அடியவர்களுக் குத் தைரியம் கூறியருளிய சமயங்களும் எத்தனையோ உள்ளன. எவ்விதமான அச்சந்தரு நிலையும் குருநாதரது தியானத்தால் எதிர்பாராதபடி நீங்கித் தெளிவு ஏற்பட்ட தகவல்களும் அளவுகடந்தன.

### iii வளம் பெறு வாழ்வு

சட்டத்தை ஏற்றுச் சரிவர நடந்துவரும் அடியவர்கள், அவர்களும் எதிர்பாராதபடி மற்ருரும் மதிமயங்கும்படி, நாளடைவில் வளம்பெற்ற வாழ்வையும் உரம்பெற்ற திற மையையும் உறுவாராயினர். சுவாமிகளைத் தரிசிக்கும் போதோ, சட்டம் எடுக்கும்போதோ, வயிருர உண்பதற்கும் உணவு சாலாது வருந்திய வறிய

வர்களும், தாங்கள் கோராமலேயே, தங்கள் முயற்சிக்கும் மேலாக, நிரம்பிய செல்வந்தர்களாக, நிலம் புலம் நிறைந்த வர்களாகப், பெரு வாழ்வு வாழ்ந்துவருவதைப் பிற அடிய வர்களும் அல்லாரும் கண்டு அதிசயிப்பர். ஆண்டவனது அந்தண்மையை அகத்தெண்ணி அன்பு ஊறப்பெறுவர். ஏற்கனவே, பணமும் பாரும் படைத்த பாங்குடையாரும், சுவாமிகளின் ஆசிகளால், சட்டத்தின் பெருமையினுல், ஒரு குறைவுமின்றிப் பலநலமும் பொருந்தி, மேலும் மேலும் சிறந்து வாழ்ந்து வருவதையும் அனைவரும் பார்த்து அவன் அருளை வியப்பர். "சட்ட அநுஷ்டானமுடைய அடியவர் யாவரும் இம்மையில் எவ்வித இடர்ப்பாடும் இல்லாத இன்ப வாழ்க்கை வாழ்ந்து, மறுமையில் மாபெரும் பேறு பெறுவர் என்பது திண்ணம்" என்னும் சுவாமிகள் வாக்குப் பொய்யாகுமா? நலஞ்சிறந்தாரின் பேரையும் ஊரையும் கூறும் பெரும்பட்டி, இங்கு அமைக்க இடம் போதாது. அடிய வர்களைச் சேவை செய்யவும், அவர்களது வரலாறுகளை வாயாரக் கூறக் காதாரக் கேட்கவும், நேர்கின்ற அன்பர் கள், உளம் மறைந்து உறையும் உடையவன் அருளால் வளம்பெறு வாழ்வு யார் யாருக்கு, எப்படி எப்படி, வந்த தென்னும் வாய்மையை அறிந்து உவக்கலாகும்.



# IX

# போலிச் சுவாமிகளும் பொய் அடியவர்களும்

## 1 போலிச் சுவாமிகள் தோற்றம்

சுவாமிகளது திருவருள் விலாசம் விளைத்துவரும் அற்புதங்களையும் நற்செயல்களையும் அறிய வந்த அனைவரும், சுவாமிகளது திருநாமத்திலும், அப்பெயரால் தரப்பெறும் விபூதியிலும், பெரு நம்பிக்கை வைக்கலாயினர். அவரவர்களின் ஆசைகளையெல்லாம் அவற்ருல் நிறைவேற்றிக் கொள்ளலாம் என்றும், குறைகளையெல்லாம் போக்கிப் போடலாம் என்றும், உறுதி பூணலாயினர். ஆனுல் அவர்களுக்குச் சுவாமிகளின் கொள்கைகளை உள்ளன உள்ளபடி எடுத்துக் கூறுவாரும், உயர்நெறிக்கு வழி காட்டுவாரும் அருகில்லை.

மக்களது மன நிலையையறிந்த சிலபேர்வழிகள், அவர்களை ஏமாற்றிப் பொருள் பறிப்பதற்கு இதுவே சமயம் என்று எண்ணி, மாகாணத்தின் பலபாகங்களிலும் தனித் தனியே முயற்சி செய்யலாயினர். ஊருக்கு வெளியிலேயோ, ஊர் நடுவேயோ, வசதியான இடங்களை அமைத்துக் கொண்டு, சுவாமிகளுடைய உண்மைத் திருநாமத்தைப் பொய்ம்மைக் கரவுள்ளத்தால் அறிக்கைகளில் அச்சிட்டு வழங்கியும், விதவிதமாக விளம்பரம் செய்தும், சிலசில இடங்களில் தாமே 'இரெட்டியப்பட்டி சுவாமிகள்' என்று ஏமாற்றியும், ஏழை மக்களை, எளிய மனங்களை, ஏராளமாகக் கூட்டி, முற்றத் துறந்து முழு அருள்பெற்ற அடியவர் போலப் பாசாங்குக் காட்டி, விபூதி கொடுத்துச், சுவாமிகள் கட்டளைக்கு மாருக, உண்டி வைத்து ஊதியம் பெறலாயினர். நடவடிக்கை தவறி நலங்கெடுக்கலாயினர். காணிக்கை பெற்றுக் கடிதிற் பொருள் குவித்தனர்.

## 2 பொய்யடியவர் ஏமாற்றம்

பிணியுள்ளவரும் அணிவேண்டியவரும்,பேயுள்ளவரும் சேய் கோரியவரும், திரள் திரளாகப் போய்த் திரவியத்தைத் தொலைத்து வந்தனர். இயற்கையாகவோ, நம்பிக்கையினுலோ நலமாகக் கூடிய வெகு சில குறைகளே செம்மையாகி வந்தன. அவை கண்டு, மேலும் பலர் போலிச் சாமிகளுக்குக் கப்பங்கட்ட முற்பட்டுப் போயினர்.

அவ்வாறு சென்றவர்கள் பலருக்கும் சுவாமிகளின் உண்மை நெறியும் சட்டத்தின் சவிஸ்தாரமும் தெரியாதது ஒரு குறை; உலகச் சிறு அல்லல்களையோ, பிறருக்குக் கெடுதி உண்டாக்கும்கோரிக்கைகளையோமனத்து எண்ணி ஓடினது பெருங்குறை. எனவே, அவர்கள் சுவாமிகளின் சட்டத்தாலும், சுவாமிகளது திருநாமம் சொல்லித் திருநீறு பூசும் திட்டத்தாலும், பெறக்கூடிய பலனைப் பெறமுடியாது போயிற்று. கைப்பொருளையிழந்து கவலையுற்றுப் போனார்கள். ஏமாந்தவர் என்று ஏசப் பெறலானார்கள்.

## 3 உண்மை உணரா உரை

சுவாமிகளை நேரே காணாதும், சுவாமிகளதுசட்டத்தின் பிரபாவத்தை நல்லடியார் வாயிலாய் அறியாதும் கிடந்த அறிஞர்கள், மாகாணம் எங்கணும் மயல் விளைத்து வந்த இப்போலிச் சாமிகளையும் பொய்யடியவர்களையும் கண்டு விட்டுச் சுவாமிகளைப் பற்றியும், அவர்களது கொள்கைகளைப் பற்றியும், மிகவும் குறைவான எண்ணங்கொள்ளலானார்கள். எல்லாம்வல்ல உடையவன் கணக்கை, நடத்த வந்த சுவாமிகளையும் உண்மை யடியார்களையும், வயிறு வளர்க்க வழி தேடியவர்களென்றும், ஏமாற்றிப் பொருள் பறிப்பவர்கள் என்றும், ஒழுக்கம் அற்ற கூட்டத்தார் என்றும், பேய் ஓட்டும் பில்லி சூனியக்காரர் என்றும், மந்திரவாதிகள் என்றும், தந்திரக்காரர்கள் என்றும், மயங்கிக் கூறலானார்கள். பின்னராவது சுவாமிகளையோ, சுவாமிகளின் கொள்கைகளின் சிறப்பையோ, அவற்றை அநுஷ்டிக்கும் அடியார்களையோ, அவ்வறிஞர்கள் அறிய நேர்ந்திருக்குமானால், அவர்களது தவறான எண்ணத்தை அவசியம் மாற்றிக் கொண்டிருப்பார்கள். அப்படியல்லாமல் அவர்களது வாழ்க்கையிலே நாளது வரையில் அத்தகைய வாய்ப்பு அவர்களுக்கு நேராது போயிருக்குமாயின், அவர்கள் முன்கொண்ட தப்பெண்ணத்தையே இன்னமும் கொண்டு வருவார்கள்.அன்னவர்களும், அன்னவர்கள்பால் அத்தவறான எண்ணத்தை ஏற்றவர்களும், உண்மை யுணர்தற்காகவே இப்பகுதி இங்கே எழுதப் பெறுவதாயிற்று. இன்றேல், போலிச் சாமிகளைப் பற்றியாவது பொய்யடியார்களைக் குறித்தாவது;இங்குக்கூறவேண்டியஅவசியம்இல்லை.

# X

# ஆண்டவர் மறைவும் அடியவர் வழிபாடும்

## 1 அடியார்க்கு அறிக்கை

சுவாமிகள் மறையும் காலத்தை அடியவர்களுக்குப் பல வகையால் அறிவுறுத்தினுர்கள். உடையவன் கணக்கு முடியும் நேரம் நெருங்கி வந்ததும் அடியார்களைப் பல ஊர்களில் நேரே காணும்போது, சுவாமிகள், நேரப்போகும் நிலையை, அடியார்களுக்குக் குறிப்பாக உணர்த்தி வந்தார்கள். அப்போது சுவாமிகள் கூறிய அச் சொற்களுக்குப் பொருள் தெரியாதிருந்த அடியவர் பலர்,பின்னிட்டுஅறிந்து எண்ணி எண்ணி ஏக்கமுற்றனர். கடைசியாக, எதிர்கால வாழ்வில் எச்சரிக்கையாயிருந்து, உடையவன் பற்றை உறுதியாகக் கொண்டு, தூய வாழ்க்கை நடத்திவரும்படி அடியவர்கட்குச் சுவாமிகள் எழுதுவித்தார்கள். எல்லாம் வல்ல எந்தை, தம் திருமேனி மூலமாக அருள் வழங்க, அது வரை போல், பலர் காண, நேரே வாரார் ஆதலின். அடியவர்கள் ஒருவருக்கொருவர் அடிக்கடி கலந்து, அந்தரங்கமாக ஆண்டவன் அருள் புரிந்து வரும் விதத்தை அளவளாவிச், சட்ட நெறியை உலகு எங்கணும் விளக்கி வரவேண்டும் என்று அறிவித்தார்கள்.

ஆங்காங்கு இருந்த அடியவர்கள், சுவாமிகளது சமீப நிலையை இன்னதெனஅவரவர்களது நிஷ்டையில் அறிந்து, நீள நினைந்து, ஏங்கலாயினர். சுவாமிகளே அடியவர்களது நிஷ்டையில் காட்சி கொடுத்து, "சாமி தங்கியிருக்க ஓர் இடம் கொடுக்குமா?" என்று ஒரு முறையும், "சாமிக்கு இடம் கிடைத்துப் போச்சு," என்று அடுத்தபடியும், எப்போதும் போன்ற உற்சாகத்துடன், உல்லாசப் பேச்சாகத் தெரிவித்ததையும் எண்ணி,எண்ணி அடியவர்கள் சிந்திக்கலாயினர். என்ருலும் பெருவாரியான அடியவர்களுக்குத் தெளிவாக இன்னதுதான் இவ்வளவு சமீபத்தில் நேரப் போகின்றதென்று தெரியாமலே இருந்தது.

## 2 நிருவிகல்ப நிஷ்டை

முதல் நிருவிகல்ப நிஷ்டை இரெட்டியப்பட்டியில் தொடங்கிப் பொதிகையில் முடிந்தது அறிந்திருக்கிறோம். இரண்டாவது, மேல் இலந்தைக்குளத்தில் திரு. திருவடியாப் பிள்ளை இல்லத்தில் நிகழ்ந்தது. மூன்றுவது நிஷ்டை மறுபடியும் இரெட்டியப்பட்டியிலேயே ஏற்பட்டது. சுவாமிகள் பல நாள்கள் உண்ணுமல் மௌனமாக இருந்து வந்தார்கள். அந்த நிலையில் சுவாமிகளது திருமேனியின் இளைப்பைக் கண்டால் உள்ளம் நையும். நிஷ்டையின் முதற் பகுதியிலே அடியவர்கள் சுவாமிகளுடைய நிலையறியாமல், சிற்சில இடங்களுக்கு அழைத்தார்கள். சுவாமிகளும் அருள் மிகுதியால்சென்று வந்திருக்கிறுர்கள். ஆனுல் நிருவிகல்பத்தின் பிற்பகுதியிலே சுவாமிகள் வெளியேயெங்கும் போகவில்லை. இரெட்டியப்பட்டியிலேயே தங்கிவிட்டார்கள். அப்போது சுவாமிகள் அவதரித்து அறுபத்து ஆறு ஆண்டுகள் ஆயிருந்தன.

## 3 பிறப்பிடமே மறைவிடம்

துந்துபிஹூ மார்கழிமீ இருபத்தெட்டாந் தேதி சுக்கிர வாரம், ஏகாதசி திதி, அனுஷ நக்ஷத்திரம், இரவு நான்கு மணிக்குச் சுவாமிகளது திருமேனியைக் கோயிலாகக் கொண்டு வெளி முகமாக அருளாட்சி புரிந்து வந்த ஆண்டவனேடு சுவாமிகள் இரண்டறக் கலக்கவே, அக்கோயிலிலேயே உள் முகமாக அசைவற்று உடையவன் அமர்ந்தருளத் திருவுளங் கொண்டான். அருகிருந்து தரிசித்து வந்த அடியவர்களது மனநிலையை எழுத வொண்ணுது. வெளியிலிருந்த அடியவர்களுக்குத் தந்திகளும் கடிதங்களும் உடனே அனுப்பப் பெற்றன.

சுவாமிகள் எந்த இடத்தில் தாயார் வயிற்றினின்றும் தரைமீது எழுந்தருளினுர்களோ, அதே யிடத்தில் தங்கின படியே, ஆண்டவனேடு மறைந்தருளியது எல்லோருக்கும் வியப்பாக இருந்தது. அந்த இடத்தில்தான் சுவாமிகள் இளமைக் காலத்தே விநாயகரை வைத்துப் பூசை செய்திருக்கிறுர்கள் என்பதும், மறுபடியும் அதே இடத்திலேயே வேலினை வைத்து வழிபட்டு இருக்கின்றுர்கள் என்ப

தும், மறைந்துவிட்ட அவ்வேல் பிற்காலத்தில் செட்டி நாட்டுக் கீழச் சிவல்பட்டி திரு. வெ. நா. கி. சிகப்பியாச்சி யின் கனவில் தோன்றியபடி அதே இடத்தில்தான் மண் கீழிருந்து கிண்டி எடுக்கப்பட்டதென்பதும், வியப்பை மேலும் பெருக்குவதாயிருந்தன.

## 4 திருமேனித் திருக்காப்பு

ஆண்டவர் மறைந்தஅதேஇடத்திலேயே,திருமேனித் திருக்காப்பு செய்ய ஏற்பாடு பண்ணினர். மாகாணத்தின் பல பாகங்களிலிருந்தும் திரள் திரளான அடியவர்கள், அகநெக்கு அன்புருகிஆற்ருது வந்து சேர்ந்தனர். மறைந்த ஐந்தாம் நாள், அதாவது, தை மாதம் மூன்ரும் தேதி செவ்வாய்க்கிழமை அமாவாசை திதி பூராட நட்சத்திரம் மாலே ஆறு மணிக்கு, மஹா அபிஷேக அலங்கார ஆராதனே களுடன், திருமேனி திருக்காப்புச் செய்யப் பெற்றது.

## 5 ஆலய அமைப்பு

திருக்காப்பின்மீது ஆலயம் அமைக்க அடியவர் தீர்மானித்தனர். ஊருக்கு மத்தியில் விசாலமாக அமைந்து இருந்த சுவாமிகளின் குடும்பத்தருடைய வீடும், அந்த வாடை மொத்தமுமே, முன்பொரு சமயம், சுவாமிகள் வெளிகளிலே அருளாட்சிசெய்துவந்தகாலத்திலே, தீயினல் முழுதும் பழுதாய் விட்டிருந்தன. புதுப்பித்து வைத்த வீடு மறுமுறையும் தீக்கிரையாயிற்று. சுவாமிகள் இரெட்டியப் பட்டிக்குச் சென்றபோது, தீ விபத்து நேர்வதற்குக் காரண மாயிருந்த பேர்வழி, தானே நேரே சுவாமிகளிடம் வந்து, தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு, மன்னித்தருள வேண்டி ஞன். அவன் அவ்வாடையில் ஒருவர்மீது கொண்ட பகை மையைத் தீர்த்துக்கொள்ள எண்ணி, அவர் வீட்டுச் சோளப் படப்பிலே வைத்த நெருப்பானது, அவனது எண்ணத்துக்கு அப்பாலும் சென்று, வாடையிலுள்ள எல்லா வீடுகளேயும் கொளுத்திவிட்ட உண்மையை அப்போதுதான்அவன்வாயிலாகச் சுவாமிகள் திருமுன்னர், எல்லோரும் அறிந்தனர். அவனது அறியாமைக்கு இரங்கி, அவனுக்கு ஏதும் தீது செய்தலாகாது எனக் கட்டளேயிட்டுச், சுவாமிகள், “இப்படி நடந் ததும் உடையவன் கணக்கே,” என்று சொல்லி



இரெட்டியப்பட்டியிலுள்ள ஸ்ரீ குருநாதரது சந்நிதானம்.
5-ம் ஆண்டு குருபூசையின்போது அடியவரோடு எடுத்த படம்.



மதுரை வைகை நதிக்கரையில் சுவாமிகளுக்கு அருட்காட்சி
யளித்த ஸ்ரீ பரிபூரண விநாயகருக்கு அமைத்த ஆலயம்.

தும், மறைந்துவிட்ட அவ்வேல் பிற்காலத்தில் செட்டி நாட்டுக் கீழச் சிவல்பட்டி திரு. வெ. நா. கி. சிகப்பியாச்சி யின் கனவில் தோன்றியபடி அதே இடத்தில்தான் மண் கீழிருந்து கிண்டி எடுக்கப்பட்டதென்பதும், வியப்பை மேலும் பெருக்குவதாயிருந்தன.

## 4 திருமேனித் திருக்காப்பு

ஆண்டவர் மறைந்தஅதேஇடத்திலேயே, திருமேனித் திருக்காப்பு செய்ய ஏற்பாடு பண்ணினர். மாகாணத்தின் பல பாகங்களிலிருந்தும் திரள் திரளான அடியவர்கள், அகநெக்கு அன்புருகிஆற்ருது வந்து சேர்ந்தனர். மறைந்த ஐந்தாம் நாள், அதாவது, தை மாதம் மூன்ரும் தேதி செவ்வாய்க்கிழமை அமாவாசை திதி பூராட நட்சத்திரம் மாலே ஆறு மணிக்கு, மஹா அபிஷேக அலங்கார ஆராதனே களுடன், திருமேனி திருக்காப்புச் செய்யப் பெற்றது.

## 5 ஆலய அமைப்பு

திருக்காப்பின்மீது ஆலயம் அமைக்க அடியவர் தீர்மானித்தனர். ஊருக்கு மத்தியில் விசாலமாக அமைந்து இருந்த சுவாமிகளின் குடும்பத்தாருடைய வீடும், அந்த வாடை மொத்தமுமே, முன்பொரு சமயம், சுவாமிகள் வெளிகளிலே அருளாட்சிசெய்துவந்தகாலத்திலே, தீயினுல் முழுதும் பழுதாய் விட்டிருந்தன. புதுப்பித்து வைத்த வீடு மறுமுறையும் தீக்கிரையாயிற்று. சுவாமிகள் இரெட்டியப் பட்டிக்குச் சென்றபோது, தீ விபத்து நேர்வதற்குக் காரண மாயிருந்த பேர்வழி, தானே நேரே சுவாமிகளிடம் வந்து, தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு, மன்னித்தருள வேண்டி ஞன். அவன் அவ்வாடையில் ஒருவர்மீது கொண்ட பகை மையைத் தீர்த்துக்கொள்ள எண்ணி, அவர் வீட்டுச் சோளப் படப்பிலே வைத்த நெருப்பானது, அவனது எண்ணத்துக்கு அப்பாலும் சென்று, வாடையிலுள்ள எல்லா வீடுகளேயும் கொளுத்திவிட்ட உண்மையை அப்போதுதான் அவன்வாயிலாகச் சுவாமிகள் திருமுன்னர், எல்லோரும் அறிந்தனர். அவனது அறியாமைக்கு இரங்கி, அவனுக்கு ஏதும் தீது செய்தலாகாது எனக் கட்டளேயிட்டுச், சுவாமிகள், "இப்படி நடந் ததும் உடையவன் கணக்கே," என்று சொல்லி



இரெட்டியப்பட்டியிலுள்ள ஸ்ரீ குருநாதரது சந்நிதானம்.
5-ம் ஆண்டு குருபூசையின்போது அடியவரோடு எடுத்த படம்.



மதுரை வைகை நதிக்கரையில் சுவாமிகளுக்கு அருட்காட்சி
யளித்த ஸ்ரீ பரிபூரண விநாயகருக்கு அமைத்த ஆலயம்.

யிருந்தார்கள். அவ்வாறு தீயால் மறைந்த வீட்டை மறுபடியும் புதுப்பிக்கும எண்ணத்திலேயே காலம் போய் விட்டிருந்ததேயல்லாமல்,அவ்வெண்ணம் செயலாகவில்லை. தற்காலிகமாக இருப்பதற்கு, ஒரு புறத்தில் சிறு வீடு மாத்திரமே அமைத்துக் கொண்டிருந்தார்கள். எனவே, சுவாமிகள் திருமேனி மண்மீது உதித்த இடம் வெற்றிடமாகவே இருந்து வந்தது.

இருக்கவே, அவ்விடத்தில் திருமேனித் திருக்காப்புச் செய்யவும், அதன்மீது ஆலயம் அமைக்கவும், ஏதும் இடைஞ்சல் இல்லாமல் நேர்ந்தது. ஊராரும் சுவாமிகள் விஷயத்தை யறிந்தவர்களாதலின் சுற்றிலும் வீதிகள் அமைய ஊர் நடுவே அவ்வாறு செய்யத் தடையொன்றும் கூறவில்லை. ஏற்கனவே அங்கொரு ஆசிரமம் அமைக்க வேண்டும் என்று அடியவர் சேகரித்து வைத்திருந்த பொருளைக் கொண்டு, ஆலயம் அழகிதாக ஆக்கப்பெற்றது. ஆலயம் அமைப்பதற்கு, முப்பது மைல் தொலைவிலிருந்து கருங்கல் கொண்டு வரும்போது வழியில் ஒரு வண்டியின் அச்சு முறிந்து போயிற்று. அவ்வண்டியில் அமர்ந்துவந்த ஆலயப் பணியாற்றும் அன்பிற் சிறந்த அடியவர் வாணியம்பாடி திரு. சி. மு. முனியப்ப செட்டியார், வண்டிக்காரர் உண்மை கூறியும் கேளாது, ஆண்டவர் அருளில் வைத்த நம்பிக்கையினால் அப்படியே ஓட்டச் சொன்னார். ஆலய இடத்தண்டை வந்த பின்புதான் வண்டி விழுந்தது. கல்லும் சிதையாமல் கீழே நழுவிற்று. வண்டிக்காரரும் அக்கம் பக்கத்தாரும், ஆச்சரியம் என ஆண்டவர் அருளை வியந்தனர்.

மூலத் திருவுருவம் கருஞ்சலவைக்கல்லினாலும், உற்சவ மூர்த்தம் உயர் பஞ்சலோகத்தினாலும், மிக்க அருமையாகச் செய்விக்கப் பெற்றன. சுவாமிகளை நேரில் காணும் பேறு பெருதவர்கள், இத்திருவுருவங்களைத் தரிசித்தே சுவாமிகளது உண்மைத் திருமேனியின் தெய்வப் பொலிவை ஒருவாறு அறிந்து கொள்ளலாம்படி, அம்மூர்த்தங்கள் அவ்வளவு அற்புதமாக ஆக்கப் பெற்றிருக்கின்றன.

## 6 வந்தனை வழிபாடு

நாடோறும் காலை மாலை வழிபாடு செய்யச், செட்டி நாட்டுப் பெரும் வள்ளல், அரனடியடைந்த திவான்பகதூர்: தர்மபூஷணம் திரு. தீ. நா. முத்தைய செட்டியாரும்,

மற்றொரு செட்டி நாட்டு அடியவரும், நிரந்தரமான ஏற்பாடு செய்திருக்கின்றனர். விசேஷ நாள்களில் விசேஷ பூசைகளுக்கும் நிவேதனங்கட்கும் வேறு பல அடியவர்கள் திட்டம் வகுத்திருக்கின்றனர். திருவுருவங்கட்கு வெள்ளிக் கவசங்களும், திருமஞ்சனத்திற்கு வெள்ளிக் குடங்களும் செய்து வைக்கப் பெற்றிருக்கின்றன.

ஆண்டுதோறும், மார்கழி மாதம் கிருஷ்ணபக்ஷம் அனுஷ நட்சத்திரத்தில் சுவாமிகளுக்குக் குருபூசை நடந்து வருகிறது. அதே நாள் நாட்டின் பல பாகங்களிலும் அடியவர்களால் குருபூஜை விழா கொண்டாடப் பெறுகின்றது. குருநாதர் அவதரித்த நாளாகிய புரட்டாசி மாதம் சுக்கிலபக்ஷம் ரேவதி நட்சத்திரத்தன்றும் விசேஷ பூசை சந்நிதானத்தில் நடைபெறும். அன்று ஆங்காங்கு அடியவர்களால் விழாவும், திருவெண்ணெய் நல்லூருக்கு அடுத்த திருச்சாத்தனூரில், சுவாமிகள் ஆசீர்வதித்து வாக்களித்தபடி, திருஅருட்கொடியேற்ற வைபவமும், பல இடங்களில் ஒவ்வொரு மாதக் கடைசி வெள்ளியன்று வீதிவல உற்சவங்களும் நடந்தேறி வருகின்றன.





திருச்சாத்தனூரில் 1—10—1936ல் திரு. மு. முத்துராம ரெட்டியார் மாளிகையின்மீது சுவாமிகளது அருட்கொடி ஏற்றியபோது நடந்த 80-வது ஆண்டு விழா.



திருச்சாத்தனூரில் 1—10—1936ல் திரு. மு. முத்துராம ரெட்டியார் மாளிகையின்மீது சுவாமிகளது அருட்கொடி ஏற்றியபோது நடந்த 80-வது ஆண்டு விழா.

# XI

## என்றும் வழிகாட்டும் எந்தை குருநாதர்

### 1 மறைந்தும் அருளும் மகிமை

ஊனக்கண்ணுக்குப் புலனுகாதபடி, உலகினுக்குத்தெரியாதபடி, குருநாதர் மறைந்தருளினுர்கள் ஆனுலும், அன்று போல் இன்றும், நிஷ்டை நேரங்களில் அடியவர்களுக்குக் காட்சி கொடுத்து, அவர்களின் வாழ்க்கையையும், அவர்களை அடைந்தாரின் வாழ்க்கைகளையும், மிகத் தூய்மையாக நடத்திச் செல்வதற்கு வேண்டிய உபதேசங்களைச் செய்து வழிகாட்டிக் கொண்டே போகின்ருர்கள். அக்காலத்தைக் காட்டிலும் இக்காலத்தில், அடிக்கடியும், மிக்க விழிப்போடும் உரிமையோடும், குருமூர்த்தி கருணை பாலித்து வருவதை அடியவர்கள் ஒவ்வொருவரும் அகமார உணர்ந்து, அவரன்பின் பெருமையை அதிசயித்துப் போற்றி செய்கின்றனர். குருநாதரை மறுபடியும் எப்போது சேவிக்கப் போகின்ருேம் என்ற ஏக்கமே அடியவர்களுக்குத் தோன்ருத வண்ணம், அவர்களுக்கு, உடையவன் என்றும் உடன் வாழும் ஏற்ற பெருந்துணையாக இருந்து வருவதை, எண்ணி எண்ணி மகிழ்கின்றனர்.

குருமூர்த்தியின் திருவருளினுலே, திருநீறும் தீர்த்தமும் கொண்டு, அடியவர், தங்களுக்கும் பிறர்க்கும், முன்னர் தாங்களே செய்து கொண்டிருந்த நலங்களைக் காட்டிலும் பன் மடங்கு நன்மைகளை இப்போது செய்துகொள்ள இறைவன் இசைந்துஉதவுவதைஇனிக்க நினைத்துஇன்புறுகின்றனர். குருநாதரின் திருவுருவப்படத்தை வீடுகள் தோறும் வைத்து விடியலும் மாலையும் விரும்பிப் பூசை புரிகின்றனர். வாழ்க்கையில் பிணியாலும் பிறவற்ருலும் தங்களுக்கும் மற்ருர்க்கும் துன்பம் நேர்கின்ற காலங்களிலே,குரு சுவாமியை நேரில் கண்ட காலத்தில் செய்தது போல, அவர்களது திருவுருவத்தைக் கொலுவில் அமர்த்திக், குவிந்த அன்போடு பூசித்து, வலம் வந்து வழிபட்டுக்குறையிரந்துகும்பிடுகின்றனர். வந்த இடர் அனைத்தும், தொந்தமற ஒழிதல் கண்டு, உடையவனின்இன்னருளைஉருகித்துதித்துஉவக்கின்றனர்

## 2 அனைவரை ஆளும் அருமை

குருநாதரது அருள் விலாசம், ஏற்கனவே அடியவரா யுள்ளவர் பாலே யல்லாமல், அனைவர் பாலும் மடைதிறந்து பாய்கிறது. ஆண்டவன் அமரும் அருங்கோயிலாக அவதரித்த அவர்கள், மறைந்து இருந்தும், அருளால் ஆளும் பெருந் தொழிலை இன்றும் நடத்திக்கொண்டுதான் வருகின்றார்கள். குருமூர்த்தி அருள்வாக்கு அளித்துச்சென்றபடி, சட்டத்தின் வைபவம் நாளுக்கு நாள் விளக்கமுற்றுவருகின்றது. ஆண்ட வர் நாமம்கூறி அடியவரால் தரப்பெறும் விபூதியும் தீர்த்த மும், நீக்காத நோயில்லை, போக்காத குறையில்லை, ஆக் காத நலனில்லை, சேர்க்காத பலனில்லை. ஓர் அறிவு படைத்த உயிர் முதல், ஆறறிவு பெற்ற உயிர் ஈறாக, எல்லா ஜீவராசி களுக்கும் ஆண்டவர் ஆணை அருள் பாலித்து வருகின்றது.

உடையவன் சட்டத்தின் உயர்வினை யறிந்து, சட்ட அனுஷ்டானத்தில் தீவிரப் பற்றுடன், பலப்பல புதிய அடிய வர்கள் சேர்ந்துகொண்டே வருகின்றனர். அவர்களில் பெரும்பாலோர் சுவாமிகளை நேரே தரிசிக்காதவர்கள். சுவாமிகளது திருநாமத்தைக்கூட், சட்டத்தில் சேர்வதற்கு முன் வரையில், கேட்டிராதவர்கள். என்றாலும் உடையவனி டம் உறுதியுடன் சட்டத்தைச் சிறிது அளவு மேற்கொண்டு விட்ட பின்னர், பையப்பைய அவர்கள் முழு அளவையும் கடைப்பிடித்து ஒழுகும்படிக்கு ஆண்டவர் அற்புதமாக அவர்களுக்கு அருள்புரிந்து செல்லும் முறையைக் கண்டு, அவர்கள் அளவுகாணா மகிழ்ச்சி யடைவதோடு, மேலும் புதிது புதிதாக அடியவர்கள் சட்டத்தில் சேர்வதற்கும் அவர்களே வழிகாட்டிகளாகவும் இருக்கின்றனர்.

உயர்ந்த சர்க்கார் உத்தியோகங்களிலே யுள்ளவர்கள், பிற உத்தியோகங்களிலே இருப்பவர்கள், பெருத்த வியாபாரிகள், சிறந்த மிராசுதாரர்கள், நகரங்களிலே வாழ்ப வர்கள், கிராமங்களிலே குடியிருப்பவர்கள், பணக்காரர்கள், ஏழைகள், உயர் குலத்தார் என்பவர்கள், தாழ்குலத்தார் என்பவர்கள், பலரும், சுவாமிகளது பெயரைப் புதிதாகக் கேட்டு, சுவாமிகளது சட்டத்தின் பெருமையைப் புதிதாக அறிந்து, விடியல் எழுந்துபச்சை நீராடுவதும், உடையவனை வழிபடுவதும், விபூதியும் தீர்த்தமும் கொள்வதும், எத்த கைய கடுமையான பிணி வந்தாலும் எள்ளளவும் அஞ்சாது

எந்தை யருளில் நம்பிக்கை நாட்டிப், பச்சை நீர்ப் பழக்கத்தைக் கைவிடாது, திருநீறும் தீர்த்தமுமே துணையென நின்று, பார்த்தோர் வியக்கும்படி, சிறிதும் பழுதிலலாது சிறப்புடன் வாழ்வதும் காணும்போது, குருநாதரது அருள் அன்றுபோல் இன்றும் அனைவர்க்குமென நிலவி வருவது அங்கை நெல்லியெனப் புலனாகும்.

"சுவாமிகள் நேரே இருந்து அருள் புரிந்த காலத்திலே தான், அற்புதமாக நோய்கள் நீங்கின, பச்சை நீர்ப் பழக்கத்தால் பழுது ஏதும் வராது இருந்தது, சுவாமிகளை நேரிலே சேவித்து அவர்களுடைய ஆசீர்வாதங்களைப் பெற்ற அடியவர்கள் ஒரு வேளை இன்றைக்கும் சுவாமிகள் சட்டத்தின்படி ஒழுகும் உறுதி பெற்றிருக்கலாம், ஆனால் இக் காலத்தில் புதிதாக எவரும் சட்டத்தில் சேர்வாரானால் ஒரே நாளில் உடம்பைக் கெடுத்துக்கொள்ள வேண்டியது தான், எட்ட இருக்கும் எமனைக் கிட்டே அழைத்துக் கொள்ள வேண்டுவதுதான், அறிவுள்ள எவர்தான் இப் போது சட்ட அநுஷ்டானத்தை ஏற்று நடந்து நலமுடன் இருக்க முடியும்?" என்றெல்லாம் சட்டத்தில் சேராத அன்பர்கள் பலர் எண்ணலாம்.

ஆயின் அந்த அன்பர்கள், இன்றைக்குச் சட்டத்தில் சேர்ந்த புது அடியவர்கள்கூட, சட்ட அநுஷ்டானத்தால் பெற்றுவரும் பெரும் பலன்களை ஒருமுறை கண்ணுறுவார்களானால், அவர்களது எண்ணத்தை அவசியம் மாற்றிக் கொள்ள வேண்டியவர் ஆவார்கள். கடுமையான காய்ச்சல், மும்முரமான அம்மை, கொல்லும் விஷபேதி, குறைத்து அழிக்கும் குஷ்டம், ரத்தம் வடியும் ரணம், எலும்பு நரம்பு முறிவு, முதலிய எத்தகைய பயங்கரமான பிணிகள் நேர்ந்தாலும் சரி, சிறிதும் கலக்கம் அடையாமல், விடியல் நீராட்டத்தை விடாமல், மருந்தென்பதை மனத்தும் எண்ணமல், அருள் நீறும் தண்ணீருமே அருந்தி, நோய் முழுவதும் ஆச்சரியமாக நீங்கப்பெற்று, செம்மையுற்றுச் சிறந்து வருவதைப் பார்க்கும்போது, நம்பிக்கை கொள்ளாது இருந்த அந்த அன்பர்கள்கூட,எப்படிஅவர்களுடைய தப்பெண்ணத்தைத் தவிர்த்துவிட்டு நம்பிக்கை பூணமல் போக முடியும்? தீராத மனக் குறைகள் தீர்ந்தும், வாராத நலங்கள் வரப்பெற்றும், புது அடியவர்களும் வளம் பெற

வாழ்வதைக் கண்ணாரக் காணும்போது எவ்வாறு சுவாமிகளின் சட்டத்தில் நம்பிக்கை கொள்ளாது இருக்க இயலும்?

முதலில் சந்தேகங்கொண்டு இருந்து, சட்ட அனுஷ்டானத்தில் உள்ளவர்களைச் சரிவர கவனிக்காமையினாலேயே அவர்களை ஏசியும் நகையாடியும் வந்து, அறிவற்றவர்கள் என்றுகூட அவர்களை எண்ணியும்சென்றிருந்த, அன்பர்கள் பலர், அடியவர்களுக்குச் சட்ட அநுஷ்டானத்தால் உண்டாகும் உண்மை நன்மைகளை நேரே ஒருமுறை பார்த்துவிட்ட பிறகு, 'அம்ம! அம்ம!' என்று அதிசயித்து உடையவன் அருளில் உறுதி சிறிது கொண்டு, சட்டத்தின் முதற்படியிலே கால் வைக்கின்றனர். வைத்ததுமே பையப் பைய அந்த அன்பர்களே சட்டத்தின் பல படிகளையும் எளிதில் ஏறுதற்கு உரிய திடமானது, அவர்களும் அறியாமலே, அவர்களுக்கு வருவதைக் கண்டு வியப்பும் உவப்பும் கொண்டுவருகின்றனர். ஆண்டவனின் அருளையறியாமலே, சட்டத்தின் மாண்பை உணராமலே, முன்னர் அடியார்களை ஏசியதையும் இழித்து எண்ணியதையும் அவர்களே நினைத்து, அவர்களது அறிவானது எவ்வளவு அளவு பட்டதாகவும் சின்னஞ் சிறியதாகவும் இருந்தது என்பதை இனிது உணர்ந்து, வெட்கமும் வெறு நகைப்பும் கொள்ளுகின்றனர்.

ஆறு அறிவுடைய மக்களுக்கேயல்லாமல், ஆடுமாடுகளுக்கும் பறவை பிறவுக்கும், நோய் நொடிகள் வந்தபோதும், புலன்களில் உள்ள பயிர்களுக்கும், தோப்புகளிலுள்ள மரங்களுக்கும், காற்றினாலும் காய்ச்சலினாலும், பிறவற்றாலும் பீடைகள் நேர்ந்தபோதும், அவை அவற்றிற்கு உலகத்தில் ஏற்பட்டுள்ள சிகிச்சைகளைச் செய்யப் போகாமல், உடையவனிடம் கொண்ட உறுதியோடு சுவாமிகள் திருநாமத்தைச் சொல்லித் திருநீறும் தீர்த்தமும் வழங்கியே அக்குறைகளையெல்லாம், இன்றுகூட, புது அடியவர்களும் நீக்கி வருவதைக் கண்ணுறும் சட்டத்தில் சேராத அன்பர்கள், சுவாமிகளது சட்டத்தில் நம்பிக்கை பூண்டு தாமும் சட்டத்தை ஏற்றுக்கொள்ள அவாவுவதில் என்ன அதிசயமிருக்கிறது? மிருக வைத்தியத்தாலும் பயிர் வைத்தியத்தாலும் தீராத அந்தநலிவுகள், ஆண்டவர் துஅருளைக் கொண்டு அடியவர்கள் தரும் திருநீறு தீர்த்தத்தால்

தீர்ந்து விடுவதைப் பார்க்கும்போது அந்த அன்பர்கள் சட்டத்தில் மேலும் உறுதி பூண்பதில்என்ன வியப்புக் கிடக்கின்றது?

சட்ட அநுஷ்டானத்திலிருக்கும் புது அடியவர்களுடைய பெயர்களையும் விலாசங்களையும், அவர்களுக்கு வந்த இன்னல்களை அவர்கள் பிறர் உதவி நாடாது சட்டம் வழுவாது இருந்தே நீக்கிக்கொண்ட அற்புதங்களையும், இங்கே எழுதுவதென்றால் இடம் போதாது. ஆனால், அவர்கள் அளவிறந்த பேராக இருக்கின்றார்கள் என்று மாத்திரம் கூறலாகும். உண்மைச் சற்குரு நாட்டம் உடையவராய், அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்னும் வாய்மையை நம்பினவராய், அவனருள் எங்கும் நிலவி, விரும்பி வேண்டுவார்க்கு வெளிப்பட்டு உதவுகிற தென்பதை யுணர்ந்தவர்களாய், இருக்கும் ஒவ்வொருவருக்கும், சுவாமிகளது சட்டத்தை ஏற்கும் பேறு கிடைக்கும் என்பது திண்ணம்.

குருமூர்த்தியை அடியவர்கள் நேரில் சேவித்த காலங்களிலே, "உடையவன் கணக்கு இப்போதேயா விளங்கி விடும்? இன்னும் போகப் போகத்தான் விளக்கமுறும்" என்றும், "அவனுடைய அருட்கொடி உலகமெங்கும் பறக்கும்" என்றும், சொல்லுவதுண்டு. "ஆண்டவரது அருளாட்சி, உலகின் மீதுள்ள மிகமிகப் பெரிய அரசாட்சிகளிலும் மேலானது, அதை நடத்தும் சிப்பந்திகளும் உத்தியோகஸ்தர்களும் அளவிறந்த பேராவர்" என்றும் கூறுவதுண்டு. இவ்வுரைகளும் இன்னன பலவும்,இப்போதுதான் கூறுவதுபோல அனைவர் காதுகளிலும் ஒலித்து ஆண்டவனது அருள் ஆட்சி ஓங்கி வளரும்வளமையை நினைவூட்டி வருகின்றன. எங்கும் நிறைந்த ஆண்டவர் அருளை, ஏற்று அநுபவிப்பதற்கு, விழைந்து உழைத்துக் கனிந்து உருகும் அகிலத்துள்ள அனைவர்க்கும், வளமையுடன் வழிகாட்ட, வான்பொருளாகிய எந்தை குருநாதர் என்றும் இருந்து வருகின்றார்.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

**வழிகாட்டும் வான்பொருள்**

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் வரலாறு

முற்றிற்று.

வாழ்வதைக் கண்ணுரக் காணும்போது எவ்வாறு சுவாமிகளின் சட்டத்தில் நம்பிக்கை கொள்ளாது இருக்க இயலும்?

முதலில் சந்தேகங்கொண்டு இருந்து, சட்ட அனுஷ்டானத்தில் உள்ளவர்களைச் சரிவர கவனிக்காமையினுலேயே அவர்களை ஏசியும் நகையாடியும் வந்து, அறிவற்றவர்கள் என்றுகூட அவர்களை எண்ணியும்சென்றிருந்த, அன்பர்கள் பலர், அடியவர்களுக்குச் சட்ட அநுஷ்டானத்தால் உண்டாகும் உண்மை நன்மைகளை நேரே ஒருமுறை பார்த்துவிட்ட பிறகு, 'அம்ம! அம்ம!' என்று அதிசயித்து உடையவன் அருளில் உறுதி சிறிது கொண்டு, சட்டத்தின் முதற்படியிலே கால் வைக்கின்றனர். வைத்ததுமே பையப் பைய அந்த அன்பர்களே சட்டத்தின் பல படிகளையும் எளிதில் ஏறுதற்கு உரிய திடமானது, அவர்களும் அறியாமலே, அவர்களுக்கு வருவதைக் கண்டு வியப்பும் உவப்பும் கொண்டுவருகின்றனர். ஆண்டவனின் அருளையறியாமலே, சட்டத்தின் மாண்பை உணராமலே, முன்னர் அடியார்களை ஏசியதையும் இழித்து எண்ணியதையும் அவர்களே நினைத்து, அவர்களது அறிவானது எவ்வளவு அளவு பட்டதாகவும் சின்னஞ் சிறியதாகவும் இருந்தது என்பதை இனிது உணர்ந்து, வெட்கமும் வெறு நகைப்பும் கொள்ளுகின்றனர்.

ஆறு அறிவுடைய மக்களுக்கேயல்லாமல், ஆடுமாடுகளுக்கும் பறவை பிறவுக்கும், நோய் நொடிகள் வந்தபோதும், புலன்களில் உள்ள பயிர்களுக்கும், தோப்புகளிலுள்ள மரங்களுக்கும், காற்றினுலும் காய்ச்சலினுலும், பிறவற்ருலும் பீடைகள் நேர்ந்தபோதும், அவை அவற்றிற்கு உலகத்தில் ஏற்பட்டுள்ள சிகிச்சைகளைச் செய்யப் போகாமல், உடையவனிடம் கொண்ட உறுதியோடு சுவாமிகள் திருநாமத்தைச் சொல்லித் திருநீறும் தீர்த்தமும் வழங்கியே அக்குறைகளையெல்லாம், இன்றுகூட, புது அடியவர்களும் நீக்கி வருவதைக் கண்ணுறும் சட்டத்தில் சேராத அன்பர்கள், சுவாமிகளது சட்டத்தில் நம்பிக்கை பூண்டு தாமும் சட்டத்தை ஏற்றுக்கொள்ள அவாவுவதில் என்ன அதிசயமிருக்கிறது? மிருக வைத்தியத்தாலும் பயிர் வைத்தியத்தாலும் தீராத அந்தநலிவுகள், ஆண்டவர்துஅருளைக் கொண்டு அடியவர்கள் தரும் திருநீறு தீர்த்தத்தால்

தீர்ந்து விடுவதைப் பார்க்கும்போது அந்த அன்பர்கள் சட்டத்தில் மேலும் உறுதி பூண்பதில்என்ன வியப்புக் கிடக்கின்றது?

சட்ட அநுஷ்டானத்திலிருக்கும் புது அடியவர்களுடைய பெயர்களையும் விலாசங்களையும், அவர்களுக்கு வந்த இன்னல்களை அவர்கள் பிறர் உதவி நாடாது சட்டம் வழுவாது இருந்தே நீக்கிக்கொண்ட அற்புதங்களையும், இங்கே எழுதுவதென்றால் இடம் போதாது. ஆனால், அவர்கள் அளவிறந்த பேராக இருக்கின்றார்கள் என்று மாத்திரம் கூறலாகும். உண்மைச் சற்குரு நாட்டம் உடையவராய், அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்னும் வாய்மையை நம்பினவராய், அவனருள் எங்கும் நிலவி, விரும்பி வேண்டுவார்க்கு வெளிப்பட்டு உதவுகிறதென்பதை யுணர்ந்தவர்களாய், இருக்கும் ஒவ்வொருவருக்கும், சுவாமிகளது சட்டத்தை ஏற்கும் பேறு கிடைக்கும் என்பது திண்ணம்.

குருமூர்த்தியை அடியவர்கள் நேரில் சேவித்த காலங்களிலே, "உடையவன் கணக்கு இப்போதேயா விளங்கி விடும்? இன்னும் போகப் போகத்தான் விளக்கமுறும்" என்றும், "அவனுடைய அருட்கொடி உலகமெங்கும் பறக்கும்" என்றும், சொல்லுவதுண்டு. "ஆண்டவரது அருளாட்சி, உலகின் மீதுள்ள மிகமிகப் பெரிய அரசாட்சிகளிலும் மேலானது, அதை நடத்தும் சிப்பந்திகளும் உத்தியோகஸ்தர்களும் அளவிறந்த பேராவர்" என்றும் கூறுவதுண்டு. இவ்வுரைகளும் இன்னன பலவும்,இப்போதுதான் கூறுவதுபோல அனைவர் காதுகளிலும் ஒலித்து ஆண்டவனது அருள் ஆட்சி ஓங்கி வளரும்வளமையை நினைவூட்டி வருகின்றன. எங்கும் நிறைந்த ஆண்டவர் அருளை, ஏற்று அநுபவிப்பதற்கு, விழைந்து உழைத்துக் கனிந்து உருகும் அகிலத்துள்ள அனைவர்க்கும், வளமையுடன் வழிகாட்ட, வான்பொருளாகிய எந்தை குருநாதர் என்றும் இருந்து வருகின்றார்.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

**வழிகாட்டும் வான்பொருள்**

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் வரலாறு

முற்றிற்று.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்

அருளிச் செய்த

# அருட்பாடல்கள்,

சுவாமிகள் மீது
அடியார்கள் பாடிய
**தோத்திரப்பாக்கள்.**

பதிப்பித்தவர் :

**திரு. ஆ. நரசிம்மலு நாயுடு அவர்கள்,**

**செயலர், திரு. இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கம்**

அருள் நகர், அரசூர் (அஞ்சல்), பேரங்கியூர் (வழி).
விழுப்புரம் (ஆர். எம். எஸ்.)

---

**பாலா பிரிண்டர்ஸ்,**
சென்னை-600034.

**1974**

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# பாடல் பதிப்புரை

## (முதல் பதிப்பு)

குருநாதராகிய ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருமேனி தாங்கி அடியார்களை ஆட்கொள உலாப்புரிந்து வந்த காலத்திலே, அடியவர்கள் எதிரே, மிக இனிய இசையில் தமது உளத்திருந்து ஊற்றெடுக்கும் பாடல்களைப் பாடுவது உண்டு. அவற்றைக் கேட்டுக்களித்த அடியவர்கள், சுவாமிகள் பாடும்போது எழுதி வைத்துக்கொள்வது வழக்கம். ஒருவர் பிரதியைப் பார்த்து மற்றொருவர் எழுதிக்கொண்டே இதுவரை பாடல்கள் வழங்கி வந்து கொண்டிருந்தன. தனித்தனியே நாட்டின் பல பாகங்களில் வரைந்து வைக்கப் பெற்ற அப் பாடல்கள் பலவும் ஒருங்கே ஒருவருக்குத் தெரிய வழியில்லாமல் இருந்தது.

சுவாமிகளின் பாடல்கள் பலவற்றையும், அடியார்கள் சுவாமிகள்மீது பாடி வழிபட்ட பாக்களையும், ஒன்று சேர்த்து அச்சிடவேண்டும்என்னும்அவாபலஅடியார்களுக்குஇருந்து வந்தது. அதன் பயனாய் அடியேன் இத்தொண்டில் ஈடுபட வாய்த்தது. ஊர் ஊராய்ச் சென்று அடியார்களிடம் இருந்த பாடல் பிரதிகளைச் சேகரித்தும் பார்த்தெழுதிக் கொண்டும் வரவேண்டியிருந்தது. தபால் மூலம் எழுதியும் சில கிடைத்தன. பிரதிகளை அன்போடு உதவிய அடியார் பலருக்கும் நன்றி பல. அடிமை அவற்றை அச்சிடப், புலவர் ஒருவரது துணையை நாடவேண்டியிருந்தது. காஞ்சிமாநகரத்தில் பச்சையப்பன் உயர்தர கல்லூரித் தமிழ்ஆசிரியர், திருவாளர் திரு. வீ. திருஞான சம்பந்த முதலியார் அவர்களைத் திருவருள் கூட்டிற்று. பண்டிதர் அவர்கள் மிக்க அன்போடு ஆதரித்துப்பலவிதகையெழுத்துகளில், தமிழறிவில்பலதிறப் பக்குவமுடையவர்களாலே, பல வழூஉக்களோடேவரைந்து வைக்கபெற்றிருந்த பாடல்களைப் பரிசீலனை செய்து கொடுத்தார்கள். அச்சு செய்யும்போது திருத்துதல் பணியை அன்போடு புரிந்து உதவினார்கள்.

அவர்களுக்குஅடியார்உலகமும்தமிழ்உலகமும், மிக்ககடமைப்பட்டதாகும். அடியேனுடைய தனி வணக்கத்தையும் நன்றிகனிந்தஉள்ளத்தோடுதெரிவித்துக்கொள்ளுகிறேன்.

காஞ்சிபுரம்,
21—2—1937

அடியார்கள் பாத ஊழியன்,
**ஆ. நரசிம்மலு.**

திரு. இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பாடல்கள்

குருநாதரைப் போற்றி அடியார்கள் பாடிய

# துதிப்பாடல்கள்

(இரண்டாம் பதிப்பு)

## முன்னுரை

குருபரனுர் திரு. இரெட்டியப்பட்டி அடிகளார், அடியார்களை ஆட்கொள்வதற்கு எழுந்தருளிய இடங்களில், தாமே தாளம் இட்டுக்கொண்டு இனிய இசையில் பாடியருளியிருக்கின்றுர்கள். அவை, ஆங்காங்கே, அடியார்களிடமிருந்து கிடைத்தன. அவற்றைத் திரட்டி, 'வழி காட்டும்வான்பொருள்' நூலின் பிற்பகுதியாக, 1937-ஆம் ஆண்டில், அச்சிடுவிக்கும் பேறு கிடைத்தது. 1956-ல் இப்பாடல்களை மட்டும் தனிச்சுவடியாக அச்சிடும் வாய்ப்பும் கிட்டிற்று.

இப்போது இப்பாடல்கள் மட்டும் மறுபடியும் தனி ஒரு நூலாக அச்சிடப் பெற்றுள்ளன. விடுபெற்றிருந்த சில பாடல்களும் இப்பதிப்பில் இடம் பெற்றுள்ளன.

இறைவனிடம் முறையிட்டுக்கொள்ளும் உருக்கமான கருத்துகளும், மனத்துக்குச் செய்துகொள்ளும் உபதேசங்களும், வாழ்வின் இன்னல்களை விவரிக்கும் செய்திகளும் கொண்ட குருநாதரின் அருட்பாடல்கள், மக்களுக்கு அருளுணர்வையூட்டி, மனத்தைத் திடப்படுத்தி, வாழ்க்கைச் சிக்கல்களை ஊடறுத்து, வென்று, நல்வாழ்வு வாழ்வதற்குப் பெரிதும் பயன்படுவனவாகும். அடியார்கள் பாடல்கள், குருபரனுர்பால் அன்பை வளர்த்து, மக்கள் அருட்சட்ட நெறியில் நிலைத்து நின்று, நன்னிலையடைய வழி செய்வனவாகும். குருபரனுரின் வரலாற்றுச் செய்திகள் சிலவும், இப்பாடல்களில் காணக் கிடைக்கின்றன.

தெய்வ நலங்கனிந்த இப்பாடல்கள் அடியார்கள் அன்றுடம் கையில் ஏந்தி ஓதத் தக்கன. எனவே, இவற்றைத் தனியே ஒரு சுவடியாக அச்சிடுவது சிறந்த பணியாகும் என்று, குருநாதர் அருட்சட்ட அடியவர் தவத்திரு: திருவிசைநல்லூர் ஜி.சரவணப்பிள்ளை சுவாமிகள் கருதி, இதற்காகும் செலவை அவர்களே ஏற்றூர்கள். இவர்களுக்குச் சங்கத்தின் நன்றி உரியதாகும். ஆண்டவரின் அருள்நலம். அவர்களிடம் மேன்மேலும் ஓங்கி விளங்க, இப்பணி இனிதாக அமைகின்றது.

அச்சிடும்போது, ஒப்பச்சுத் (புரூப்) திருத்தியும், பிற வகையிலும்; உதவிய, சங்கத் தலைவர் திரு. கீ. இராமலிங்கனுர் அவர்களுக்கும், அழகாக அச்சிட்டுக் கட்டிடம் செய்து தந்த பாலா அச்சகத்தாருக்கும் நன்றி யுடையோம்.

**ஆ. நரசிம்மலு,**
11–9—1974
செயலர், ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கம்,
அருள் நகர்.

---

உ

ஸ்ரீ பரிபூரண சித்தி விநாயகர் துணை.

இரெட்டியப்பட்டி சுவாமிகள்

# அருட்பாடல்கள்

## விநாயகர்

### நேரிசை வெண்பா

ஐந்து கரத்தாய் அறுமுகற்கு நேர்மூத்தாய்
முந்த வுதித்த முதல்வாவென்—சிந்தை
குடியிருந் தேகாக்குங் கோமா னுனையான்
அடிதொழுதேன் வந்தென்னை யாள் 1.

நீயே துணையாகி நின்மலமாய் நிற்குணனாய்த்
தாயாகித் தந்தையாய்ச் சற்குருவாய்ச்—சேய்போற்
கருதியெனை யாண்ட கணபதியே அல்லால்
வருவதியார் சொல்வாய் வழி. 2.

சென்ம மெடுத்ததொரு தீவினையோ யானறியேன்
கன்மமோ யாதோ கலங்கிடுவேன்—நன்மைபெற
ஆர்சொல்வார் நன்னெறிக ளப்பனே நின்னடியார்
சார்வைத் தெரிந்திடவே சாற்று. 3.

உலகிற் பெரியோரா முத்தமரைக் காண
நலமுள் தெரியாத நாயேன்—கலைபலவும்
உற்றுணர்ந்தார் வாச லொருக்காலுஞ் சென்றறியாச்
சிற்றறிவே னன்மைபெறச் சேர். 4.

இராசவிருட் சஞ்சிவமா யின்வேம்பு சத்தியதாய்
ஆசையுடன் வந்தே யமைந்துவெகு—நேசமுடன்
புத்திரனைப் பெற்றூரிப் பூதலத்தி லெல்லோரும்
முத்திபெற வென்றே முதல். 5.

இன்னிசை வெண்பா

மதுரா புரிவடக்காய் வைகைநதித் தென்பாற்
சதுரார் ரயில்பாலந் தன்மேற்கா யெங்குங்
கதித்தோங்குஞ் செந்நெல்சூழ் கட்டிடத்தின் கீழ்பால்
உதித்தாயென் னுள்ளத் துறை. 6.

அறுசீராசிரிய விருத்தம்

வினையகற்றும் பெருமானிவ் வேளைவந்து
காத்தருள்வாய் விமல மூர்த்தி
உனையல்லால் வேறுதுணை யுண்டோயிவ்
வுலகத்தி லொருவ ரில்லை
மனமுழன்று சுழல்கின்றேன் மாயவலைக்
குட்சிக்கி மதிம யங்கித்
தினமுமியா னலைவேனோ சகிக்கவொண்ணு
துனக்கபயஞ் செப்பு வாயே. 7.

எழுசீராசிரிய விருத்தம்

நாடுவோர்க் கெல்லாம் நாடிய படியே
நல்வரங் கொடுக்குநல் லீசன்
பாடுவோர் தமக்குப் பாடுதற் கிசைந்த
பயன்களை யளிக்குநற் பதத்தோன்
ஆடுவோர் கூத்தை அறிகின்ற சீலன்
அன்பர்தஞ் சிந்தையிற் புகுந்து
கூடியே யுறவாய் வழியது காட்டிக்
குணங்களை யுரைக்குமெய்க் குருவே. 8.

ஹம்ஸத்வனி எண்சீராசிரிய விருத்தம்

சீலமிகு செகதீசன் பெற்ற கண்ணே
தெவிட்டாத தெள்ளமுதேதேனேசெந்தில்
வேலவர்க்கு முன்பிறந்த சுமுகா ஞான
வித்தகனே விண்ணோர்க்கு மேலா யுன்னை

ஞாலமுளோர் புகழ்ந்தேத்தும் விதங்கள் யாவும்
நாவினுற் சொலவொண்ணு தருமை யென்னே
கோலமத குஞ்சரமே சதங்கை கொஞ்சக்
கூத்தாடி எனையாள வருகு வாயே. 9.

அன்னையுமை மனமகிழ்ந்து பயின்ற பாலா
அனைவோர்க்கு முதற்பொருளே அன்பர் சீலா
நன்னயமாய் நின்பால்வந் தடுத்தே னென்றன்
நாவினு லுனைப்பாட அருளிச் செய்தாய்
பன்னுதமிழ்க் கரசேமெய்ஞ் ஞான மூர்த்தி
பலகலைக ளாராயும் பயன்கள் நல்கி
இந்நிலத்தி லுன்மகிமை யறியச் செய்த
இங்கிதத்தை யென்சொல்வேன் எம்பி ரானே. 10.

---

பல்லவி

வா வா கணேசா வரந் தருவாய்—கணேசா

அநுபல்லவி

பாவாலெந்தன் நாவாலுன்னைப் பாடவருள் தேட
(வா வா)

சரணம்

1. தொந்தி வயிறு குலுங்க உந்தன் துதிக்கையசைந்தாடத்
தந்தி முகமி லங்கக் காலில் சலங்கை இசைபாட
அந்தி மதியணிந்த அரன் புதல்வா விளையாட
வந்துதித் தோனே மலர்ச் சரணம் தரவருக (வா வா)

2. ஆனைமுகத் தோனே அங்குச பாசத் தோனே
கானக் குறவள்ளி கணவனுக்கு மூத்தோனே
மோனமதி லுணர்ந்த மும்மதவே ளெனும்பரனே
ஞானகுரு மூர்த்தி எந்த நாளு மெனைக்காக்க (வா வா)

3. செந்தாமரை வாவிகள் செறிந்த பூங்கா வனமும்
மந்தாரை பிச்சியோடு முல்லைமலர் சூழ்வனமும்
விந்தை விந்தையாக விளையாட் டருள்புரியும்
சொந்தமான தென்மதுரைச் சுமுகா எனைக்காக்க
(வா வா) 11.

ஹம்ஸத்வநி **பல்லவி** கண்டசாபு

கணேசா கணேசா கணேசா கணேசா
கடம்பவன முன்னுதித்த காரண கணேசா (கணேசா)

**அநுபல்லவி**

மணமும் அதிகக் குணமும் பொருந்து
மலர்கள் சொரிந்த வனங்கள் நிறைந்த
மாமதுரைமேவுசெய வீர அதிகார
மனோகர திருபாகர உதார கருணாகர (கணேசா)

**சரணம்**

1. சோதி மணிமகு டங்கள்சிறந்து
துலங்கு மதிவத னங்கள் பொலிந்து
காத லுடன்மார்பில் முந்நூ லணிந்து
காலிற் சதங்கை கலீர் கலீரென்று
கணகண கணீரெனக் கலந்திசை பாடக்
கவிகள் பலகீதம் கண்டு களிகூரும் (கணேசா)

2. சிந்தை மகிழ்ந்து தினமும் புகழ்ந்து
தெரிசிக்கும் அன்பர்கள் கரங்கள்குவிந்து
வந்தனஞ் செய்யும் விதங்க ளறிந்து
வரம்புரி கின்றம கத்துவ முயர்ந்து
வரும் பிணிகள்யாவும் அகற்றும்வழிதேடி
மலடுசெவி டுமைகளை மாற்றிவி தம்நாடும்
(கணேசா)

3. வேடிக்கை யாகவே அந்தகர் தங்கள்
விழிகள் தெரிந்திட வேயருள் காட்டிப்
பாடிப் பரங்கள் தனைப்போல வந்து
பசிக்கன்னந் தாவென்று பலதரஞ் சாட்டிப்
பாகர்கள் நன்மனை தோறுமே நுழைந்து
பலகாலும் சோதனைகள் செய்யவே வளைந்து
(கணேசா)

4. மெய்யென்று நம்பும் விதங்கள னைத்தும்
விதம்வித மாகவே மெய்காட்டி நித்தம்

ஐயனே வுன்னே அனுதினம் போற்றும்
அடியார்கள் நெஞ்சத் தகலா திருந்து
ஆடுகின்ற கூத்தை அருகிலிருந் தோதி
ஆராய்ந்து பார்க்கும் வகைசொல்லும் சேதி
(கணேசா) 12.

---

புன்னாகவராளி பல்லவி ஆதி

ஐயே வுன தடைக்கலம் கணேசப் பிரபு
ஐயே வுன தடைக்கலம்

அநுபல்லவி

SVS வையக மதிக்கவென்று வந்து அருள்புரிந்து
மைந்த னெனவுகந்து சொந்தஅடிமை கொண்டாய்
(ஐயே)

சரணம்

1. உலக மதிக்கவென்று உன்னையா னென்றுகாட்டிக்
கலகப் படுத்துவதும் காட்சிப்ர மாணமோ (ஐயே)
2. ஆதி குருவாய்வந்து அடிமைக் கருள்செய்ததை
SVS நீதமென வுணர்ந்து நிச்சயப் படுத்திக்கொண்டேன்
(ஐயே)
3. உன்னையா னென்றுசொல்லஉன்னுணே பொய்க்குமோ
என்னே நீ காட்டுமரு ளின்னதென் றறிகிலேனே
(ஐயே) 13.

---

பல்லவி

கண்டு தெளிவாய் மனமே—கணேசனைக்
கண்டு தெளிவாய் மனமே

அநுபல்லவி

அண்டர்தொழு மூர்த்தியை ஐயன் மதுராபுரி
கொண்ட கரிமுகனைக் கோல முடனே நிதம் (கண்டு)

சரணம்

1. சத்தியுமை யாள்பாலன் சகத்திலுயர் தண்டமிழ்க்
(கனுகூலன்
சித்திவிநாயக சீலன் செம்பொற் பா தந்தனை நாளும்
சித்தித்தவர்மன தன்பிற்புகுநல
மந்த்ரக் கருணை புரிபரனை நீ (கண்டு)

2. தென்றல் சாமரைபோட வைகைநதி சலப்பிரளயங்
(களோட
விந்தையாய்க் குயில்கள்பாட வேடிக்கை மயில்களாட
வெகுசிவ பக்தர்கள் தபசுமிகப்புரி
விதமதனைத்தையும் அறியுமகத்தினைக் (கண்டு)

3. பூங்கா வனங்கள் சூழ அருகினில் பொங்குதேங்
(கோங்கிவாழ
பாங்கா யமுதுநள பாகத் துடனே கொளப்
பரிமள புஷ்பமொ டணிகமலத்தனைப்
பலவித முக்கனி புசியுமுகத்தனைக் (கண்டு) 14.

---

பல்லவி

வல்லபை மணாளா சரணம்—கிருபாகரனே
வல்லபை மணாளா சரணம்

அநுபல்லவி

தொல்லையெனும் சாகரத் தல்லல் களையவென்று
தொழுமடி யவரிரு வினையக லவருள்செய் (வல்லபை)

சரணம்

1. அன்னைபிதாவும் நீயே அருளே தருமோன
தயாபரனே யெனை—ஆதரித் திடுவாயே
பின்னோர் துணைவே றில்லையே பெருமா னெனும்
ஞானசிகாமணியே எந்தன்—பிழைபொறுத்
[தருள்வாயே (வல்லபை)

2. சிந்தை குடிகொள்வேதா தெளிவான சதாசிவ
பீடம தாகிய—தேசிகா நின்னடி தாதா
பந்தமறுப் பாய்நாதா பரமே யருவுருவாகி
நிறைந்தவா—பாசமழிப்பாய் நீதா (வல்லபை)

3. தேகம்நிலை நில்லாதே திகழ்மா மதுரம்பொழி
தேனே சீனியே—ஜெனிக்கும்வகை பொல்லாதே
யோகநிலை விள்ளாதே ஒரு பாலகன் நொந்து
வருந்து மிடர்தவிர—நுணக்கமது சொல்லாதே
(வல்லபை)

4. சகிக்கமுடி யாதையனே தமியே னுடல்பொருள்
ஆவிமூன்றுந்திறை—தந்தேன் தந்தேன் மெய்யனே
சுகிக்குமடியார் நாளும் தொண்டு புரியும் சபை
கண்டு மகிழ்ந்திடும் —சுகத்திலிருத்து வாயே
(வல்லபை) 15.

---

பல்லவி

காணக் கிடைக்குமோ கணேசா நின்பாத சேவை
கரிமாமுகனே சிற்சபை தனிலே நடமிடு பொற்பாதம்

அநுபல்லவி

பேணப் பேணப் பிறவி நீக்கிடும்
பெருமானென்றுனைப் பிரியமாய்த் தேடப்
பேதமை யென்பதுசற்றும் பாதகமென் றுணராமலே
(கா)

சரணம்

1. சோதி மகுடம் பத்திக்கப் பத்திக்கத்
துதிக்கை இசைந்து சித்திக்கச் சித்திக்கப்
பாதச் சிலம்பு சத்திக்கச் சத்திக்கப்
பகர்ந்த மந்திரம் தித்திக்கத் தித்திக்கப்
பரிபாஷைக ளறியும்படி திரிகாலமு முணரும்படி (கா)

2. வேதாகம சாஸ்திர புராணமும்
விரிந்த சாஸ்திரமும் பலர்க்குங் காட்டியே
சோதிட சிற்பமும் ஆரூடங்களும்
சொல்லத் தொலையாத கற்பித நூல்களும்
துகளற்றிட அடியர்க்கருள்புரியக்கிர்பை தருமுத்தினைக்
(கா)

3. சரியை கிரியாயோக ஞானமும்
தத்துவங் கடந்த முத்தர்கள் சேவையும்
அரிசிவ மெனக்கருதி நடக்கும்
அன்பர்கள் நேசமும் தந்த குணாளனே
அறிவாகர சொருபத்தினி லயமாகுத லுறுதிப்பட (கா)

4. தேவர்கள் மூவர்கள் காணுத் திருவடி
சிதம்பரத்தில் நடிக்குந் திருவடி
பாவனைக் கெட்டாப் பரமன் திருவடி
பத்தர்கள் தேடிப் பிடிக்குந் திருவடி
பந்தாதிக ளற்றுக்கிருபை சிந்தைதனில் வைத்துத்
தினம் (கா) 16.

---

பல்லவி

கண்டுகொண் டாயோ மனமே—கணேசனைக்
கண்டுகொண்டாயோ

அநுபல்லவி

கண்டுகொண் டாய்நீ தொண்ட ரிடத்தே
கருணைபுரியுங் கணேசர் பதத்தைக் (கண்டு)

சரணம்

1. வானவர்க் கருள்புரியு மீசன் மதுராபுரியில் வாழுங்கணேசன்
மோனமுற்றிடு மௌனயோகன் மும்மதம்பொழி மூஷிகவாகன்
ஞானமூர்த்தி மெய்ஞ்ஞானிகள் பாகன் நற்றமிழ்க்குதவி புரிதேகன்
ஆனைமுகத்த னங்குசபாசன் ஐங்கரத்தனை அனுதினமுநீ (க)

2. வைகைநதியின் தென்பாலோங்கி வளர்ந்தராஜ விருக்ஷத்தடியில்
செய்யபுகழ் பெற்றேங்குமீசன் செங்கோல் செலுத்தி யரசு புரியும்]
சையோகத்தையும் மகிமையுங்கண்டு தபசுபுரிவ ரனந்தங்கோடி
நைவேத்தியஞ்செய் யன்பர்கள்நெருங்கி நாளும் பணிந்திடு
விதத்தை நாடிக் (கண்டு)

3. பத்தி புரியு முலகத்தோர்கள் பாவனைகளை அறிந்தனுதினமுஞ்
சித்திகொடுக்குங் கிருபையாளன் ஜென்மவினைகளகற்றுவேளன்
கற்றுணர்ந்தும் நல்லறிவில்லாத தசடர்தங்களை நரகில்தீத்தும்
வெற்றிபுரிந்திடுமையன்பதத்தை விரும்பி நன்மைகள் பெறவும்
நாடி (கண்டு) 17.

பல்லவி

ஏழைபடுந்துயரம் பாராய் சற்றே—ஏழைபடுந்துயரம்
பாராய்

அநுபல்லவி

பேழை வயிற்ருேனே பெருச்சாளி வாகனனே
பெற்றவா வுனைப் பற்றவா
பிறந்துபிறந்து மண்மேல் உழன்றுவஞ்சியர் மோகத்
தலேந்து குடிகேடன்போல் திரிந்துகெட் டழிந்திடும்
(ஏழை)

சரணம்

1. முன்னுள்செய் கர்மவினைப் பயனே—அந்நாள்
முறையை விதித்துதவு மயனே
இந்நாள் படுந்துயர்சற் றல்லவே—இத்தை
யார்பா லெடுத்துரைப்பேன் குறையே
என்போ லெளியவரும் உன்போல் வலியவரும்
எங்கெங்கும் பார்த்தாலு மிலேயே – துன்பம்
அங்கமெடுத்தவர்கள் தொலேயே
இச்சையினுல் வருமாயை முற்றுமே சூழ்ந்துகொண்
டெனை
இழுத்து மடிபிடித்துத் தொடுத்துப்போராடுதே(ஏழை)

2. பெரியோர்செய் நன்றிமறந் தேனே—பொல்லாப்
பிழைகளேச் செய்யத்துணிந் தேனே
வெறியரோ டுறவுசெய் தேனே—சுத்த
விரதாதி தன்னேயிகழ்ந் தேனே
விண்ணவர்கள் தொழுதேத்தும் அண்ணலே உனே
மறந்து
வினைப்பய னின்னதென்று மறியேன்—சோ
தனைக்குநா னென்னசெய்வே னெளியேன்
வேதவே தாந்தமுணர் மாதவர்கள் அடிதொழாது
விட்டகுறை யல்லாது கிட்டுமோகிட் டாதோ சொல்
வாய் (ஏழை)

3. மதலேசெய் குற்றம்பொறுப் பாயே – அசுத்த
மாயா விகாரமறுப் பாயே
குதலேவாய் மொழியென்னுங் குற்றமோ—இதைக்
குற்றமென் ருலுலக மொப்புமோ

கோடானகோடி சென்மம் நானே பிறந்திறந்தும்
குறைக ளனுபவிக்க வில்லையோ—இந்தத்
தரையி லெனைப் போல்யாரு மில்லையே
கொடியவினையனென்று முடியாக் கணக்கெடுத்தால்
குற்றவாளி நீயென்ன வுத்தமர்கள்மதிக்காரோ (ஏழை)

4. அறியாத பாலனென்றுர் சொல்லுவார்—என்றும்
அனியாயம் செய்தால்நியாய மல்லவே
பரிகாரமென் றென்றைக்கு மில்லையோ—பொல்லாப்
பகையனென் றுலும் கொடுஞ் சொல்லையோ
பலகால் செனனமெடுத் தொருகால் முடிவில்லாத
பற்றுவர வெங்குமிலை ஐயனே—வழக்கில்
சற்றுமுனை விட மாட்டேன் மெய்யனே
பாக்கியென்று சொன்னுலுன்னைத் தாக்குவேன் சபை
தனிலே
பரியாசம் செய்வதெல்லாம் அறிவேன் சத்தியமாக
(ஏழை)

5. கருணைப் பிரவாக னென்றுஞ் சொல்லுவார்—பொய்க்
கணக்கு முடித்தாளென்றும் விள்ளுவார்
அருமை தெரிந்தவர்க ளழுவார்களென்று—மதை
யார்பாலுஞ் சொல்லவில்லை களவால்
அற்பமான செய்கையென்றும்உத்தமரிகழ்வாரென்றும்
அடக்கங்கள் செய்துகொண்டேன் குரவா—
உன்தன்
திருட்டுத் தனங்களெல்லாம் மறைவா
அப்பனே நான் சொல்லவில்லைபற்றுவரவெனக்கில்லை
அடிமை யெனச்சத்தியம் முடிவாகச் செய்துகொண்
டேன் (ஏழை) (18)

---

ஹிந்தோளம் ஆதி

## திருப்பரங் குன்றம்

பல்லவி

காக்கக் கடனுனக்குக் கந்த வடிவேலா நீ
ஆர்க்குங் கிருபை செய்யும் அப்பனே! குன்றூரா

அநுபல்லவி

காக்கவந்திடு கற்பகமே வினை—தீர்க்கவந்திடு மற்புதமே
(காக்க)

சரணம்

1. அத்தனுடன் வாதாடி அம்மைபெற்ற பாலா
அன்பர்களைக் காக்கவந்த சின்மய விலாசா
சுத்த துரியதுரியாதீத விதலோலா
* சுப்பிரமணியன் சொற்கவிக் கருள் புரியுஞ் சீலா
சூக்ஷ்ம வெளியேசுந்தரனே காட்சி புரியு மந்தரனே
(காக்க)

2. சூராதி சூரரைவென்ற தோகைமயில் வாகா
சுத்த நிற்குணனுபவ முத்திதரும் போகா
ஆருதாரப் பொருள மைந்த வச்சிரதேகா
அம்மைவள்ளி தெய்வானைக் கன்புபுரி பாகா
அமரர் பயங்கர மொழித்தவா சமரில்முகன் றனை
வதைத்தவா (காக்க)

3. நிற்குண நிராலம்ப நிர்மல வினோதா
நிரஞ்சன நிராமயம் நிறைந்தபரி போதா
சொற்பெரிய பூரண சுயம்பிரகாச நாதா
சொல்லரிய சோதிமய மானநவ நீதா
தோகைவிரித்துயர் மாமயிலேறித் தோன்றிநடத்தும்
வேலனே (காக்க) 19.

---

பல்லவி

ஆடிவருவாய் மயிலேகந்தனைத்—தேடிவருவாய்மயிலே

அநுபல்லவி

அஷ்டா க்ஷரத்திலுயர் அறுமுகனைப் பணிந்தேத்தி
(ஆடி)

சரணம்

1. ஓம் சரவணபவ குகனே ஓம் சயிலொளி பவநிதனே
ஓம் திரிபுரபவ மயனே ஓம் திகழொளி பரசமயனே
ஓங்கார வட்டமதில் உள்ளே யமைந்த
ஓம் பிரணவமயமதைச் சற்றே நினைந்து (ஆடி)

2. முத்தி தரும்சிவ யோகன் மூர்த்திப் பிரணவ மூலன்
அத்தி முகன்தனக்கிளையோன்அன்பர் மனதருகிருந்து
ஆடுமயி லேறிவிளை யாடிவருந் தீரன்
அமரரிடர் தீர்க்குநம தையனை நினைந்து (ஆடி)

---

* சுப்பிரமணியன்—சுவாமிகளின் இயற்பெயர்.

3. நித்தியகல் யாணசுதன் நேர்ந்த வரப்ரசாதன்
பத்திபுரி குமரேசன் பாதமதை நினைந்துருகி
பாடுமிசைக் கானவொரு நாளுமிடர்வாரா
பரம பதமடையப் பத்தியதும் வேரே (ஆடி) 20.

—:o:—

தந்யாஸி **சிவபெருமான்** ஆதி

பல்லவி

சிவபெரு மானுக்குத் தொண்டு செய்யாவிடில்
சென்ம மெடுத்ததும் வீணே

அநுபல்லவி

அவனி தனிலதிக தவமகிமைகள் பெறும்
அன்பர்ம னதிற்குடி கொண்டரு ளும்பிரம பரம (சிவ)

சரணம்

1. ஏழைபங் காளரா யிருப்பார்—எளி
யோர்செய் வினைகளைப் பொறுப்பார்
காளைமீ தேறியே நடிப்பார்—கை
லாசம் வீற்றிருந்தருள் கொடுப்பார் (சிவ)
2. அற்பர்கள் தன்னைமறந் திடுவார்—அறி
வுள்ளோர் தனைத்துறந் திடுவார்
சிற்பர சின்மய மாகி—நிதம்
சிவலோக மிருந்தருள் கொடுப்பார் (சிவ)
3. சரியை கிரியா யோகபதங்கள்—தனைச்
சாற்றியே நிலைபுரிந் திடுவார்
அருவ மின்னதென்றும் உருவமின்னதென்றும்
ஆனந்தங் காட்டியருள் கொடுப்பார் (சிவ) 21.

———

பல்லவி

சோதனை செய்யாதே அரனே—சோதனை செய்யாதே

அநுபல்லவி

சோதனை யால்வெளி யாகும் விதங்கள்
சூத்திர மென்று துணைபற்றி னேனே (சோதனை)

சரணம்

1. அத்தனே உன்னை யனுதினம் யான்தொழச்
சித்தி புரியும் சிவனே யினியெனைச் (சோதனை)
2. பஞ்சமா பாதகர் நெஞ்சம் பிளந்திட
அஞ்சலில் வந்து அனுக்கிர கம்செய்வாய் (சோதனை)
3. கருணையா யன்பரைக் காக்குந் தயாபரன்
வரும்வினை யெல்லாம் அகற்றியே கைக்கொண்டு
(சோதனை) 22.

---

பல்லவி

ஈசா எனக்குவரந் தாராய்—இதுசமயம்
ஈசா எனக்குவரந் தாராய்

அநுபல்லவி

பாசக் கடலில்விழுந் தாசைப் படும்வினையால்
மோசப் படாமலென்னை நேசித் தருளுகந்து (ஈசா)

சரணம்

1. ஆதி யினிற்செனித்த கால மிதுவரையில்
ஓதிப் படித்தகல்வி யேதுக் குதவியினி (ஈசா)
2. கும்பிக் கிரையேதேடிக் கூவித் திரிந்தேனிந்நாள்
நம்பிக்கை போகுங்காலம் நானிங் கிருப்பதில்லை (ஈசா)
3. கள்ளர் திருடர் தம்மைக் கைக்கொள்ளுங் காலமதில்
வள்ளலென்றும்பேரேதுவையகத்திலாருமில்லை(ஈசா)23

பல்லவி

ஈசனை நம்பினேனே—செக—தீசனை நம்பினேனே

அநுபல்லவி

ஈசனை நம்பியோர் மனத்துடன் இருதயத்தினைத்
திருத்தி (ஈச)

சரணம்

1. ஆசைப்படுவ தேனோ அலைந்தோடித் திரிவதேனோ
பாசக்கடலைக் கடந்தும் பலவேஷத் தொழில்களேனோ
(ஈசா)

2. மாடுமக்களை மறந்து சொந்தமனைவி தனையுமிழந்து
வீடுசுற்றமு மறந்து மெய்ஞ்ஞான வீட்டினைத்
துறந்து (ஈசா)

3. ஆதியந்தமுமாகியரன் கண்ட வெளியுமாகி
சோதிவடிவமான பிர்ம்மசூக்ஷ்மவழியைத் தெரிந்து
(ஈசா) 24

---

பல்லவி

உனை நம்பி னேனே யான்-உனை நம்பி னேனே

அநுபல்லவி

உனை நம்பி னேனிந்த வுலகத்தை மதியாமல் (உனை)

சரணம்

1. வேதங்களோதி அறிந்துன் விதங்களைப் பாடி
மாதர்கள் மேலிச்சை வையாமலே யுந்தன்
பாதத்தைத் தேடிப் பதந்தரு வாயென்று (உனை)

2. பூதலத்தோர்கள் பணிந்து புகழ்ந்திடும் நாதா
சோதனையா லெளியேன் படும் வாதனை
சொல்லவொண் ணாது சுகந்தரு வாயென்று (உனை)

3. மாதமும்மாரி பொழியு மதுரையில் வாழும்
நீதனே நம்ஜெக தீசனே உன்னை
நினைந்து நினைந்து வரந்தருவா யென்று (உனை) 25

---

பல்லவி

ஐயன் கிருபை வேறே சுகம்—ஐயன் கிருபை வேறே

அநுபல்லவி

ஆர்க்கும் கிருபை புரியும் விதங்கள்
அவரிடத்திலே கண்டாய் வேறெவரிடத்திலே கண்டாய் (ஐ)

சரணம்

1. அன்பர் மனதிற் புகுந்து—விளை—ஆடுங் கூத்துகள் பாராய்
உன்னும் பதத்தை நினைந்து—தினம்—ஊணுறக்கமு மிழந்து
இன்ப சுகமும் மறந்து—இங்கே—இனிப் பிறவியு மகற்ற
இன்னவித மென்றுரைத்தார்—ஜெக—தீசன் பதத்தை நாடி (ஐ)

2. அன்னை தந்தையுமவரே-எனக்-கானகுருவு மவ ரே
சொன்னமொழிகள் தவரு-மதுரைச்-சொக்க வனச்சொக்க [நாதா
நன்னயமாக என்னை-இங்கே-நாளுக்கு நாளாய் வளர்த்து
இன்னவித மென்றுரைத்தார்-இங்கே-இனிப் பிறவியுமில்லை (ஐயன்)

3. உலகத் துதிக்கு மன்ன-ரெல்லா-முணர்வில் லாத கள்ளர்
நிலையற்ற வாழ்வை நம்பி-நாளும்-நெறிகள் தவறி நடந்து
சிலையிற்றெடுத்தவாளி-யம்மைச்-சீதையைச் சிறைவிடு தல்போல்
ஒளித்தெய்ய வந்தாரங்கே-உலக-நாதரென் றுரைத்தேனிங்கே
(ஐயன்) 16

---

### பல்லவி

பூமியில் வாரானோ அருள்பெற யிங்குவந்து
பொற்பதந் தாரானோ

### அநுபல்லவி

வாமித் திரிசூலி சிவகாமி சௌந்தரி
மங்கைமண வாளனைக் கண்டுதெரி சித்திட (பூமி)

### சரணம்

1. அன்ப ரிருதயத்தில் குடிகொண்ட ரூபம ரூபமதாய்
இன்பங் கொடுப்பவனுய் எனதுள்ளத் தேகமாய் நிற்பவனுய் (பூ)

2. தில்லைச் சிதம்பரத்தில் நடம்புரி சித்தம் பலத்தானே
அல்ல லறுப்பவனே உனை யனுதினம் யான் துதிக்க (பூமி)

3. சாலோக சாமீபங் கடந்த சாயுச்சியம்
நாலாம் பதவிதன்னை அடைந்திட நற்பதங் காட்டுதற்கு (பூமி)

4. கலியுகந் தன்னிலே ஐயன்வந்து காட்சிகள் காட்டவென்று
உலகில் மானிடமாய் வருவாரென் றுண்மைதெரிந்திருந்தும் (பூ)

5. ஊழூழி காலமெல்லாம் அவதரித் துண்மைகள் காட்டவென்று
ஏழை பரதவித்து அழுங்கண்ணீர் இன்னமும் போதாதோ (பூ)

6. எங்கும் நிறைந்தவராய்ப் பலவுயிரெல்லாந் தழைத்துநிற்க
பங்குகொ டுப்பவனுய் அரிபரி பாஷைகள் சொல்பவனுய் (பூமி)

7. வேதங்கள் பொய்யாமோ விதித்த விதிகளும் பொய்யாமோ
சாதன முன்னவர்க்கு அருள்தந்த சாட்சியும் போதாதோ (பூமி)

---

## மதுரை—மீனுட்சியம்மை

பல்லவி

பாராயுன் திருக்கண்ணுல் எனைப்
பார்த்துச்சஞ் சலங்களைத் தீராய் (பாராய்)

அநுபல்லவி

பாரோர் புகழ் மதுராபுரி மேவிய சங்கரியே
சிவசங்கரியே நீ (பாராய்)

சரணம்

1. மாமணி மகுடம் புனைந்திடும் வல்லி
மதிவதனங்கள் சிறந்திடுஞ் செல்வி
காமனையெரித்த கண்ணிணையுடையாள்
கற்பகத்தருவே கனியெனுந்திருவே (பாராய்)
2. வண்டுகள் பாடும் வனந்தனி லுதித்த
மஞ்டிசங்காரி மணிமந்த்ர ரூபி
குண்டோ தரனுக் கமுதினை அளித்த
குர்த்தி ஓங்காரி பரத்தி ரீங்காரி (பாராய்)
3. ஆதியி லரனோ டாடிய சக்தி
அன்பத்தோ ரக்ஷரத் தமைந்திடுஞ் சித்தி
சோதிமுச் சுடரே சுடரொளிக் கொழுந்தே
சூக்ஷ்ம வெளியே காட்சிதந் தெனை நீ (பாராய்) 18.

---

## மனநிலை யுணர்தல்

பல்லவி

கோபஞ் செய்யாதே மனமே—கோபம் செய்யாதே

அநுபல்லவி

கோபஞ்செய்தால் பாபங்கள் நேர்ந்து
குற்றம்வந் தெய்துனைச் சற்றும் விடாது (கோ)

சரணம்

1. பாசக்கடலை அகற்றிக் கொடும் பாழ்வினைகளைத் துரத்தி
நேசித்தரனை மனதில் தினமும் நினைந்து நினைந்து திருத்தி (கோ)

2. தாய் வயிற்றினில் பிறந்து நல்ல சன்மார்க்கங்களை அறிந்து
மாய்கை யென்றிங்கே தெரிந்து மனம் வாடுவ தேன்மதி மறந்து

3. உன்னைப் படைத்தவ னொரு உனக்குள்ளே இருக்கிறுன்பாரு
சொன்ன படியேநீ தேரு சிற்சொரூப நிலையைநீ சாரு (கோ)

4. மூடர்கள் எத்தனை கோடி பல மூர்க்கர்கள் எத்தனை கோடி
பாடி யிருப்பவர் கோடி பணந் தேடியிருப்பவர் கோடி (கோ) 29.

---

## காவடிச்சிந்து

1. வெள்ளியி னுலேவி ளைந்தந கைகளை
வேண்டாமென் றேநினை மனமே—திரேகம்
பூண்டால்வ ரும்வினை தினமே—நம்மை
ஆண்டா ருரைத்தது முனமே
வேதவிதி யோவல்லது சூதோவி னையோவென்றறி
விட்டகு றைவந்து தாக்குஞ்—சஞ்சித
கட்டையெல் லாம்பஸ்ம மாக்கும்

2. பொன்னினு லேசெய்த பூஷண மென்றுமே
போடவி ரும்பினுல் கேடு—இனி
நான்சொல்வ தேவழி பாடு—மறை
நீதியி லேவுற வாடு
புலவோர்களு மரிதாகிய தவமேசெயு மிடமானது
போயுணர்ந் தேபதந் தேடு—சிவ
யோகமொன் றேசெய்ய நாடு

3. தங்கத்தி னுலேச மைந்தந கைகளைத்
தானறி யாமலே போடு—சற்றும்
யான்விரும் பேனது ஓடு—எமன்
ஓலைவந் தாற்சுடு காடு

தனதானதை உறவோர்களு மெனதேயென
[விடுவார்களோ
சாலமல் லோயிந்தக் கூடு—பர
மானந்த மேசொந்த வீடு

4. முத்தார மோடுந வரத்ன மாலைகள்
மோகன மாலைகள் வேரோ—பரி
பாகமென் றேயுணர்ந் தாரோ—சுத்த
யேகவெ ளிதுறந் தாரோ
முடிமன்னர்கள்படையாதிகளொடுகூடியேநிலையாயினு
மோசமென் றேமுன்னோர் கருதி—மல
பாசமென் றேதள்ளுஞ் சுருதி

5. பட்டுப்பட் டாவளி பார்க்கவ லங்காரம்
பண்ணவென் றேநினைந் தாயே—சர
மெண்ணும லேபுனைந் தாயே—கொன்று
உண்ணுவி ரதமென் றாயே
பக்தரொடு முக்தர்களும் சித்தந்தெளிந் தாரென்பது
பாவமென் றேமர வுரிகள்—எடுத்
தாடை புனைந்தது மறிவாய்

6. பூடுசு சோடுச டாவென்று பாதத்திற்
பூட்டுவ தும்நல்ல மதியோ—காவி
வேட்டியு டைகளும் விதியோ—தன்னை
மேட்டிமை செய்வதுங் கதியோ
போதைபல மாமிசமும் வேறுபட வேதங்குரு
போதிப்ப தும்உணர் வாயே—பின்னால்
வாதைப்ப டுவதும் நீயே

7. வேதாந்த வீட்டின்வி ளக்கொளி கண்டவர்
மெய்யிலே தும்அணிந் தாரோ—யாவும்
பொய்யென வேதுணிந் தாரோ—பர
சையோக மேயுணர்ந் தாரோ
வெற்றிபுரி மாலையணிந் துற்றகுரு நாதனெடு
வெட்டவெ ளியினிற் சார்ந்தார்—பிர்ம்ம
நிட்டைபு ரிந்துமே தேர்ந்தார்

8. பெண்ணுசை யென்றும் பிதற்றித் திரிந்திடப்
பேதமை யேபிறந் தாயே—யோக
சாதனங் கள்மறந் தாயே—கொடும்
பாதக மும்பெருந் தீயே [மூன்றும்விடப்
பெண்ணுசைகள் பொன்னுசைகள் மண்ணுசைகள்
பேசுமெய்ஞ் ஞானிகள்பாதம்—தொழப்
பாசம கலுமே நீதம்

9. மாடுமக் கள்மனை வீடுசுற் றமற்பம்
வாழ்வுனக் கேன்மதி கேடா—மெத்தத்
தாழ்வெனக் கேனது கூடா—முத்தர்
ஞானவ ழிக்கிது யீடா
மனமேபெறு துணிவேபெற க்ஷணமாகிலுங்
[குணமோடிரு
வானமு தத்தினை மகிழ்வாய்—உண்ணும்
தேனமு தத்தினைத் தெளிவாய்

10. ஆறு சுவையொடு நீபுசி யாதிரு
அத்தன் திருவடி காணும்—யோக
சித்திக ளும்பல தோணும்—திட
பத்திவை ராக்கியம் வேணும்
அறமேபுரி துறவாதிகள் பணியேசெயத் துணிவாயிரு
அற்பசு கங்களும் ஒழியும்—ஈசன்
பொற்பதங் கண்டுமே தெளியும்

11. பந்தமு மற்றுப்ப ணியற்றுச் சற்குரு
பாதத்தைப் போற்றிடு சேயே—அருள்
வேதவி திப்படிநீயே பேதா
பேதகம் போக்கிடு வாயே
பலகாலமும் நிலையாகவே சலனுதிகள் விலகாதிரு
பஞ்சப்பொ றிபுல னடங்கும்—மாயா
வஞ்சப்பி றவிக ளொடுங்கும்

12. பாவம கன்றிட வேதமு ழங்கிடப்
பந்தமு னக்கினி யேனே—துன்பம்

சொந்தமென் றேநினைப் பேனே—அருள்
வந்ததென் ருல்விடு வேனே
பாசக்கயி றேநித்தியம் வீசித்திரி வார்களொடு
பக்ஷம றந்திடு மயிலே—அரு
ளிச்சைசு ரந்திடுங் குயிலே 30.

---

பல்லவி

வந்ததை ஒப்புக் கொள்வாய்—மனமே
வந்ததை ஒப்புக் கொள்வாய்

அனுபல்லவி

வந்ததுவே சிவன் தந்ததென் றறிந்து
சிந்தை மகிழ்ந்தே தேறித் தெளிந்து (வந்ததை)

சரணம்

1. மட்டுப் படாத கவலையை யொழித்தும்
வையகந் தன்னில் மகிமை யளித்தும்
வெட்ட வெளிதனில் பம்பரம் போல
விசைகொண் டாடிடும் விமலனைக் கூடி (வந்ததை)

2. பாசபந் தமதை வேரறத் தாக்கிப்
பஞ்சப் புலன்கள் பறந்திடப் போக்கி
ஆசை கொண்டுவெகு நேச மதாக
ஐயன் திருவடி யனுதினம் நோக்கி (வந்ததை)

3. நல்லது கெட்டது நமக்கினி யில்லை
நாவுக் கறுசுவைக் கஞ்சியே தொலலை
பல்லுயிர்க் கெல்லாம் பரமனே யிருக்கப்
பஞ்சமு முண்டோ பயம்நமக் கேது (வந்ததை) 31.

---

பல்லவி

மனமே நீயிந்த சகந்தனில் வாழ்க்கையை
மாயமென் றறிந்திடு நிசமே

அனுபல்லவி

தினமும் கிருபை புரிந்துபரசு கந்தருஞ்செக
தீசன் பாதத்தை நாடி—ஓர்மையாகக் கூடி (மனமே)

சரணம்

1. ஐந்துபேர் வாழ்கின்ற வீடு—அதில்
அறிவான பொருளொன்றை நாடு
பஞ்சுபோல் பறந்திடுங் கூடு—நாளைப்
பாவியெ மன்வந்தால் காடு (மனமே)

2. வினையினல் செனிக்குமித் தேகம்—நீ
வீண்காலம் போக்குவது மோகம்
அனைவர்க்கு முதவாதிப் பாகம்—இதை
அறியா திருந்தால்சந் தேகம் (மனமே) 32.

---

பல்லவி

மோசம் போகாதே மனமே நீ—மோசம் போகாதே

அனுபல்லவி

ஆசையு டன்பல வேஷமெ டுத்துநீ
அற்ப சுகத்தை அனுதினம் கைக்கொண்டு (மோசம்)

சரணம்

1. பார்தனில் பெற்றதாய் தந்தை யிருந்தென்ன
பக்ஷமு டன்பிறந் தாரிருந் தென்ன
ஊராரும் சுற்றமும் பெண்டீ ரிருந்தென்ன
உண்மையா கப்பெற்ற பால ரிருந்தென்ன (மோசம்)

2. சட்டமு டன்தேடி வைத்த பொருள்வீடும்
சார்ந்திடு மாடமா ளிகைபொன் மேடையும்
கட்டில்சோ பாமெத்தை கனக தண்டிகை
காணுத காட்சி அனேக மிருந்தென்ன (மோசம்)

3. நாடிய புண்ணிய பாவ மிரண்டும்
நம்மோடு கூட வருமே யல்லாது

தேடும்பொ ருளெல்லாம் கூடவராது
செகத்தில் வாழ்வை நம்பவொண் ணுது (மோசம்)

4. பற்றுத லில்லாத பாவியெ மன்வந்து
பாசக் கயிற்றினுல் கட்டிக்கொண் டோடையில்
உற்றதாய் தந்தை பெண்டுபிள் ளைசுற்றமும்
உன்கூட வருமோமயானமட்டுங்கண்டாய்(மோசம்)33.

---

பல்லவி

அல்லும் பகலும்நமக் கீசன் துணையல்லாது
ஆர்துணை உண்டுசொல்வாய் மனமே

அனுபல்லவி

தில்லை நடம் புரியும் சிவபெரு மானுடைச்
சேவடி போற்றுவாய் மனமே (அல்லும்)

சரணம்

1. பொல்லா ரிருப்பிடத்தில் போகாதே மனமே
பொல்லாங்கு நேர்ந்துவி டுங்கண்டாய்
நல்லா ரிருப்பிடத்தை நாடி நாடிநீ
நலத்தைத்தே டிக்கொள்வாய் மனமே (அல்லும்)

2. பாவிகள் இருப்பிடம் போகாதே மனமே
பாவங்கள் நேர்ந்துவி டுங்கண்டாய்
ஆவியொடுங்கு முன்னே ஈசன் திருவடியை
அறிந்து தேடிக்கொள்வாய் மனமே (அல்லும்)

3. பத்தர்கள் தொழுந்தில்லைப் பரம சிவனடியைப்
பணியாதிருந்தால் நமக்கு நாளை
குற்றம் வந்தெமன் கையில் சிக்கிக்கொள் வதுமலால்
கொடிய நரகந்தனி லழுந்து வதுநிசமே (அல்லும்) 34.

---

பல்லவி

மனதிற்கு எட்டாத மணியே—எந்தன்
அறிவிற்குக் கிட்டின குணமே

அனுபல்லவி

மனமி ருந்தவிடம் அறிவாகி நின்றநீ
வாக்கு மனத்திற்கொட்டா சாகரத்தில் நின்று (மன)

சரணம்

1. நாத விந்துதனில் நடுவாகி நின்றநீ
நாதாந்த வெட்டவெளி யோக வொளியுமாகி
போதங் கொண்டசிவ புண்ணிய ரறிவாகி
பொற்பீடந் தனில்நின்று கர்ச்சித்த சிலம்போநீ (மன)

2. இடகலை பிங்கலை இரண்டுமொன் ருகிய
யோக சந்நதிகண்டு நாத மொடுங்கிநின்று
விடைதனி லேறுமோ ரீச னமிர்தமுண்டு
மேவுங்குண் டலிதன்னை ஏக பதியில்தாக்க (மன)

3. நாவி னுனிமேல்வைத்து நாசி நுனியால் பார்க்க
நடனச பைதனில் நடிக்கும் சிலம்பொலி
மேவியே நின்றிட தோன்ரு தெல்லாந்தோன்றும்
விதத்தைத் தெளிவாக அறியவுங் கூடுமோ (மன)

4. கண்டா மணியோசை நாத வொளிகள் தோன்றும்
காட்சியை எவராலுங் காணவுங் கூடாது
தொண்டரறியும் விதம் விண்டாலுந் தோன்ருது
சுத்த அறிவுநிலை நிற்குண சூக்ஷுங்கண்டாய் (மன) 35.

---

பல்லவி

படுக்கை யேதுக்கு மனமே—படுக்கை யேதுக்கு

அனுபல்லவி

கடுக்கிட் டெழுந்த மனதை யுருக்கிக்
கார ணங்களைத் தெரிவ தல்லால் (படு)

சரணம்

1. பூமி யந்தமு நாதனுகிப் புவியி லன்பர்கள் நேசனுகிக்
காமி யங்களை யுறுதியென்றிடும் கசடுபலவுந் தணலதாகி
வாமி சுந்தரி யருகில்நிர்த்தனம் மகிழ்ந்துபுரியும் வள்ளலாகி
சாமி என்றிங்கே உலகத்தோர்கள் சாற்று மறையை அறிவதாகி (படு)

2. நீதமில்லா மனைவிமைந்தர்கள் நிச்சயமற்றதாம் வாழ்வைநம்பி
காதல்கொண்டு நற்செயலை மறந்து கரும மனைத்துங் கருதிக் கருதிப்
பாதகச் செயல்முழுதும் விரும்பிப் பாவிஎன்றசொல் பலரும் புகல
வேதனைப் படும்நரகில் வீழ்ந்து விபத்தை யடையும் விதத்தையறிந்து
(படு)

3. தீர்க்க மில்லாத மனதே ஐயன் செயலைமறந் திடாதே
காக்க வல்லோர் வறிவாய்மனக் கசடுபலவுந் தெளிவாய்
பார்க்கப் பார்க்க ஐயன்கிருபை பாலித்தருளும் பதத்தைத்
தேர்ச்சி யாகவே அடையும்விதம் தெரிந்து நடத்துவாயே (படு) 36.

---

பல்லவி

நித்திரை செய்யாதே மனமே—நித்திரை செய்யாதே

அனுபல்லவி

நித்திரை செய்தால் சத்துருவந் துன்னை
நிமிஷ நேரத்தில் குடிகெ டுத்திடும் (நித்திரை)

சரணம்

1. அத்தன் திருவடியை அனுதினம் நினைந்து
அல்லும் பகலுமா யன்புடன் புகழ்ந்து
பத்தி புரிந்துநீ பாவத்தைக் களைந்து
பரம பதமடையும் வழிதனில் நுழைந்து (நித்திரை)

2. ஆருதா ரப்பொரு ளென்று தெரிந்தும்
ஐம்பத்தோ ரக்ஷரம் ஆனத றிந்தும்
கூறுஞ் சுருதிபல வேதங்க ளுணர்ந்தும்
கொடிய சுகத்தைநீ திரணமென் றிகழ்ந்தும் (நித்திரை)

3. சித்தங் கலங்கித் தேறித் தெளிந்து
திருவருள் பெற்ற தொண்டர்களெல்லாம்
முத்தி யடைந்த வனுபவ மறிந்தும்
மூடத் தனமுனக் கேனினிச் சும்மா (நித்திரை) 37.

---

பல்லவி

கெட்டிக்காரத் தனங்களேது—மனமே
கெட்டிக்காரத் தனங்களேது

அனுபல்லவி

கெட்டிக்காரத் தனமென்று கட்டிபுக்தி யாலே
சொன்னால்
இஷ்டப்படும் போதேயையன் தட்டிக்கொடா
தேபோனால் (கெட்டி)

சரணம்

1. உலகம் கற்பிப்பதும் நாமோ—அதற்
குள்ளிருந் தாட்டுவதும் நாமோ
பலகலை பயின்றதும் நாமோ—பல
விளையாடல் செய்வதும் நாமோ (கெட்டி)

2. சந்திர சூரியர் நாமோ—அதைத்
தழுவிய வண்டங்களும் நாமோ
இந்திரன் வானவரும் நாமோ—கண்ட
எழுவகைத் தோற்றமும் நாமோ (கெட்டி)
கர்த்தன் பணிவிடையும் நாமோ—அதைக்
கருத்துட் கொள்வதும் நாமோ
முத்தர் பணிவிடையும் நாமோ—இன்ப
முத்தி கொடுப்பதுவும் நாமோ (கெட்டி)

4. ஐயன் படைத்ததெல்லாம் யார்க்கு—இதைப்
பொய்யென்று நினைக்கின்ற பேர்க்கு
பொய்யென்று நினைக்காத பேர்க்கு—ஐயன்
புகழ்கிடைக் கின்றதென்று தாக்கு (கெட்டி)

5. பஞ்சமா பாவங்களைத் தவிர்ப்பாய்—ஐயன்
பாதமே கெதியென்று துறப்பாய்
வஞ்ச வுலகங்களை வெறுப்பாய்—தினம்
மன்னுயிரைத் தன்னுயிர்போல் நினைப்பாய்
(கெட்டி)

6. பத்துக் கற்பனைகளு மில்லை—அதைப்
படித்ததா லாகுமோ நீ சொல்லு
நித்திய கர்மங்களைக் கல்லு—அதின்
நெறிகள் தவறலாமோ விள்ளு (கெட்டி)

7. பாராபர வஸ்துவு மொன்றே—அதைப்
பாராம லிருப்பதும் நன்ரு
சரிவர நடப்பது மென்ரு —அதைச்
சாராம லிருப்பது முண்டோ (கெட்டி)

8. லாயில்லா காலில்லா குவென்று—கலிமா
நவின்ரு லாகுமோ வொன்று
நேயமாக ரகிமான் கட்டளைப்—படி
நிலைத்தா லல்லவோ மிகநன்று (கெட்டி)

9. பாவங்கள் நீங்காத சொல்லு—ஐயன்
பக்தர்களுக் காகுமோ விள்ளு
கோபங்கள் நீக்கியே தள்ளு—நற்
குணமே கதிஎன்று கொள்ளு (கெட்டி) 38.

---

பல்லவி

ஏனுனக் கிந்த வாட்டம்—அறிந்திருந்தும்
ஏனுனக் கிந்த வாட்டம்

அனுபல்லவி

கோனொருவ னல்லாது ஈனம்நேருமோ செய்த
குற்றமிருந் தாலனுத் தப்பிதம் பொறுக்காதே (ஏனு)

சரணம்

1. நாம்தேடும் கர்மமிது நம்மைவிட் டகலாது
சார்ந்துனைக் கொல்லுமது சர்ப்பவிஷம் பொல்லாது
(ஏனு)

2. புண்ணிய பாவமிரண்டும் புனர்ச்சென்ம மெடுத்திடும்
பண்ணிய தவங்கள்பரி பக்குவம தடைந்திடும் (ஏனு)

3. மோட்சம் விரும்புஞ்சென்மம் முழுதுந் தொடருங்
கர்மம்
சூட்ச மிதுவேயென்று துன்பமின்பஞ் சகிப்பாய் (ஏனு)

4. பருவ மடைந்துமன்பர் பட்ட துயர்கள்யாவும்
சுருதி விளம்புகின்ற துறவு மறிந்திருந்தும் (ஏனு)

5. சத்தியந் தவருது தானந்தவ முயற்சி
நித்திய கர்மவிதி நேசானுபூதி பெற்றும் (ஏனு)

6. பக்தி வழியேசென்று பலசென்மம் புசித்தாலும்
முக்தி கிடைக்காதென்று மூத்தோ ருரைத்தமொழி
(ஏனு)

7. ஆணவ மாயைகன்மம் அகற்றுஞ்சற் குருபாதம்
காண வுருகிநாடிக் கண்டால் தெளிவுவரும் (ஏனு)

8, பஞ்சபூதப் பொறிகள் பரவும் புலன்களற்றுக்
குஞ்சித பாதமதைக் கூடிச் சுகித்திடுவாய் (ஏனு)

9. தற்பர சின்மயமாய்ச் சைதன்யப் பொருளாகிச்
சிற்பர மாய்விளங்குஞ் சிதாகாய வெளியிலே (ஏனு) 39

---

பல்லவி

சொன்னாலுங் கேட்ப தில்லையே—துறவாதி குணம்
சொன்னாலுங் கேட்பதில்லையே

அனுபல்லவி

முன்னா ளுனைப்போலவே மூட மதியுடையோர்
பின்ன பின்னங்களாகப் பிழையாலடைந்தகதி (சொன்)

சரணம்

1. ஆசைப் பிசாசைத் துரத்து—ஐயனடியை
அனுதினம் நெஞ்சி லிருத்து
பாசப் பகையை யறுத்து—ஸ்ரீ ஓமென்ற
பஞ்சா க்ஷரத்தை நிறுத்து (சொன்)

2. முத்தர்கள் பணிசெய் குவாய்—இருவினைகள்
அற்றுநற் கதியடை குவாய்
சித்தந் தெளியச் சிவமாய்வந்—துன்னைக்கூடிப்
பற்றும் பரம குருவாய் (சொன்)

3. மும்ம லங்களைப் போக்கு—பிராரத்வ கன்ம
முழுதும் புசித்து நீக்கு
நின்மல னடிதாக்கு—நிஷ்களங்கமாய்
நிஷ்டானு பூதி நோக்கு (சொன்)

4. ஆகைநிலை யுள்ள தல்லவே—கூற்றுவன் வந்தால்
காக்கவு நம்மாலு மில்லையே
சூக்குமம் அறிந்து நிலையே—சூக்ஷாதி சூக்ஷ்மம்
வாக்குமன மாதி வல்லையே (சொன்)

5. பெண்டு பிள்ளைக ளென்னுமே—சுற்றமும் வாழ்வும்
தண்டு முண்டான துன்பமே
பண்டு சொல்லனு தினமே—உற்றுணர்ந்துநீ
கண்டு தெளிவாய் மனமே (சொன்) 40.

---

பல்லவி

அருவுருவாகிய திருவடிதேடிடு மனமே—நித்யானந்த
அருவுருவாகிய திருவடி தேடிடு மனமே

அனுபல்லவி

அருவுரு வாகிய திருவடி யானது
அமரர் முனிவர்களு மறியவொண்ணாதது
கருணைம தம்மொழி கிருபைசு ரந்திடுங்
கரிமுக னட்சர வடிவில் வந்தவர் (அரு)

சரணம்

1. சனகாதி முனிவர்கள் தழுவிடும் பாதம்
சஞ்சலமுடையவர் நழுவிடும் பாதம்
கனக சபைதனிலே நடமிடும் பாதம்
கண்டவர் தரிசித்துக் களித்திடும் பாதம்
கற்ப காலமொடு நற்ற வாதிபுரி
முத்த ரானவர்கள் பெற்ற பாதமிது (அரு)

2. பஞ்சமா பாதகம் பறந்திடப் போக்கும்
பரம யோகிகள் பணிசெய்ய நோக்கும்
கஞ்ச மலர்ச்சரணம் கருத்துள்ளே தாக்கும்
காணாத திருவடி கலந்துனைச் சேர்க்கும்
கற்கண்டோ தேனோ சர்க்கரைப் பாகோ
கனியொடு கலந்திடு ரசமோ பாலோ (அரு)

3. நாத கீதமொடு நடனவி லாசம்
நடிக்கும் ரகசியங்கள் மதிக்க வுல்லாசம்
பாதச் சிலம்பொலிகள் பளபள வீசும்
பகரவென் றால்சேட னாவே கூசும்
பத்ம பீடமெனும் ரத்ன மேடைபல
சித்ர மாகவெகு பொற்பிர காசமுயர் (அரு)

4. நம்மால் துதிக்கவென்ருல் நாவுபோ ராது
நாதம் ஒலிக்குமொலி செவிக்கு ஏருது
சும்மா வியக்க வென்ருல் துணிவு வாராது
சொப்பனங் களிலுநாம் காணக் கூடாது
துரிய மானவழி தெரிய வேகமொடு
துயர மானபவ மகல வேவுருகி (அரு)

5. ஓகோ அனந்தமறை யோலமிட் டிடுமே
ஒருவருங் காணுத ஜாலங்காட் டிடுமே
பாகோ மெழுகோவென்றும் பதங்கள்கூட் டிடுமே
பழுக்கும் பருவமானுல் நாவுக்கெட் டிடுமே
பற்பல கனிகளு முக்கனி யாமோ
சற்சனர் தேடிடும் நற்கனி யிதுவே (அரு) 41.

---

பல்லவி

வாராய் கண்மணியே — என்னருகினில்
வாராய் கண்மணியே

அனுபல்லவி

வாராயென் னருகினில் மயிலே குயிலன்னமே
தீராத கவலையைத் தீர்க்குஞ் சமயமிது (வாராய்)

சரணம்

1. பச்சைக்கிளியே பசுங்கிளியே உன்தன்
இச்சை களிருந்தும்யான் ஏகிய தறியாயோ (வாராய்)
2. முத்தே பவளமே முழுநீலக் கோமளமே
உத்தமர்க ளுக்கெல்லாம் உறவாக வேணுமே(வாராய்)
3. திக்குத்திக் கந்தமெல்லாம் திசைகட்டி யாளவே
பக்கத் திருந்துபார்க்கப் பாவையே நீவந்து (வாராய்)
4. எதிர்த்தோரை ஜெயங்கொள்ளும் எமனென்று மதியாமல்
மதிக்காத பேர்களை மண்டிச் சிதைசெய்வாய் (வாராய்)
5. பூதக ணங்களெல்லாம் புறப்படுஞ் சமயங்கள்
நீதி தவறும்பேரை நிர்த்தூளி செய்குவாய் (வாராய்)
6. சத்திக ளெல்லோருஞ் சங்கமாய்க் கூடியே
வெற்றி புரியவந்த வேடிக்கை யறியாயோ (வாராய்)

7. எட்டுத் திசையும்பதி ஞறு கோணமும்
துஷ்டர்கள் மாளவே சுயக்கொடி நாட்டினேன்
(வாராய்) 42.

---

### சந்தப்பாடல்

1. மந்திர மொன்றை நினைந்து நினைந்து
மனங்குவி யும்படி சிந்தை தெளிந்துநீ வாடுவாய்—தினந்—
[தேடுவாய்
மற்கட கப்பிடி யொத்துநி லைத்திடு
சித்தமு றக்கவெ ளிப்படு நிர்த்தனம் மயிலே-கூவுங்-குயிலே

2. பந்தம கன்றிட வந்துந டம்புரி
தந்திமு கன்பத மென்றுவ ணங்கிடு பதமே—சிவ—பதமே
பற்பல கோடிச னித்தச னிப்புகள்
அத்தனை யுந்தவிர் நற்பத மிதுவே பாராய்-நுட்பம்-பாராய்

3. சந்திர சூரியர் வந்துபொ ருந்திடும்
அந்தர மேவொரு மந்திரமென்பது சாருவாய்-நிலை-சாருவாய்
சத்திய மென்றேயு ரைந்திடு வேதம்
அசத்திய மானது நித்திய மாகா தர்மமே—இது—தர்மமே

4. அந்தர மேவிநு ழைந்திடு வாய்பல
தந்திர மாகவே விந்தைபு ரிந்திடும் அற்புதம்-வெகு-அற்புதம்
அத்துவி தத்தில்மு ளைத்திடு கற்பக
சித்தியெ னத்தரு முத்தியு மிதுவே அறிவாய்—உண்மை—
அறிவாய் 43.

### பல்லவி

போதும் போது மையே—எடுத்த சென்மம்
போதும் போது மையே

### அனுபல்லவி

ஏது மறியாத பாலக னென்று நீர்
எத்தனை சென்மமோ ஏமாற் றியதினி (போதும்

### சரணம்

1. கால காலந்தோறும் நீதி தவருது
கட்டளை யிட்டிடுமோர் கடனுமக் கிருந்தும்

கோலங்கள் செய்திடுஞ் சாலங்க ளேதுக்கு
குணங்குறி யறியாத குழவியென் றறிந்தும் (போதும்)

2. மாதர் மக்கள்மனை மீதிலாசை வைத்து
மருவி யிருந்ததோ ரறிவுகள் யாவையும்
பேதமறச் செய்துன் திருவடி சேர்ந்திடப்
பெருங்கருணைசெய்யா திருந்தா லுனைவிடேன் (போதும்)

3. வேதங்கள் வேறு ஆகமங்கள் வேறு
விதித்ததோர் சாஸ்திர வினைகளும் வேறு
சாதி சமயமும் வேறு வேறாகவே
தத்துவம் தொண்ணூற்றாறாய்ப் பிரித்தது மறிந்தேன் (போது)

4. அண்ட பிண்டசரா சரங்களும் வேறோ
ஆதி யந்தமாய் நின்றதும் வேறோ
தொண்ட ரிருதயத் தகப்பட்டுக் கொண்டுநீர்
தூங்காமல் முழித்த முழிதெரி யாதோ (போதும்)

5. உந்தன் சமத்தெல்லாம் தொண்டர்க ளிடத்தில்
உலகமெல் லாஞ்சுத்தி ஒளிந்தாலு முடிந்ததோ
எந்த னிடத்திலு முந்தன்ச மத்தெல்லாம்
இனிமேல் நடக்காது நடக்காது சொன்னேன் (போதும்)

6. உலகம் வணங்கும்படி உயர்த்தி வைத்தாலும்
உடனே இகழும்படி தாழ்த்திவிட் டாலுங்
கலகப் படுத்தியெந்தன் சிரசைக்கொய் தாலுங்
கையுங் காலும்வெட்டித் தறித்தாலும் உனைவிடேன் (போதும்)

7. எத்தனையோ சித்துகளை எதிரில் காட்டினாலும்
ஏமாத்து செய்வதினிப் பலிக்காது பலிக்காது
செத்த பிணம்பிழைத்து வந்தாலு முனைநம்பேன்
சென்ம மெடுக்கவினி முடியாது முடியாது (போதும்)

8. நம்பின தொண்டர்களை மோகங்கள் செய்துநீர்
நாட்டிற் குடிகெடுத்த வகைதெரி யாதோ
அம்புவி போற்றிடப் பெருஞ் சித்து களைக்காட்டி
அநேக தேவர்களுக் கிடுக்கண்கள் செய்தது (போதும்)

9. உண்மை தெரிந்தவர்கள் உனைநம்பு வாரோ
உத்தமர் களுக்கெல்லாம் பத்தி பிடிக்குதே
எண்ணங்கள் பலகோடி இருந்தாலு மன்பர்கள்
ஈடழியச் செய்துபர வீடளிக்குஞ் சுகமதில் (போதும்)

10. விதித்த விதிகளும் சாதி சமயமும்
விருப்பும் வெறுப்புமோ இனியெனக் கேது
களிக்கும் பெருவழியில் சுகதுக்க மேது
கைவி டாதெனைக் கலந்துகொள் வீரே (போதும்) 44.

---

### பல்லவி

எனக்கொன்றும் வேண்டாநின் பதமல்லா மல்வேறு
எந்தையே சிவ சிந்தையே உனை எப்படிக் காணுதிருப்பது

### அனுபல்லவி

சனித்த சனனமெல்லாம் வீணுகப் போச்சு திந்த
சனனமாணுலு முனக் கடிமைகொள் வாய்நாதா
சிற்பரா அருள் தற்பரா உந்தன் சேவடிப் பதமே துதித்திட (எனக்)

### சரணம்

1. உனக்கு மெனக்கு மந்நா ளுறவுபற் றியகாலம்
ஒன்ருய்க் கலந்திருந்த துண்மை ரகசியம்
நினைப்பினில் மறக்குமோ நீ செய்த நன்றி
நெடுங்கால மாகவே ஒருவரு மின்றி
நிருவிகற்ப சமாதியிற்புகும் நிஷ்டைதந்தரு ளற்புதாயினி (எனக்)

2. சமய குரவர்நால்வர் சதுர்மறை மொழிந்ததும்
சனகர் முதல்முனிவர் சாதித்த சாதனமும்
மமதை சற்றுமில்லாத மகான்செய் கண்டனமும்
மார்க்கண் டருக்காக மறலியை வுதைத்ததும்
மானிடத்திரு மேனிசாத்தியும் மார்க்கமாகவே வந்துகாட்டினை (எனக்)

3. பரம பாகவதர்கள் பரிபாஷ யுரைத்ததும்
பராசரன் மைந்தன் சொன்ன பதினெட் டொருபுராணம்
அரிசிவ பத்தி யென்னும் அனேக சமயங்களும்
அந்தரி யாமியத்துவ வுபநிட தங்களும்
ஆகமத்துடன் வேத சுருதிகளரியபாஷைகள் பலவும் நீயலவோ (எனக்)

4. அறிவிலாச் சேயனே அன்போ டணைத்துநீயும்
அத்துவித உண்மையை அறிவித்தும் அறியாத
பிரிவில்லா ஒன்ருன பிரமசை தன்யத்தைப்
பிரிவற வுணர்த்தியும் பேதமை யென்னசொல்வேன்
பிராணன் மனதெனப் பிரிக்கும்பேதமை பிரிவிலாதநிற்
குணமுமாயினுய் (என) 45

---

### பல்லவி

கோலங்க ளேதடி குயிலே யிந்த்ர—சாலங்கள் தானடி மயிலே
கோலமோ யிதுசாலமோ வென்ருய்-கோலங்க ளேதடிகுயிலே

### அனுபல்லவி

கோடானு கோடிகதிர் வீசும்பிர காசத்துடன்
கூர்மையாய்—வெகு—நேர்மையாய்
கொக்கர கோவென்று கூவுங்-குதித் திக்கரைக் கேவந் துலாவும் (கோ)

### சரணம்

1. வேலைப்பொ ருதிடுங் கண்ணுள் சஞ்சித மீதிப்பொருளென முந்
விந்தையோ—யிது—விந்தையோ [நாள்
கூலிக்கு வேலைசெய் தந்நாள் குறை வேலைக்கு வந்தோமே யிந்
குற்றமோ—யிது—குற்றமோ [நாள்
கூவுங்குயில் பேசாதது உலாவுங்குயில் காணுதது
கூப்பிடு மோயிந்த நேரம் வந்த கப்படுமோவெகு தூரம் (கோ)

2. ஆங்காரங் கொண்டுநீ கூவி அரன் கோட்டைக்குள் ளேவந்து
அற்பமோ—யிது—அற்பமோ [தாவி
நீங்காது சென்மமென் றேவி யிந்நி லத்தில்வந் தோமடி பாவி
நிலையோ—யிது—நிலையோ
நித்திரைபோ காதையனைச் சற்றேமற வாதேநினை
நீங்குவ ரோநிர்த்தன மாடி யரு ளோங்கும டிநம்மைக் கூடி (கோ)

3. மும்மூர்த்தி களுமொன் ருகி முக்கு ணங்களா கப்பிரி வாகி
மூலமாய்—விந்து—மூலமாய்
சன்மார்க்க மேபெரி தாகித் தவ முடித்தாரடி மோகி
சத்தியாய்—ஞான—சத்தியாய்

தத்துவ முழுதுந்தெரிந்தும் சகலகலையு முணர்ந்தும்
சற்குரு வன்னியி லாகாதடி முத்திமோ னநிலை கூடா (கோ)

4. வேசிய ராசைகள் மறந்து விருப் புவெறுப் பற்றுத் துறந்து
வேகமாய்—அதி—வேகமாய்
ஆசைய பிமான மகன்று அகம் புறம்சுத் தமாய்க் கலந்து
அந்தமாய்—வே—தாந்தமாய்
அட்டாங்க யோகநிலை முற்றுந்தெனி வாகிவிடில்
அன்புடன் சற்குரு வருவார் இன்ப மோனநிலைதனைத்தருவார்(கோ)

5. சற்குரு வைத்தேடும் பாதை யிது சகலருக் கும்வரும் போதை
சலனம்—நிற்—சலனம்
மெய்க்குரு வந்த போதே விளக் கஞ்செய் வாரடி கோதே
விகற்பம்—சங்—கற்பம்
வேதாகம புராணநிலை சரியைகிரி யாயோகமும்
மெய்யில் விளங்குமடி நித்தம் வீணுய் வெளியி லேதடி
கற்பம் (கோ)

6. கற்ப மென்பது ஞானம் கச டற்ற லல் லடி மோனம்
காட்டிலோ—யில்லை—நாட்டிலோ
பற்பல வென்று நாட்டிலே பலர் பகரு வாரடி தொல்லை
பாசமே—யிது—பாசமே
பன்னூல்களும் முன்னேர்களும் பாசித்த வுபாசிதனைப்
பாசாண்டிக ளெப்படி யறிவா ரடி பற்றற்ற லல்லோ
தெரிவார் (கோ) 46.

———

## சுத்தாத்துவித நிலை

### பல்லவி

ஏதேது செய்திடுமோ-அடிமைகொண்டும்-பிறவி நீங்க
ஐயனேயினி—எத்தனை நாள்செல்லுமோ

### அனுபல்லவி

வாதேது செய்யினும் சோதனை யாகுதே
வலியவந் தாட்கொண்ட மரபையா னறிகிலேன் (ஏதே)

சரணம்

1. சரியை கிரியாயோக ஞானபா தமுங்காட்டித்
தானான விடந்தனில் சமரச மாய்நின்றும்
அரிபிர்ம்ம ருத்திரன் மகேஸ்வரன சதாசிவன்
அருவ வுருவமுள்ள ஆனந்தத் தழுத்தியும் (ஏதே)

2. பிருதிவி யப்புத்தேயு வாய்வொடா காயமும்
பெருத்த பஞ்சபூத பௌதிக மாச்சுதே
சோத்திரம் தொக்குசட்சு சிங்குவை ஆக்ராணம்
தொடர்ந்த சத்தபரிச ரூபர சகந்தமும் (ஏதே)

3. வாக்குப் பாதம்பாணி பாயுரு பத்தமுடன்
மனம்புத்தி சித்த மகங்காரம் நான்குமே
போக்குவரவுள்ள ரேசக பூரகம்
பொருந்துங் கும்பகந்தனில் பிராணன பானன்சென்று (ஏதே)

4. சூதான பாஷைகள் யாதொன்றுந் தோணுது
சொர்ப்பன சாக்ர சுழுத்தி தனில்நின்று
ஆதார மானதோ ராறுக்கு மேலாக
அமைந்த துரியமதில் துரியாதீ தங்காணுமல் (ஏதே)

5. அஷ்டாங்க யோகத்தி லழுந்தி யிருக்குங்காலம்
அறிவோடு கலந்ததை யார்தா னறியக்கூடும்
நிஷ்டை முடிவிலே நேச நிருவிகற்ப
நிலைபற்றும் நீயென்றும் நானென்றும்பேதமோ (ஏதே)

6. வாகான கண்மூக்குச் செவிகள் பொறிகளென்றும்
வாய்த்த ஊறுசுவை ஒளிநாத மோசையென்றும்
ஐயையோ யிதுபற்றும் பொறிபுல னுயிருந்தும்
ஆசையெ லாமடக்கி யருளொடு கலந்ததை (ஏதே)

7. ஆன்மாக்கால் மூன்றையும் அறிவொடு கலந்துமே
ஆகாமிய பிராரத்வ சஞ்சித மூன்றுடன்
நானான கோட்டைக்குள் தத்துவப் பொருளெல்லாம்
நமனுக் கிடமில்லாமல்தனித்துநீ கொள்ளைகொண்டும் (ஏதே)

8. இருக்கு யசுர்சாமம் அதர்வணம் நான்கினுள்
இயைந்தன சூக்கும சாத்திர முண்டாக்கிப்

பக்குவ மாயெங்குந் தானுயி ருந்துகொண்டு
பலதொழில் செய்வதன் பயனை யறிந்திருந்தும் (ஏதே)

9. இயற்கை யகப்பற்றுப் புறப்பற்று நீங்கியும்
எல்லா மிவனுகி யிரண்டறக் கலந்தபின்
பார்த்த விடமெல்லாம் பராபர மொன்ருகிப்
பக்குவ ஞானிகள் பட்டபா டுகள்பொய்யோ (ஏதே)

10. நாமே பிர்ம்மமென்று நவிலவுங் கூடுமோ
ஞானிகள் நகைப்பரென் றெண்ணவும் வேண்டாமோ
ஆமோ அண்டபிண்ட சராசர மிவனுலே
ஆதித்தன் சந்திரன் நட்சத்திரமிவையெல்லாம்(ஏதே)

11. இவனே பிர்ம்மமென்ருல் இறப்புப் பிறப்பேது
எத்தவத் தோர்கட்கும் நினைப்பு மறைப்பேது
தவநெறி யுணர்ந்தோர்கள் சாற்று மறைகளெல்லாம்
தப்பா துனையன்றியொ ரணுவு மசையாது (ஏதே)

12. அன்ப ரிருதயத்தி னருகிற் குடியிருந்து
ஆனந்தக் கூத்தாடி யருள்விளை யாடலெல்லாம்
சென்ற விடங்களெல்லாஞ் சீராட்டிச் சீராட்டிச்
செப்புங்க லைகளெல்லாந் தெளிவாகத் தெரிந்தபின்
(ஏதே)

13. மனேவாக்குக் காயங்கள் மூன்றுமுன் னிடமாக
வைத்தநாள் முதலாக வருகின்ற செயலெல்லாம்
உனக்கே பொறுப்பல்லாது எனக்கினிச் சுமையேது
உண்மை யிதுசத்திய முய்வதின் பயன்சொல்வாய்
(ஏதே)

14. வாலை புவனை திரிபுரை யென்றுமே
மனேன்மணி வாயிலில் வைத்த புதையல்கள்
மேலே நாதவிந்து சத்தி சிவமாகி
வெளியொளி யானப ரம்பரா பரையாகி (ஏதே)

15. கள்ள வேடந்தரித்துக் கபட மனதில்வைத்துக்
கல்விப் பயிற்சிசெய்துங் கர்த்தனை யறியாமல்
உள்ளந் தெளிவதற் குண்மைஞா னந்தோன்ருமல்
உலகிற் பாசாண்டிக ளெதிரில் திரிவதாலே (ஏதே)

16. வித்து வரன்வரியான் வரிட்ட மென்றநான்கும்
மேலான ஞானிகள் முடிவி லடைந்ததாலே
அத்துவித முடிவை யார்தா னடையக்கூடும்
ஆண்டவனேயுன்னேவேண்டினவர்க்கல்லது(ஏதே)47

———

பல்லவி

ஆதிபராபரமே அடிமையை—ஆட்கொண்ட சூட்சமடி

அனுபல்லவி

சோதி சொருபத்தை யானறி யாமலே
சொல்லாமல் சொல்லுஞ் சுகத்தி லிருத்தியே (ஆதி)

சரணம்—கண்ணிகள்

1. சித்த பரிபாகஞ் செய்யத் திருவருள்
உத்தம மாய்வந் துறவு கலந்தது (ஆதி)
2. தேகமே யானென்றும் யோகஞ்செய் தேனது
மோகமென் றேபரி பாகஞ் செய்தானடி (ஆதி)
3. தத்துவம் நானென்றே பத்திசெய் தேனது
குற்றமென் றேபரி சுத்தஞ்செய் தானடி (ஆதி)
4. யானென தென்னுஞ் செருக்கறுக்கத் தெய்வம்
மானிட மாகவே வந்த ததிசயம் (ஆதி)
5. எங்கும் நிறைந்தப ரம்பொரு ளைக்காணச்
சங்கையு முண்டோயித் தாரணி தன்னிலே (ஆதி)
6. நித்திய மொன்றே யிருக்க வநித்தியம்
சத்திய மென்று நினைத்தது தப்பிதம் (ஆதி)
7. இரேசக பூரகம் கும்பத்தி லேநிற்க
இராசயோ கமெனும் வாசிக்குப் பேரென்றும் (ஆதி)
8. பத்தி புரியப் பலதொழில் காட்டியும்
முத்தியைக் காணமு டிவுஞ்சொன் னனடி (ஆதி)
9. வேத விதிப்படி பூசைகள் செய்யென்றும்
ஆதி பரம்பரை யாகத் தொடர்ந்திறை (ஆதி)
10. சாதனை செய்யச் சகுண வுபாசனை
வேதனை யென்றும் விளக்கி வைத்தானடி (ஆதி)

11. யாகாதி கிர்த்தியங் காமிய பலமென்றும்
யோகி வெறுத்தா லுருக்கம் நிறைந்திடும் (ஆதி)

12. தன்னுயிர் போலவே மன்னுயிர் காப்பதும்
சத்திய மென்று நடக்கும் படிசெய்த (ஆதி)

13. சரமச ரங்கள் யாவுமவ னென்று
சத்திய மாகச் சுருதிசொன் னமொழி (ஆதி)

14. பச்சிலை யென்றும் பறிக்கத் துணியாதே
சச்சிதா னந்தமென் ருருந்தெ ரிந்திலர் (ஆதி)

15. முப்பாழ் கடந்த முமூட்சுக ளுக்கல்லோ
அப்பாலொன் றேசச்சி தானந்த மாகுமே (ஆதி)

16. சாதி பேதாதி சமயம் வகுத்ததும்
நீதியா சாரம் நெறிபத்தி தோன்றிட (ஆதி)

17. ஆதார மாறுங் கடந்துநின் ருலருள்
வேதாந்த வீட்டின் விளக்கொளியே யென்றும் (ஆதி)

18. அட்சர மாதிய மைந்திடுஞ் சூத்திரம்
இச்சை வெறுத்தோ ரிடங்காண லாமென்றும் (ஆதி)

19. பேரின்ப வீட்டிற் பெரியம ருந்தொன்றை
யாருந்தெ ரியாத லைந்துகெட் டாரென்றும் (ஆதி)

20. மெஞ்ஞானி கண்ட நூல் மெய்யென்று காட்டியும்
அஞ்ஞானி காணல ரிதாகு மேயென்றும் (ஆதி)

21. சித்த புருடர்கள் தேகந் தனிலுள்ள
தத்துவ மேமருந் தாகமொ ழிந்தாரென் (ஆதி)

22. முப்பூ வொன்ருய் முடிந்த யிடமல்லோ
அப்பு வென்றும றிஞரு ரைத்தாரென் (ஆதி)

23. சிவச்செய லென்றுஞ்சீ வச்செய லென்றும்
தவத்தி லுள்ளோர் தரம்பிரித் தாரென்றே (ஆதி)

24. அந்தக் கரண மொடுங்காத சீலர்கள்
சிந்தை கலங்கித் தெளிவடை யாரென்றும் (ஆதி)

25. ஆதியந் தம்வரை தேடியுங் காணுத
பாதத்தை யான்கண்டு பற்ற வருள்செய்த (ஆதி)

26. சரியை கிரிகைகள் யோகமுந் தாண்டிய
சந்நதிக் கல்லோயிச் சாட்சி கொடுத்தது (ஆதி)
27. என்னைத் தடுத்தெம் மிறைவன் பணிகொள்ள
தன்னைக் கொடுத்த ததிசயமென்சொல்வேன் (ஆதி) 48

---

ஆநந்தபைரவி ஆதி

## நிஷ்டானுபூதியிலுதித்த குறி

1. குறிசொல்லக் கேளம்மா குறிசொல்லக் கேள்
கோதையர்க் கரசேநான் குறிசொல்லக்கேள்
2. ஆதியில் கந்தமலை பெண்ணினரசே — நான்
ஆனந்தக் குறச்சாதி பெண்ணினரசே
3. ஆலயங்கள் சுத்திவந்தேன் பெண்ணினரசே-யென்னை
அழைப்பார்க ளாருமில்லை பெண்ணினரசே
4. கோவில்கள் சுத்திவந்தேன் பெண்ணினரசே—யென்னைக்
குறிகேட்பா ராருமில்லை பெண்ணினரசே
5. தெருவீதி சுத்திவந்தேன் பெண்ணினரசே-யென்னைத்
தேடுவா ராருமில்லை பெண்ணினரசே
6. கோல மயிலழகி பெண்ணினரசே — யென்னைக்
கூவி யழைத்ததென்ன பெண்ணினரசே
7. அன்ன நடையழகி பெண்ணினரசே—யென்னை
அழைத்த விதங்களென்ன பெண்ணினரசே
8. குறிகள் தெரியுமோடி குறத்திப் பெண்ணே — நீ
குறிப்பாகச் சொல்வாயோடி குறத்திப்பெண்ணே
9. ஆனைமுகக் கடவுள் கிருபையி னால் — நான்
அஞ்சாது குறிசொல்வேன் பெண்ணினரசே
10. வேழமுகக் கடவுள் கிருபையி னால்— நான்
வேண்டுங்குறி சொல்லிடுவேன் பெண்ணினரசே
11. கேட்குங்குறி சொல்லிவிட்டால் குறத்திப்பெண்ணே-நீ
கேட்டதை யான்கொடுப்பேன் குறத்திப்
பெண்ணே
12. நாட்டுக் குறத்தியல்ல பெண்ணினரசே—குறி
நன்ருகச் சொல்வன்கேளாய் பெண்ணினரசே

13. ஐந்து கரத்தோனே யெந்தன் குருவே
ஆனைமுகத் தோனே யெந்தன்குருவே

14. தொந்தி வயிற்ருேனே யெந்தன் குருவே
துதிக்கை யுடையவனே யெந்தன்குருவே

15. வள்ளிகண வாகுமரா யெந்தன் ருருவே
மயில்வாக னக்கடவு ளெந்தன்குருவே

16. சிவனே யுமையவளே யெந்தன் குருவே
தேவிலட்சுமி கோபாலா யெந்தன்குருவே

17. சரசுவதி பிர்ம்மாவே யெந்தன் குருவே
சகலகுல தேவதைக ளெந்தன்குருவே

18. பெண்ணரசி கேட்குங்குறி யெந்தன் குருவே—யணுப்
பிசகாமல் சொல்லவேணு மெந்தன்குருவே

19. ஏழை மனத்திருந்து எந்தன் குருவே—குறி
இன்பமாகச் சொல்லவேணு மெந்தன்குருவே

20. மனதில் திகைத்த குறி முழுமையுமே
வகையாகச் சொல்லிவாரேன் குறத்திப்பெண்ணு

21. கேளம்மா பெண்ணரசே நினைத்த குறி
கீர்த்தியுள்ள கன்னியவள் பருவம்வந்தும்

22. மங்கள மாகாத கவலை யொன்று
மணவாள ரின்னுரெனக் குறிப்பறிய

23. தேனே நீ யெந்தனிடங் கேட்ட துண்டு
தெளிவாகச் சொல்லுகிறேன் நன்ருய்க்கேளாய்

24. அநேகர்கள் கேட்டதுண்டு பெண்ணி னரசே
அவர்களுக்குக் கிட்டாது பெண்ணினரசே

25. கனவுகள் கண்டதுண்டு பெண்ணினர சே—யதில்
கண்காட்சி யானதுண்டு பெண்ணினரசே

26. மணமு முடிக்கவென்று பெண்ணினரசே—யிங்கே
மணவாளர் வந்ததுண்டு பெண்ணினரசே

27. ஆர்க்குந் தெரியாது பெண்ணினரசே—அவர்
ஆனந்த முள்ளாரம்மா பெண்ணினரசே

28. இராசக் கிரீடமது பெண்ணி னரசே
இரத்தின மாலையது பெண்ணினரசே
29. சாலக்கண் ணுடியது பெண்ணி னரசே
சகலருக்குந் தோன்ருது பெண்ணினரசே
30, அற்புதக்கண் ணுடியது பெண்ணி னரசே
அன்பருக்குத் தோன்றுமம்மா பெண்ணினரசே
31. கன்னிகைக்கு மணவாள ரதுவேயல்லால் – வேறு
கலக்கமு முண்டோசொல்வாய் பெண்ணினரசே
32. காரண முடிக்க வென்று கன்னியவளும்
கலியுகத்தில் வந்ததுண்டு பெண்ணினரசே
33. மூட ரறியார்கள் பெண்ணி னரசே
மூர்க்கமுள்ள கன்னியவள் பெண்ணினரசே
34. தன்னை யறியவில்லை பெண்ணினரசே—யினித்
தானு யறிந்துகொள்வாய் பெண்ணினரசே
35. கால மிருக்குதென்று தெரிந்து கொண்ட – அவர்
கடுகப்போய் நின்றதுண்டு பெண்ணினரசே
36. தேடித் திகைத்ததுண்டு பெண்ணினரசே—யவர்
சென்றவிடந் தூதுவிட்டாய் பெண்ணினரசே
37. கலக்கமும் வேண்டாமம்மா பெண்ணினரசே – யவர்
கலங்காத கண்டனம்மா பெண்ணினரசே
38. கலியுகத்தில் துட்டர்களைப் பெண்ணினரசே – யவர்
கண்டிக்க வந்தவர்தாம் பெண்ணினரசே
39. அன்பர்களைக் காக்கவந்தார் பெண்ணினரசே – யிது
ஆர்க்குந் தெரியுமம்மா பெண்ணினரசே
40. மண்ணுளு மிராசனவர் பெண்ணினரசே—யிந்த
மார்க்கங்குறி தோன்றுதம்மா பெண்ணினரசே
41. சமீபத்தில் மங்களங்கள் நடக்குமம்மா – யதில்
சந்தேக மேதுமுண்டோ பெண்ணினரசே
42. குறிசொல்லி முடிந்தபின் வெகுமதிகள்
குறத்திப்பெண்பெற்றுக்கொண்டு நடந்தனளே 49

---

## அருள் தங்கம் பாட்டு

1. பூத்திருக்குஞ் சோலையிலே ஏ தங்கம்—பூங்காவ னத்தருகே
காத்திருந்த பாவனையே தங்கம் கண்டுபிடிக்கவில்லை

2. ஏதுக்கு வந்தாரடி ஏ தங்கம்—இத்தலங்கள் பார்ப்பதற்கோ
மாதுசி ரோன்மணியே தங்கம் மாலையிட்டுப் பார்ப்பதற்கோ

3. வேடிக்கை பார்த்தாயோடி ஏ தங்கம்—விளையாடும் வேளையிலே
வேடிக்கை யாகுமோடி தங்கம் வினயமுள்ள பிரம்மவித்தை

4. கண்டு பிடிக்கவந்த ஏ தங்கம்—கண்ணனது வேலையடி
கண்டு பிடித்தாரோடி தங்கம் கன்னியிருப் பிடத்தை

5. முன்னுல் தெரியுமோடி ஏ தங்கம்—மூட வுலகத்துக்குப்
பின்னுல் தெரியுமடி தங்கம் பிரியமுள்ள வாசனைகள்

6. திருட ரறிவாரோடி ஏ தங்கம்—தீர்க்கமுள்ள பிரம்மவித்தை
அறிவுள்ள மானிடர்கள் தங்கம் அறிந்துகொள்ளச் சக்தியுண்டு

7. பார்க்க மறைவுமுண்டு ஏ தங்கம்—பார்த்திருக்கச் சோதியுண்டு
தீர்க்கமுள்ள மாதவர்க்கு தங்கம் தெரிசனங்கள் தோன்றுமடி

8. தேடிப்பிடிக்க வில்லை ஏ தங்கம்—தேசமெங்கும் பார்த்ததில்லை
நாடி யிருக்கையிலே தங்கம் நாதனுக வந்தாரோடி

9. அற்புதக் காட்சியல்லோ ஏ தங்கம்—அவருடைய தெரிசனங்கள்
சொற்பெரிய மாதவர்க்கு தங்கம் சுயரூபந் தோன்றுமடி

10. ஆசையுள்ள கண்ணுட்டி ஏ தங்கம்—அறிவுள்ள சீமாட்டி
பாசக்கடல் கடந்தால் தங்கம் பரமபதம் சேரலாமே

11. எந்தன்குரு நாதா ஏ சாமி—யெனக்குரைத்த காரியங்கள்
அந்தமுடி வல்லோ சாமி ஆரறியப் போகிறுர்கள்

12. புத்திகள் வந்ததையா ஏ சாமி—போதனைகள் செய்ததன்பின்
இத்தனை நாளாக சாமி எடுத்துரைப்பா ராருமில்லை

13. ஆசை யொழித்து விட்டேன் ஏ சாமி—அபிமானம் விட்டுவிட்டேன்
பாச மொழித்து விட்டேன் சாமி பரமபதம் சேரவென்றே

14. சாலோக சாமீபம் ஏ சாமி—சாரூப சாயுச்சியம்
நாலு பதவியுண்டு சாமி நற்கதிகள் சேருதற்கே

15. காலங் கலிகாலம் ஏ சாமி—கலிக்குவந்த நாதனல்லோ
பூலோக முய்யுமென்று சாமி பூம்பறைகள் சாத்திவிட்டேன்

16. காணாத காட்சியெல்லாம் ஏ சாமி—கண்டுகொண்டே னிச்சமயம்
பூணாத பூண்டல்லவோ சாமி பொன்னடியைச் சார்ந்துவிட்டேன்

---

## கணபதிக் கண்ணி

1. எந்தன்வினை தீர்த்தவனேஎன்னையாட் கொண்டவனே
சிந்தைதனி லேயுரைத்த சிற்பரக் கணபதியே

2. தந்திமுக மிலங்கச் சதுர்ப்புயங் கள்துலங்கத்
தொந்திவயி றுகுலுங்கத் துதிக்கை யுலாவிவர

3. முக்கண் ணுடையவனே மும்மதத்துக் குஞ்சரனே
சிக்கறுத்த தூயவனே சித்திபுத்தி நாயகனே

4. மூஷிக வாகனனே முத்திக் கனுகூலனே
நேசமுடன் அன்பருள்ளம் நிறைந்தபரி பூரணனே

5. பந்தம் அறுத்தவனே பாச மொழித்தவனே
கந்தனுக்கு முன்னவனே கலிதன்னைத் தீர்த்தவனே

6. வல்லபை மணவாளனே வரமருளுந் தேசிகனே
பல்லாயிரங் கோடியண்டம் படைத்தளிக்கு
மைங்கரனே

7. மூவர்களை யுண்டுபண்ணி முத்தொழிலு மீந்தவனே
தேவகுரு வாகவந்து தேவர்களைக் காத்தவனே

8. திரிபுர மெரிப்பதற்குச் சிவனுக்குப தேசித்தவா
அரிபிர மாதிகட்கு மதீதமாய் நின்றவனே

9. விஷ்ணுபுத்ரி பன்னிருவர் வேட்டதிரு மணவாளனே
துஷ்டசன நிக்ரகனே தூயசிஷ்ய பரிபாலனே

10. நீதியில்லாக் கலியுகத்தில் நின்னடிமை யானதன்பின்
சோதனைகள் செய்யாதே சூட்சமுள்ள என்குருவே

11. வேதங்களுக் கெட்டாத விசித்திரத்தைக் காட்டிவிட்டுச்
சோதனைக்கு மெட்டாது சூட்சமதாய் நின்று
கொண்டாய்

12. எல்லையற்ற காட்சிதந்து எமனுக்கிட மில்லாமல்
பல்லுயிருங் காட்சிகொள்ளப் பலனளித்த சின்மயமே

13. மாகர்த்தன் மாயோகி மாதியாகி யென்றுசொல்ல
ஏகப்பிர்ம்ம வீடளித்த என்னுளொளிர் பரஞ்சுடரே51.

மாண்ட்.

## பராபக்கண்ணி

ஆதி

1. அண்ட பகிரண்ட மனைத்துமே தானுகிப்
பண்டு பழுத்த பழமே பராபரமே

2. பழுத்த பழமென்று பத்த ருனைத்தேடிச்
சுழுத்தி நிலையதனிற் சுகித்தார் பராபரமே

3. மேருகிரி யென்னும் விளங்கியபொற் பீடமதிற்
சாருநா ளெந்நாளோ சாற்ருய் பராபரமே

4. ஆருதா ரங்கடந்தே யத்துவிதக் கோட்டையுள்ளே
சாரா திருக்கத் தகுமோ பராபரமே

5. அம்பத்தோ ரட்சரமு மரியபரி பாஷைகளும்
இன்பத் துடன்காண்ப தெப்போ பராபரமே

6. ஓங்காரத் துட்பொருளை யுற்றுணர்ந்து காண்பதற்கு
ஆங்கால மெப்போ வறியேன் பராபரமே

7. பேதமைக ளாலுனது பெருமையறி யாதிருந்தேன்
மாதவத்தோர் கண்டறியும் வடிவே பராபரமே

8. பாத தெரிசனங்கள் பார்க்கவந்தால் கிட்டாது
சாதனங்கள் செய்தறிவார் தவமே பராபரமே

9. இருவினைக ளற்றுநிற்கு மேகாந்த வீடதனைக்
குருவடிவாய் வந்தெனக்குக் கொடுப்பாய் பராபரமே

10. ஆடுகின்ற கூத்தை யறிவா ரொருவரில்லை
தேடிநிலை நின்றவர்க்கே திகட்டும் பராபரமே

11. கற்றுமறி யேனுன் கற்றவரைக் கண்டறியேன்
சிற்றம் பலத்திலுறை சிவமே பராபரமே

12. சட்சமயந் தோறுஞ் சமயாதீ தப்பொருளாய்
உட்சமய மான வொளியே பராபரமே

13. தன்குற்றம் தானுணராத்தறிவுகெட்ட மாடுகள்தாம்
பின்குற்றம் பேசுவதும் பிழைகாண் பராபரமே
14. பின்குற்றம் பேசும் பிழைகள் எழுநரகில்
வன்குற்ற மென்று வருத்தும் பராபரமே
15, சாத்திரங்கள் கற்றாலும் தவவேடம் பூண்டாலும்
சூத்திரங்கள் பாராதார் சுணங்கன் பராபரமே
16. ஈச னருளே யின்னதென்று தானறியாப்
பாசாண் டிகளோடு பற்றேன் பராபரமே
17. தனிப்பொருளைக் காணாமல் தர்க்கங்கள் செய்துகொடும்
வினைப்பயனைக் கைக்கொண்ட வெறியர் பராபரமே
18. படித்தது போதுமென்று பலதர்க்கஞ் செய்வோர்கள்
துடிக்க வருநரகிற் சோர்வார் பராபரமே
19. வேதவே தாந்தமுணர் மெய்யடியார்த் தொண்டு செய்தும்
பாதார விந்தம் படிந்தார் பராபரமே
20. மெய்யடியார்த் தொண்டுசெய்ய விதங்கள்சற்றுந் தோணாமல்
பொய்யடியார்த் தொண்டுசெய்யப் புகுந்தேன் பராபரமே
21. சிந்தை யறியாத சிவபதத்தைக் காணவொரு
தந்திரமும் யானறியேன் சாற்றாய் பராபரமே
22. பட்டதெல்லாம் போதுமிந்தப் பார்மேல் பிறந்திறந்து
கெட்டதெல்லாம் நீயறிவாய் கெதியென் பராபரமே
23. ஆரிடத்தில் சொல்லி யழுது முறையிடுவேன்
வேறிடத்தில் சொல்லும் விதமோ பராபரமே
24. எல்லா வுயிர்களையு மீசனென்றே யுன்னடிமை
பல்காலும் போற்றிப் பணிந்தேன் பராபரமே
25. தன்னை யறிந்தால் தலைவனருள் கிட்டுமெனப்
பன்னுமறை சாத்திரங்கள் பகரும் பராபரமே
26. எட்டிப் பிடிக்க விசையுமோ நின்னருள்தான்
கிட்டின வர்க்கல்லோ கிடைக்கும் பராபரமே
27. விட்டகுறை தொட்டகுறைவிதிகள்வந்துநேர்ந்தாலும்
சிட்டர்பணி செய்யத் திறமாம் பராபரமே

28. எத்தனையோ சென்ம மெடுத்திறைவ னடிபணிந்தால்
குற்றமற நல்லறிவு குறிக்கும் பராபரமே

29. சுத்த மௌனி சுயஞ்சோதி நாட்டமுள்ள
சித்த ரிருதயத்தின் சிறப்பே பராபரமே

30. கள்ளக் கருத்துடைய கள்வனென்று தள்ளாதென்
உள்ளம் புகுந்துணர்வை யூட்டும் பராபரமே

31. வஞ்சகத்தை யூடறுத்து மாயா மலக்குரங்கைத்
தஞ்சமென்றே யாட்கொள்வாய் தயையே பராபரமே

32. துன்ப முறுங்காலந் துணையாக வந்தெனக்குன்
அன்பைக கொடுத்தருள் வாயையா பராபரமே

33. கிள்ளப் பழுத்துக் கிளைகடொறு மோடுரசம்
அள்ளிப் புசிக்க அருள்வாய் பராபரமே

34. கார்மேகம் போலக் கலங்கி யழுதகண்ணீர்
ஆருய்ப் பெருக்கெடுப்ப தழகோ பராபரமே

35. பாதத்தைத் தேடிப் பலகால் திரிந்தவெமைச்
சோதித்தல் நன்ருேநீ சொல்லும் பராபரமே

36. தொண்டர்களை யாட்கொண்டசுருதிகளை யாராய்ந்தும்
பண்டுசொன்ன வாக்குப் பழுதோ பராபரமே

37. கல்நெஞ்ச னென கபடனென்று தோன்றியெனை
பல்காலுஞ் சோதிக்கப் படுமோ பராபரமே

38. சின்னஞ் சிறுவயதில் தேடிவந்து மாலையிட்டீர்
இன்னும்வரக் காணுத யியல்பேன் பராபரமே

39. மாலையிட்ட நாள்முதலாய் மறுத்துமுகம் பாராமல்
வேலையென்ன வேலை விளம்பும் பராபரமே

40. பத்துவய தானகன்னிப்பருவம்வந்துநேர்ந்ததென்ருல்
சுற்றத்தா ரேசாரோ சொல்லும் பராபரமே

41. கருத்தரித்த காலமுதற் கற்புதவ ருதிருந்தும்
பிரித்துவைத்த கோலமென்ன பிழையோ பராபரமே

42. பாரிலுள்ளோர் ஏசிப் பழித்த பழிப்புகளை
நேரிலே சொல்ல நினைத்தேன் பராபரமே

43. பெண்பாவம் வீண்போகாப் பிழைகள்வந்து சேரு முன்னே
கண்பார்வை யிட்டுயிரைக் காரும் பராபரமே

44. சென்றசென்ற காலமெல்லாஞ் சென்ம மெடுத்தெடுத் தும்
பந்த மறுக்காத பாவம் பராபரமே

45. ஏழைசெய்த குற்றமெல்லாம் இன்பமுட னீபொறுத்து
மாளாப் பிறவிதன்னை மாய்ப்பாய் பராபரமே

46. அன்பர்செய்த் குற்றமெல்லாம் ஆனந்த லீலையென்று
இன்பங் கொடுத்ததெனக் கிலையோ பராபரமே

47. சரியை கிரியையென்றுந் தவமான பூசைசெய்ய
அறியு மறிவை யருள்வாய் பராபரமே

48. யோகவழி செல்ல வுறுதியற்ற பாலனுக்கு
ஏகவழி காட்டுவ தெப்போ பராபரமே

49. அஞ்ஞானம் நீங்கி யபரோட்சங் கிட்டுவது
மெஞ்ஞான மென்று வியந்தார் பராபரமே

50. பற்றிப் பிடித்துமுந்தன் பாதநிலை காணுமல்
உற்றுற்றுப் பார்த்தே னுரையாய் பாரபரமே

51. நிட்டையொடு சாதனங்கள் நியமாதி சங்கையறச்
சுட்டிநீ காட்டில் துறப்பேன் பராபரமே

52. ஆசார முள்ளோ ரறிவுநிலை பூத்தமலர்
பூசா விதிகள் புரிந்தார் பராபரமே

53. சாத்திர வழிநடந்து சத்தியநிலை பூத்தமலர்
ஆத்தி மலரென் றணிந்தார் பராபரமே

54. பந்த மறுத்தும் பலகாலும் பூத்தமலர்
கொன்றை மலரென்று குறித்தார் பராபரமே

55. அன்பைப் பெருக்கி யனுதினமும் பூத்தமலர்
தும்பை மலரென்று துதித்தார் பராபரமே

56. செறுக்கறுத்துத் தானுகிச் சென்றவிடம் பூத்தமலர்
எருக்க மலரென் றிசைந்தார் பராபரமே

57. சிந்தை தெளிந்து சிவமாகிப் பூத்தமலர்
நந்தியா வர்த்தமென்று நவின்ருர் பராபரமே

58. அவ்வுமுவ்வு மோமென்ற அட்சரத்தை மூன்றிதழாய்ச்
சிவ்வுமவ்வு மென்றுகிள்ளிச் செபித்தார் பராபரமே

59. கற்றுமறி வில்லாதார் கண்ணற்ற பாவியென்று
சுற்றிவரும் பாதையொன்று துறந்தார் பராபரமே

60. கல்லாத மாந்தர் கருத்துக் கிசைந்தபடி
சொல்லா திருந்தால் துயர்காண் பராபரமே

61. பல்லாயிரங் கோடியண்டம் படைத்துவிளை யாடுமுயர்
வெல்லாம்நீ யென்ரு லிதமோ பராபரமே

62. எத்தனையோ கோடி யெனைப்போலப் பாவியுண்டு
அத்தனையும் நீயென்ருல் அழகோ பராபரமே

63. பாசங் கடந்துந்தன் பரமாகி நின்றவர்க்கே
ஈசனென்ற நாம மிணங்கும் பராபரமே

64. வேதாந்த வீதிசென்று வெட்டவெளி காண்பதற்கு
நாதாந்த மோனநிலை நல்கும் பராபரமே

65. அட்டாங்க யோக மறிந்த தபோதனர்கள்
நிட்டானு பூதியிலே நிலைத்தார் பராபரமே

66. அடயோக மென்று வறிந்தசிவ யோகியர்கள்
திடயோக மாகச் செயித்தார் பராபரமே

67. இராசாங்க யோகநிலை நன்னெறியாற் கண்டவர்கள்
பேசா மௌனநிலை பெற்ருர் பராபரமே

68. அம்பிகா யோகமென்று மறைந்தமறை சாத்திரங்கள்
வம்பருக் கெட்டும் வழியோ பராபரமே

69. நேச நிருவிகற்ப நிட்டையது பூண்டவர்கள்
பாசங் கடந்த பரங்காண் பராபரமே

70, சந்திரகலை சூரியகலை தழைத்தோங்கி நின்றவிடம்
மந்திரகலை யென்று மதித்தேன் பராபரமே

71. பன்முத் திரைகள் பலவாய்த் தெளியாமல்
சின்முத் திரையால் தெளிந்தேன் பராபரமே

72. சித்தா சனங்களெல்லாம் செகமயக்க மாய்த்தோன்றிப்
பத்மா சனமிட்டுப் பார்த்தேன் பராபரமே

73. அறுபத்து நாலுயோக மல்லவென்று கண்டனஞ்செய்
பருவத்தை யான்தேடும் பதமோ பராபரமே

74. அறியாப் பருவமதில் அன்பைவளர்த் தேதடுத்துச்
சிறியேனை யாட்கொண்ட திலேயோ பராபரமே

75. பரியேறிச் சவ்வாரி பற்றித் தொடர்ந்துநின்ருேர்
துரியோத ஞதிகளைத் துறந்தார் பராபரமே

76. எல்லை கடந்தா லிராவணசம் மாரமென்ற
தொல்லை கடந்த துரியம் பராபரமே

77. ஆருதா ரங்கடந்தா லத்துவித பிர்ம்ம மென்றே
சூரசம் மாரநிலை தோற்றும் பராபரமே

78. சூட்சாதி சூட்சமெல்லாஞ் சொல்லாமற் சொல்லுமிடம்
நீச்சுநிலை காணுத நிலைகாண் பராபரமே

79. சஞ்சிதக்கட்டையெல்லாந் தணலா யெரித்துனது
குஞ்சித பாதத்தைக் கொடுப்பாய் பராபரமே

80. ஆகாமி யங்க ளணுவளவுந் தோன்ருமல்
யோகா மிசங்கள்தந்த உறவே பராபரமே

81. பிரார த்துவ கன்மம் புசித்துமுடி வானவுடன்
சிரோரட்சண மேயுனது சேர்வை பராபரமே 42

---

## குயிற்கண்ணி

1. ஆத்தா ளுடன்கூடி அன்புடனே வாதாடிக்
கூத்தாடி நின்ருனடி, ஏ குயிலே! கோபுரத்தின் வாசலிலே

2. அடியார்க் கெளியவண்டி ஆண்டிபர தேசியடி
துடியாகப் பேசானடி, ஏ குயிலே! தொல் புவிக்கி ராசனடி

3. மக்கள் பகுத்துடையோன் மாதவத்தோர்க் கன்பனடி
தக்க பவுசுடையோன், ஏ குயிலே! தானுகி நின்ருனடி

4. அன்று புரமெரித்தே அன்பர்களைக் காத்தபிரான்
என்று மிருப்பானடி, ஏ குயிலே! ஏகாந்த நாதனடி

5. பத்தர்களைச் சோதிக்கப் பாவனைகள் செய்திடுவான்
முத்தி கொடுப்பானடி, ஏ குயிலே! மூர்த்திபரஞ் சோதியடி

6. சித்துவிளை யாட்டைத் தெரிவா ரொருவரில்லை
பத்தரறி வாரடி, ஏ குயிலே! பலவேசக் காரனடி

7. ஆதி யனாதி யென்றும் ஆத்மா வனாத்மா வென்றுஞ்
சோதி சொரூபனடி, ஏ குயிலே! துரியா தீதனடி

8. நாதாந்தம் விந்துவென்றும் நாதாக்கள் சூட்சமடி
நாதாந்தம் விந்துவேது, ஏ குயிலே! நாத னிருப்பிடமே

9. காணக் கிடையாது கண்டாலும் வாராது
தோணப்படுமோ சொல்வாய், ஏ குயிலே! தொண்டருக்கு

10. எல்லா மறிந்தவர்க ளேதுமறி யாதவர்கள் வாய்க்குமடி
சொல்லா லறிவாரோடி, ஏ குயிலே! சோதி சொரூபநிலை

11. தொண்டர்பணி செய்பவர்கள் சூட்சாதி சூட்சமெல்லாங்
கண்டு தெளிவாரோடி, ஏ குயிலே! சன்னதி தோன்றுதடி

12. மாதா பிதாவவனே மற்றதெல்லாந் தானவனே
சாதனமி லாதவர்க்கு, ஏ குயிலே! சன்னதி தோன்றுதடி

13. உலகம் படைத்தவனு முயிர்கடோறு நின்றவனும்
பலபேதஞ் செய்துவைத்தான், ஏ குயிலே! பரமகருணாநிதியே

14. வேதங் களுண்டுபண்ணி விதியை விதித்தவனும்
பேதங்கள் செய்துவைத்தான், ஏ குயிலே! பேரின்ப வீடடைய

15. சாத்திரங்க ளுண்டுபண்ணிச் சமயங்கள் வேறுபண்ணிச்
சூத்திரங்கள்செய்தானடி, ஏ குயிலே! சொல்லமுடி யாதபடி

16. ஒன்றுபல வானவனு முயிர்களைரட் சிப்பவனும்
மன்றுள் நடம்புரிந்தான், ஏ குயிலே! மார்க்கத்தை யாரறிவார்

17. பித்தம் பிடித்தவண்டி பேராசைப் பட்டவண்டி
பித்தம் பிடித்தகதை, ஏ குயிலே! பேரின்பங் காட்டவல்லோ

18. பேராசை யேதுக்கடி பேரின்ப வள்ளலுக்குப்
பாராதி யண்டமெல்லாம், ஏ குயிலே! பத்தரைக் காக்கவல்லோ

19. சொல்லத் தொலையாது சொன்னதனால் கிட்டாது
எல்லையற்ற சோதியது, ஏ குயிலே! எங்கும் நிறைந்தபொருள்

20. ஆடுகின்ற நாகமது ஆடி யொடுங்குமிடம்
தேடினால் சிக்காதடி, ஏ குயிலே! தெளிவுவந்தாற் போதுமடி

---

## அத்துவித முறைக் காவடிச்சிந்து

1. என்னைத் தழுவிவந் தெனையாண்டாய்—சம்போ
எனையாண்டாய் — முன்னு — ளெனையாண்டாய்
ஏழை பரதவித்து மிரங்காதென்

2. சின்னஞ் சிறுகுழவி யறியாதே — யாதுங்
குறியாதே — இது — தெரியாதே
திகைக்கும் பருவந்தேடி மாலையிட்டீர்

3. அன்னை பிதாவுமெனை யகன்றூரே—வாது
புகன்றூரே—பல—ரிகழ்ந்தாரே
யாரிடஞ் சொல்லியான் முறையிடுவேன்

4. பின்னை யொருவர்துணை வேறுமில்லையே—யாதுங்
குறைவில்லையே—துயர்—தீரவில்லையே
பிரியமில் லாதிருக்கும் பிழையறியேன்

5. திருவே யருவுருவே செழுங்கனியே—மறை
பழங்கனியே—அன்ப—ருளங்கனியே
தெவிட்டாத தெள்ளமுதே தேன்பாகே

6. மருவி மறைகளுன்னைக் காட்டியிருக்கத்—தொண்டர்
கூட்டியிருக்க—நெறி—பூட்டியிருக்க
மணியோசை நாதம்விந்து கீதம்பாட

7. குருவாய்வந் தெனையாண்ட கோலம்வேறூ—மந்த்ர
மூலங்கூறூ—இந்த்ர—ஜாலம்நீரோ
குறைகளெல் லாமகற்றிக் கழல்தருவீர்

8. இருவினைப் பற்றறுத்து ஏகமாக்கி—மாயா
மோகம்நீக்கி—அரு—ளாகநோக்கி
இன்பவீ டடைவது மெந்தநாளோ

9. கருணைப் பெருங்கடலே கண்மணியே—சிந்தை
யுண்மணியே —தொடர்—பண்மணியே
கைவிடுதல் முறையோசொல் கபடறியேன்

10. சிறுமைப் படுதல்நன்றோ தெளிவறியேன்—தேடும்
வழியறியேன்—காணு—முளவறியேன்
செப்பக் கணக்குமுண்டோ தெரிவீரே
11. பெருமையென் றலெடுத்துப் பேசப்படுமோ—முன்
னுசைவிடுமோ—சந்—தோஷங்கூடுமோ
பிரிந்தா லுயிர்விடுவேன் கணந்தரியேன்
12. அருமைக்கண் ணாளாவெந்தன் ஆண்டவனே-தில்லைத்
தாண்டவனே—அருள்—பூண்டவனே
அன்பின்மய மாய்க்கலந் தடிமைகொள்வீர் 54.

---

### சிவயோக நடனக் காவடிச்சிந்து

திரிபுர தகன மறிவ துயர்வது கண்ணே—அதன்
பெருமை புகல்வ தரித ரிதடி—பெண்ணே
1. சென்னிமேற்க ரங்குவித்து நன்னிலையி லேயிருத்திச்
சின்மயவி லாசனென்று போற்றிடு—சஞ்சித
கன்மவினை தீரவென்று மேற்றிடு
திகழு முக்கனி யவல்ப ருப்பொடு கடலை யெள்பொரி
[பருகுமற்புதன்
சித்திவிநா யகனிருதாள் சேறிடு—என்றும்
பக்தியே தொழுதுநின்று தேறிடு
2. அறுபத்து நாலுயோகங் குருமூர்த்தி சாதனங்கள்
ஆகமப்ப டியுணர்ந்து காரடி—கற்ப
தேகசுத்தி வாசிசுத்தி யாமடி
அண்ட பிண்ட சராச ரங்களு மொன்று கூடிவி ளங்கி
[நின்றிடும்
அற்புதவி நோதமிந்த்ர சாலமே—வேத
சொற்படிந டந்தாலனு கூலமே
3. நிட்டைபுரி மாதவர்கள் தத்வநிலை யாலுணர்ந்து
நிட்களசொ ரூபமொடு கூடினர்—சந்த்ர
புட்கரணி தீர்த்தமதி லாடினர்
நிருவி கற்ப சமாதி பெற்றிடு மடியர் பொற்பத மேபி
[டித்திடு
நிட்டைநிலை பூரணம தாகுமே—முன்
விட்டகுறை தானேவந்து சேருமே

4. செம்பொன்மணி மாடநடு தம்பமதி லேவிளங்குஞ்
சிற்சபை நடனமிது தானடி—மூல
தற்பரனென் ருடுவது பாரடி
தித்தி மத்தள மொத்தி சைப்பட தித்தி தைய
[ததிங்கிண தோமெனுஞ்
சித்துவிளை யாட்லிது வாமடி—பார்க்க
மெத்தவும்ப்ர யாசையென்று கூறடி
5. காரணகு ருவைக்கண்டு பூரணவ டிவங்கொண்டு
ககனவட்டமீதேறிநின் றிடுவாய்—குளிகையுண்டு
மௌனசித்திக ளேபொருந் திடுவாய்
கனக சபைதனி லமரர் முனிவர்கள் ரிஷிகள் பலரொடு
[தொழுதுவருமுறை
கண்டபடி நீயிருந்து காணடி—யார்க்கும்
விண்டுசொல்லக் கூடாதென்று பூணடி 55.

---

## காவடிச்சிந்து

1. வந்த வரவைமறந் திந்தவீடென்—னமது
சொந்தவீடோ-பாச-பந்தவீடே—இது
வல்லவென் றிருவினை மாற்றத்தெளிவாய்
2. முந்தநீ தேடும்வகை வந்துகூடி—விரைவொடு
சொந்தமாடி-மிகவு-மெலிந்துவாடி—பின்னும்
உறவு கலந்துகொண்டு மதிகேடாய்
3. இந்தவி தம்பிறந்து மிறந்தோமே—விதி
மறந்தோமே-நிதி-குறைந்தோமே—சுத்த
ஏகாந்த வீடதனிற் றனியாமல்
4. அந்தரத்தி னடமிடுந் தந்திமுகவன்—பதம்
சிந்தனைசெய்வாய்-தொடர்-பந்தமறுமே—நாளும்
அனலில் மெழுகதுபோ லுருகிநிற்பாய்
5. கொல்லான்பு லால்களையும் மறுத்தாரே—மோகம்
வெறுத்தாரே-பாச-மறுத்தாரே—கரங்
குவித்துயிர் களெல்லாந் துதித்தாரே
6. கஞ்சா வபினரக்கு கழித்துவிடு—வெறி
ஒழித்துவிடு-அறி-வழித்துவிடும்—என்று
கற்றோர்கள் சொன்னமொழி கருத்தில்வைப்பாய்

7. கள்ளும் புகையிலையு மருந்தாதே—கதி
பொருந்தாதே-துன்ப-முறுமபோதே—சற்றும்
கனவிலு நினைத்திடா துறுதிகொள்வாய்

8. பொய்கொலை களவுகள் மறந்திடுவாய்—மெய்யைப்
பொருந்திடுவாய்-அருள்-சுரந்திடுவாய்—ஐயன்
பொற்பாதங் கண்டுமிகத் தெளிந்திடுவாய்

9. ஐயையோ பேய்மனமே யலையாதே—பாவந்
தொலையாதே-தேகம்-நிலையாதே—பிர்ம்மம்
அகத்திற் குடியிருப்ப தறியாமல்

10. பொய்யோமெய் யோவென்று புகலாதே—மெய்யை
அகலாதே-தெய்வம்-விலகாதே—ப கம்
பொருந்த வருந்தவங்கள் செய்யநினைப்பாய்

11. கூவிப் பலபசனைக் கூட்டமுடனே—தெய்வ
நாட்டமுடனே-தவ-வாட்டமுடனே—செய்துங்
குணமில்லை யென்றறிஞர் தெளிவுசொன்னர்

12. மந்திரங்கள் செபிப்பது மதியுமல்ல—நல்ல
விதியுமல்ல-பர-கதியுமல்ல—யோக
மௌன நிலையினின்றுர் பெரியோர்கள்

13. வாசனை மலரெடுத்துப் பூசைமுடிப்போர்—பல
வேடந்தரிப் போர்-கபட-மாகநடிப்போர்—மனம்
வஞ்சகத்தி லாழ்ந்துநிற்கும் மயங்காதே

14. வாதம்ரச வாதமென்று மலைக்காதே—பணம்
தொலைக்காதே-பாவம்-நிலைக்காதே—மாயா
வாதமென்று தெரிந்துகொ ளறிவாகி

15. கற்றவர்கள் பணிசெய்யப் பத்தியுறுமே—யோக
சித்திதருமே-விதேக-முத்திபெறுமே—இனிக்
கண்ணுடி போற்றெளிவு காண்பாய்மனமே

16. படிக்கும் படிநடக்கப் பதிந்துகொள்வாய்—நிட்டை
புரிந்து கொள்வாய்-சூக்மந்-தெரிந்துகொள்வாய்-
(நித்ய
பரமாநு சுகம்பெற்ற பண்பிதாமே. 56.

---

காவடிச்சிந்து மெட்டு சாபு & முடுகு



1. ஆதியி லேதிரு நான்மறை யேசொலு
மற்புதங் கேள்மனு நீதியே—அதன்
சொற்படி யேநட வீதியே
அந்த ரங்கமெ னும்ப ரம்பொருள் கண்ட
(தொண்டர்ப தம்பணிந்திடும்
அத்விதங்கை கூடுமடி வாதியே—அருள்
சித்சுகசு யம்பிரகாச சோதியே

2. வேதவி திகள்தொடர் பாவந்தொ லையுமென்று
விரதத்தைக் கோரடி மனமே—தான
தவநிட்டை சேரடி தினமே
விடியு முன் நதி தனிலே மூழ்கிவி நாய கன்பத
(மேபணிந்துநீ
வெந்நீர் ஸ்னனபானந் தள்ளுவாய்—பூசும்
வெண்ணீ றவிழ்தமென்று கொள்ளுவாய்

3. சித்தர் பதினெண்மரும் தத்வம் மருந்தென்றும்
செப்புங் கலைகளுணர் மயிலே—அதன்
அர்த்த மவிழ்தமல்ல குயிலே
சித்தர் பாஷை கருத்து வேறெனுஞ் சுக்ர வாரவ்
(ரதத்திலேபிடி
தெய்வமொன் றேயென்று முடிவாய்—கண்டு
தேவதா பிரார்த்தனை விடுவாய்

4. தன்னுயிர் போலவே மன்னுயிர் காப்பதும்
சத்திய மாய்த்துரிய மலையே—தனி
நித்திய வாழ்வது நிலையே
தத்து வாதி குதர்க்க போதைகள் இஷ்ட மாமிச
(பட்சணமினிவிடில்
சாஸ்வத நிஷ்டானுபூதி தருமே—நிர்மல
சற்குருசை தன்யவீடு பெறுமே

5. சப்தரிஷி முனிவர் சித்திபெற விரும்புஞ்
சாதனம் நான்காக வகுத்தார்—ஞான
சட்கசம் பத்தெனத் தொகுத்தார்
சமத மாதிகள் விடல்ச கித்தல் சமாதி யோடுசி
(ரத்தையார்வகை
சாதிக்க லாமடி கிளியே—இதில்
சலனங்கூடா தடி பளியே

6. பிர்ம்மவித் துவரன் வரிட்டன் நான்காய்ப்
பேசும் சீவன்முத்தர் வழியே—தவம்

பிரிவுணர்த் தாரந்த வெளியே
பெத்த முத்தி யிரண்டி லும்பிச காது நித்திய வாழ்வு (பெற்றிடு
பெருமை யறியலா மோ மணியே —அருள்
பெற்றோ ரறிவாரடி பணியே 57.

---

### பல்லவி

சக்கரம் வந்தது பொய்யா—தனு
செப்படி சென்றது மெய்யா

### அனுபல்லவி

சக்கரம் வந்தது மெய்ப்பொருள் கண்டவர்
பக்கலில் நின்றுவில் லெப்படிச்சென்றது (சக்கரம்)

### சரணம்

1. முக்கோணச்சக்கரத் துள்ளே —யொரு
சட்கோண வட்டமு மாகி
எட்கோணத் துள்ளுரு மாறி—யிருந்
தைக்கோணத் துள்ளுரு வாகி
ஏகாட்சர மாகத்திரு பாகத்தினி லேயுமை
இடது பாகத்தி லமைந்தாள்—கங்கை
சடாபா ரத்தி னுழைந்தாள் (சக்கரம்)

2. நாற்பத்து முக்கோண மேரு—தன்னை
நான்குவி தமாகப் பாரு
ஆர்க்குந் தெரியாதவ் வூரு—அதை
அடுத்துப் பார்ப்பதெவ் வாறு
அஷ்டாட்சர மாகிப்பல திஷ்டாந்திர மாகிப்பொன்
னம்பலத் தாடிடும் நடனம்—இதை
யும்பர்கள் காண்பது மரிது (சக்கரம்)

3. அகரமென் பதுவ்ச்சு வாகும்—ஆதி
உகரமென் பதுமுருளை யாகும்
வகரமென் பதுசட்ட மாகும்—அதில்
நகரமென் பதுகால்க ளாகும்
மகரக்கொடி யசையத்திரு சிகரத்தினி லமையத்தனி

வாசிக் குதிரையைப்பூட்டி—பிர்மம்
ஓசைப் படரத மோட்டி (சக்கரம்)

4. மூலாதா ரத்தெழு கனலைக் — காலால்
மூட்டிவைக் குங்கருத் துணர்ந்து
மேலேவா சியைநுழை வித்து—மகா
மேருவை வில்லாக வளைத்து (படி
விண்ணோர்களு மதிரும்படி மண்ணோர்களுஞ் சிதறும்
வீறிட்டா திசேட ஞனய்—வில்லில்
கூறிட்ட பாணங்கள் பாராய் (சக்கரம்)

5. ஒன்பது வாயிலுக் குள்ளே — ஒரு
மந்திர மாகவே யிருந்து
ஐம்ப அன்பத்தோ ரட்சர மாகிப்—பின்னு
மாருதா ரத்தையுங் கடந்து
அட்டகுல பர்வதமும் சப்தகடல் சேருயிட
யானைபரி வீரர்படை சூழத்—திரிபு
ராதிகளும் புன்சிரிப்பில் மாள (சக்கரம்)

6. காமன் எரிந்ததும் பொய்யா—முனி
கடல்நீ ருண்டது மெய்யா
இராமர் வந்ததும் பொய்யா—இலங்கை
இராவணன் மாண்டது மெய்யா
சீதையைச் சிறைமீட்க அணைகட்டிக் கடல்தாண்டிய
இராகவன் லக்மண ரோடு—படை
வானரர் வந்தது மெய்யா (சக்கரம்)

7. பாண்டவர் வந்ததும் பொய்யா—அழியாப்
பத்தினி துரோபதை மெய்யா
மாண்ட படைகளும் பொய்யா—மகா
பாரதமென்பது மெய்யா
மாயாவரி கிருஷ்ணன் மகாபாவி துரியோதனன்
வஞ்சகத் தையொழித் தானே—ஐவர்
நெஞ்சகத் தேகளித் தானே (சக்கரம்)

8. ஆலத்தை யுண்டதும் பொய்யா — தேவ
ரமிர்தங் கடைந்தது மெய்யா

சூரன் மாண்டதும் பொய்யா—சுப்ர
மணியர் வந்தது மெய்யா
சூட்சாதி சூட்சமொடு காட்சிப்ர மாணங்கள்
சொல்லவுங் கூடுமோ நாவால்—அதற்
கெல்லையு மில்லையே பாவாய் (சக்கரம்)

9. தேவர்கள் வந்ததும் பொய்யா—பதினெண்
சித்தர்க ளானது மெய்யா
மூவர்கள் வந்ததும் பொய்யா—முனி
யோகிய ரென்பது மெய்யா
மூவரொடு மாணிக்க வாசகர் திரு வாசகமும்
முடித்ததே வாரமும் பொய்யா—அதில்
வடித்ததே னுண்டார் மெய்யா (சக்கரம்)

10. மாசற்ற தேவமா தாவாம்—மரி
யாளென்னுங் கன்னிவ யிற்றில்
ஈசா நபியெனப் பிறந்து—நாதன்
எருசலேம் தேசத்தி லமைந்து
ஏசுகி ருஸ்துவெனும் நாமங்கள் சூட்டியே
எங்கும்பல வற்புதங்கள் காட்டிச்—சீட
ரங்கம்பன் னிரண்டுகள் நாட்டி (சக்கரம்)

11. மக்கா நகரத்தில் வந்து—நபி
மையமா தீனத்தி லமர்ந்து
லட்சத் திருபத்து நாலா—யிரம்
நபிபின்னால் முஹம்மது நபி
சல்லலாகு அலைகியுசல்ல மவர்கள் வந்து
நாட்டில் கொடிகட்டி நீதி—செய்த
பாட்டினைக் கேட்டதும் பொய்யா (சக்கரம்)

12. கலியு கத்தினி லையா—அன்பர்
காட்சிகள் கண்டதும் பொய்யா
பலிகொ டுப்பது மெய்யா—பல
கலைகள் சொன்னதும் பொய்யா
பாவத்தொழி லேமுக்கிய மாகிப்பலர் கூடிச்செயும்

பக்குவம் நீயறி யாயோ—அன்பர்
மிக்க துயர்தெரி யாயோ (சக்கரம்)

13. பாரிலுள் ளோர்செய்யும் வேலே—பல
மோசங்க ளாகுதுன் ஞலே
ஆரிடஞ் சொல்லியா னழுவேன்—அன்பர்
கோரிய காரிய முடிய
ஆதிமுத லேசெப்பிடும் வேதங்கள் யாவையும்
அன்பர் மிகநம்பிக் கெட்டார்—அதை
உன்புற மேசொல்லி விட்டார் (சக்கரம்)

14. பாரில் வருவதாய்க் காட்டி—எங்கும்
பத்திரி கைகளே நாட்டிக்
கூறிய சாத்திரம் பொய்யா—சமய
குரவர் வாக்குகள் மெய்யா
கூறிடும் வாக்குகள் பொய்யாகி விட்டாலும்
குற்ற முனேச்சொல்வ தாரு—இது
மெத்தப் பயித்தியம் பாரு (சக்கரம்)

15. மானிடச் சட்டைநீ சார்த்தி—இந்த
வையகத் தில்வரும் நேர்த்தி
ஏனுனக் சிந்த வேமாத்து—அன்பர்க்
கிடுக்கண்கள் செய்வதுன் கூத்து
எக்காலமு முன்லீலேகள் தப்பாதென வேகற்றவர்
ஏங்குவ ரோவிது பார்த்து—பின்
வாங்குவ ரோசிறு ஆூத்து (சக்கரம்)

16. அன்பரைக் காக்கின்ற லீலே—என்றும்
நம்பின வர்க்கிது பாலே
உம்பர்க்கு மெட்டாத வேலே—கொடுந்
துன்பத்தை நீக்குவ தாலே
ஒருகாலமு மறவாமலே யுறவாடிட வினேபோகுமென்
றுள்ளந் தெளிந்துநிற் பாரே—பார்த்துத்
தெள்ளுசுய தேனுண்டு தேர்வாரே (சக்கரம்)

17. உன்னேயான் விடுவதே யில்லே—உந்தன்
அன்பர்க ளுக்குவெகு தொல்லே

என்னை நீ விடுவதே யில்லை — என்று
மென்செய்கு வாயுறுதிச் சொல்லை
இனிமேலொரு கணமாகிலு மிறையேமனம் பொறுக்கேனென
எண்ணித் திருவருள் தாராய்—வரம்
நண்ணிக்கொ டுப்பதெவ் வாருய் (சக்கரம்)

18. கண்ணன்பிர் மாருத்திர ரொடுங்கக் — கதிர்
விண்ணு மதிக்கோள்கள் நடுங்க
மண்ணுலகம் பாதாளம் நொறுங்க — வரைஎட்
டெழுகடல்திக் குப்பாலகர் நெருங்க
மகமேருவும் பொடியாகவே சிதறும்படி கணையேவிட
வல்லவ னேகொடு பாணம் — இப்போ
தில்லையென் ருல்விடுவேன் பாணம் (சக்கரம்)

19. தந்தாலிப் போதர வேண்டும் — தாமச
மென்ருலிப் போவர வேண்டும்
பந்தாடு வேன்பாரா யண்ட — பகி
ரண்டமொன் ருகவே குலுங்க
பரிசுத்தர்கள் தவிரப்பல வேந்தர்படை வீரர்களும்
பாரினுள் லோபிகள் மாளக்—கொன்று
ஆறிலொரு பங்குதிரை வாழ (சக்கரம்)

20. வச்சிர மணிமகுடந் தரித்து—எதிர்த்த
மன்னரனை வோர்களையுஞ் செயித்து
பட்சமுள் ளோர்களையா தரித்துப்—பதி
னெட்டாயு தமுங்கையி லெடுத்து
பாரமது தீர்த்துமநு நீதிக்கொடி நாட்டிடப்
பன்னிரண் டுவருடஞ் சுற்றி—வந்து
பராபவ வருடத்தில் வெற்றி (சக்கரம்)

21. நந்தன வருடமுதற் பூட்டி—மதுரை
நகர்வாசிக ளனைவோரையுங் கூட்டித்
தந்திரமா யற்புதங்கள் காட்டி—எங்குந்
தபசீலர்கள் துணையாகவே நாட்டி
சதுர்வேதமு நிலையாகவேதரையெங்கணு முறுதிப்படச்

சாற்றுமறை நீதிகளும் பொய்யா—தமியேன்
வாக்குமன மொன்ருனது மெய்யா (சக்கரம்) 58

---

## மதுரைக் கடம்பவனநாதர் கலியுகச் சிந்து

1. சீரிலகுங் கடம்பவன க்ஷேத்திரத்தின் மகிமை
செழித்தோங்கி நடந்துவரும் சிறப்புகளைக் கேளாய்
காரிலகுந் தென்மதுரை வடதிசையில் வாழுங்
கணபதியைக் கைதொழுத காரணங்கள் சொல்வேன்

2. ஆதிமுத லின்றுவரை யுலகமதில் வழங்கும்
அறுபத்துநால் திருவிளையாட் டாடியதோர் நகரம்
சோதிமக மேருதனைச் செண்டதனு லடித்த
சூரஉக்கிர பாண்டியனுல் துலங்கிவந்த நகரம்

3. சங்கத்தார் கூடிநின்று வழங்கிவருஞ் சமயம்
சகலருக்கு மிடங்கொடுத்த சாத்திரங்கள் பாராய்
அங்கயற்கண் மீனுட்சி தவப்பயனு லுதித்த
அற்புதங்க ளென்னசொல்வே னுலவாயின் மகிமை

4. பிட்டுக்கு மண்சுமந்த எல்லையதும் விளங்கப்
பீடுபெறு கணபதியும் பூரணமா யுதித்தார்
எட்டுத் திசையறியும் புண்ணியர்கள் கூடி
ஏகாந்த மாக்கிவைத்த வின்பமது பாராய்

5. சாத்திரங்கள் பார்த்திராச விருட்சவேம்பு தன்னைத்
தபசீலர்கள் கூட்டிவைத்த சதிரான எல்லை
நேத்திரம்போல் விளங்கிவரும் சமயத்தில் தெற்காய்
நேராகப் பாற்கடம்பு தோன்றினது முண்டு

6. அன்றுமுதல் அடியார்கள் கூட்டமது கூடிக்
அன்புடனே சிவலிங்க மமைத்தகதை சொல்வேன்
கந்தனுக்கு மூத்ததொரு ஐங்கரனுங் கூடிக்
கடம்பவன நாதரென்று காரணப்பே ரிட்டு

7. கலியுகத்தில் நீதிக்கொடி நாட்டவந்த வேத
காரணங்கள் யாராலுங் காணமுடியாது
பலிகொடுக்க வந்ததொரு பாரதப்போ ரென்று
பரமசிவ னுரைத்தகதை பாரிலுள்ளோர் கேளீர்

8. ஐயாயிர மாண்டுக்குமே லதிசயங்கள் மெத்த
அறுபத்தைந்தாந் திருவிளையாட் டாடவந்த மகிமை
பொய்யேது மில்லையடா வுலகமது வுய்யப்
புண்ணியர்வந் தவதரிந்த புதுமையென்ன
(சொல்வேன் 59.

---

பல்லவி

சித்தந் தெளிந்திடு தேனே—விதேக
முத்தி பொருந்திடு மானே

அநுபல்லவி

சிற்பரசின் மயமாகிய சற்குருவின் பதம்நாடெனச்
செப்புமறை நீதிவழி சாரு-நெறி-தப்புவழி கூடாதென
மாறு) (சித்)

சரணம்

1. சத்வகு ணங்களைப் பூட்டி—யுயிர்
சித்ர ரதமொன்று கூட்டி
அத்துவி தக்கொடி நாட்டித்—தவ
ரத்ன மணிமுடி சூட்டி
அஷ்டதிசை எங்கும்புகழ் சட்டபரி பாஷையொடு
அமைந்த சூத்திரம் பாராய்—நீதி
விளைந்த விசித்திரம் நேராய் (சித்தம்)

2. தூலசூக் குமமெனுங் காடு—வெட்டிப்
பாதை தெளிவுறக் காட்டி
நால்வகைச் சேனையுங் கூட்டிப்—பரி
யானை ரதங்களு மோட்டி
நட்டநடு வானதிரு பட்டணமுஞ் சேரிலொரு
இரத்னமக மேருகிரி தோணுந்—தொண்டர்
நிஷ்டை புரிவதாய்க் காணும் (சித்தம்)

3. சத்துச்சித் தானந்த போகந்—தனை
யுற்றுணர்ந் தாலல்லோ யோகம்
நித்தியாநித் தியவஸ்து விவேகம்—பர
தத்வானுட் டானத்தின் யூகம்
நிஷ்களநிர் மலசாக்கர சொர்ப்னசார் பினையுற்றிட

நேசமொடு கூடிவிளையாடுந்—துரிய
பாவனைகள் வந்துகை கூடும் (சித்தம்)

4. நீரும்நெருப் பாறெனவுங் கூறு—பரி
பாஷைகளும் வேறெனவு மோரு
ஏறுமயிர்ப் பாலமுணர்ந் தோரு—சுவர்க்க
ஏழுநிலை மாடமது பாரு
இகபரநற் கதியேதரு குருபரனிர்த் தனமாடிடும்
ஏகசிம் மாசனத் தோடு—நிலை
யாகுந் துறைகண்டு கூடு (சித்தம்) 60.

---

## அருட் கும்மி

1. பச்சைக் கிளியே பசுங்கிளி யேகண்ணே
பாசமுள் ளவெந்தன் மாதுகன்னி
இச்சையுள் ள நவ ரத்தின மேயெனக்
கிங்கித மேயென்முன் வந்திடடி

2. ஆசையுள் ளமணி பெட்டக மேயெனக்
கன்புள்ள மாதவ சுந்தரியே
பூசை புரிந்திட வந்தாயோ செழும்
பொற்கொடி யேயென்முன் வந்திடடி

3. தேனேகற் கண்டேசெ ழுங்கனி யேமிகத்
தித்திக்குந் தெள்ளமு தேரசமே
மானேம டமயி லேவன்ன மேபொன்னே
மரகத மேயென்முன் வந்திடடி

4. ஆணிப்பொன் முத்தேய லங்கிர்த மேயென்று
மசையா மணியே கருவூலமே
மாணிக்க மேயெனக் கின்பமுள் ளமணி
மந்திர மேயென்முன் வந்திடடி

5. சந்தேக முள்ளவென் கண்மணி யேயெனைச்
சற்றேபி ரியாக்க வலையுள்ளாழ்
உந்தன் கவலையை நீக்கவல் லோநல்
லுபாயங்கள் சொல்கிறேன் கேளுமின்னே

6. ஆதி முதலிது காலம் வரையி
லடைந்திடும் பேர்க ளனேகமுண்டு
சோதிமெய்ஞ் ஞானசொ ரூபத்தைக் கண்டதோர்
சூட்சத்தைக் கேளடி பெண்ணரசே

7. கூடியிருக்கச் சகியாண் டியவன்
கூட்டத் துடனுமி ருப்பாண்டி
நாடி யிருக்கு மடியார் தமக்கவன்
நாட்டத்தைக் காட்டி நடித்திடுவான்

8. அன்பரைக் காக்கு மருளுடை யோனவ
னனந்தங் காட்டி மறைந்திடுவான்
துன்ப மிகவுங்கொ டுப்பாண் டியவன்
தோழமை யான துணைவனடி

9. ஆசார மாக விருந்திடு வானவன்
அனுசா ரத்தையுஞ் சார்ந்திடுவான்
பூசை புரிகின்ற மெய்த்தவத் தோருக்குப்
புகழ்கொ டுக்கின்ற தீரனடி

10. பாசக் கடலைய றுத்திடு வானவன்
பாசாங்கு செய்திடுங் கள்வனடி
கூசாமல் தூது நடந்திடு வானவன்
கொள்ளை யடிக்க வல்லவண்டி

11. கோட்டை யிடித்து நுழைந்திடு வானவன்
கொத்தள மேறிக் குதிப்பாண்டி
வீட்டினுக் குள்ளே நு ழைபவ னுரென்று
விசாரணை செய்யுந் தலைவனடி

12. சொல்லத் தொலையாத வற்புதத் தானத்தைச்
சொல்லவும் நாவுண்டோ தோகையரே
எல்லை யற்றபரஞ் சோதி யடியவ
னெங்குநி றைந்தப்ர காசனடி

13. கான மயிலே கருங்குயி லேநீ
கனவு கண்டதும் பொய்யாச்சோ

ஊனக் கண்ணுக்குத் தோன்ருதேயதை
யுற்றுணர்ந் தாலே தெரியுமடி

14. ஒன்பது வாயிலி னூத்தைச் சரீரத்தை
யுள்ள நாளெல்லாஞ் சுமந்தலைந்து
நன்றுதீ தென்று தெரியா மல்நீ
நாடெங்குஞ் சுற்றிஞ லாவதென்ன

15. கள்ள மனதைக் கசடறுத் துஅந்தக்
கள்ளனைக் கண்டு பிடியாமல்
வெள்ளம் வரும்போ தணைபோடக் கூடுமோ
மெல்லிய லேசற் றுணர்வாயே

16. சிந்தை தெளிந்துமே பார்த்தா யாஞல்
தெரிசனங்கள் தோன்றுமடி
சந்தேகப் பதங்கள் வேறுமுண் டோநீ
சாயுச்சி யங்கள டைவதற்கு 61.

---

## நெஞ்சினுக்கு உபதேசம்

---

### விருத்தம்

அன்பினைப் பெறுவா யாகில்
அதர்மங்க ளனைத்தும் நீங்கித்
துன்பமுந் தவிர்ந்து போகும்
துயரமிங் குண்டோ சொல்வாய்!
வன்பஞய் உலகிற் ருேன்றி
வாழ்வுநாள் முழுதும் செய்த
கன்மங்கள் வந்து சூழ்ந்த
காரண மறிவாய் நெஞ்சே! 62.

## விருத்தம்

(1) பூரணத்திற் பூரணமாய் எங்கும் நிறைந்து
ஆனந்தம் பொங்கி யூறும்
காரணனே யெனையிங்கே யழைத்தவகை
இன்னதெனக் கருத்திற் கொள்ளேன்
தாரணியோர் செயலதனை நீயறிவா
யானறியச் சத்தி யுண்டோ
வாரணமா முகத்தானே வந்துநீ
ஆட்கொள்வாய் மறந்திடாதே 63

(2) மறந்துவிட்டா லின்றுவரை
அநுதினமும் பாலூட்டி வளர்த்ததாரு
கறந்து கறந்தாவின்றன் கன்றுக்குப்
பாலூட்டுங் கதையைப் போல
சிறந்தெனை நீவளர்த்து விட்டாய்
செல்வனே யினிவேறு சிந்தையுண்டோ
பிறந்து பிறந்துழல்கின்றேன் பிறப்பறுக்க
அருள் செய்யும் பேருரானே 64

(3) பலவழியாய் நின்றுகொண்டு
பலவழியாய்க் காட்டுகின்ற பரமநாதா
கலைபலவு மாராய்ந்து உன தடிமை
உறுதி கொண்ட கருத்தின் வண்ணம்
நிலைபலவும் தெளிவித்தாய் ஒன்றெனவும்
வழிகாட்டி நீநானென்று
அலைவிலாமன தாக்கி யுலக மெச்சும்
அரசு செய்ய அடிமை கொண்டாய் 65

---

## அத்துவிதானந்தக் கும்மி

கும்மியடிப் பெண்கள் கும்மியடி குரு
பாதம் நாடியே கும்மியடி

அம்மையு மப்பனுங் கூடியிருந்த
வதிசயங் காணவே கும்மியடி

1. அப்பனென் றேர்சொல் சுருதி ரகசியம்
ஆத்தாளோ சித்து சடமாச்சு
செப்ப வொணுதவ ரூப்வெ ளிதனிற்
சிற்சபை யொன்று சமைந்ததடி

2. நாதாந்த மோனந டனச பைக்கு
நடுவே மகாமேரு கம்பமொன்று
வேதாந்த வாலே புவனை திரிபுரை
வீதி மனேன்மணி வாசல்களும்

3. ஓங்காரத் துட்பொருள் பீசாட் சரமா
யுகாரம் அகார மகாரமிட்டு
ரீங்கார மானச பைதனி லேசிவம்
சத்தியொன் ருன துபாயமடி

4. முக்கோண வட்டப் பிறையொன்று சாத்தியே
முன்னணி பின்னணி தான்துறந்து
விற்கோண மாகவே வேதாந் தவீதி
விளங்குஞ் சதாசிவ மாளிகையும்

5. சந்த்ர கலேயென்றும் சூர்ய கலேயென்றுந்
தற்பர மானசு ழுமுனேயும்
நந்திகொ லுவென்றும் நாதவிந்து என்றும்
நவரத்ன மானகொ லுச்சபையில்

6. மண்டலங்கள் மூன்றுண்டாக் கிவேக
வாசிக் குதிரையைக் கட்டிவைத்து
விண்டுசொல் லாதவி டந்தனி லேவிளே
யாடல் புரிந்ததைக் கேளுங்கடி

7. பிருதிவி யப்புத்தே யுவாயு வாகாயம்
ப்ராண னபான தசவாயு
சோத்திரம் தொக்குசட் சுசிங்குவை ஆக்ராணம்
சுத்ததச நாடிக் கூட்டங்களும்

8. வாக்குப் பாதம்பாணி பாயு ருபத்தும்
மகிழ் நவத்துவார வாசல்களும்
ஆக்கிய ளித்துத் துடைக்கின்ற முத்தொழி
லாதிவ குத்ததி றங்களாய்

9. சத்தபரிசரு பரச கந்தமும்
தன்மய மாக்கிய சாலவித்தை
சுத்தம சுத்தம்ரெண் டுண்டாக் கிமாயா
தொல்புவி யாளவ குத்தகதை

10. நல்வினை தீவினை சுவர்க்க நரகமும்
நான்கு பதவியு முண்டாக்கி
கொல்ல யெமனையுங் கூற்றுவ னுகவே
கோலங்கள் செய்த தபாரமடி

11. ஆருதா ரமுதல் மூலாதா ரந்தொட்
டடுக்கடுக் காக வமைத்துவைத்து
மாருதி ருந்துமுன் கம்பத்தி லேறிய
வல்லவன் கூத்துவி னேதமடி

12. சூத்திரப் பாவையொன் றுண்டாக் கியதில்
சூக்கும மாகவி ருந்துகொண்டு
சாத்திர வேத சமய நெறிகளுந்
தத்துவந் தொண்ணூற்ரு றுங்கயிருய்

13. அன்னபி ராணம னேமய விஞ்ஞான
மாதார மானந்த மானுலும்
வின்னப்ப டும்வாத பித்தசி லேத்மமும்
மேல்நாடி ரெண்டுத னிப்பீடமும்

14. பத்திப் பிடித்தந்த ரேசகத் தில்வாசி
பன்னிரண் டங்குலம் பாயவைத்து
வெத்தியாய் நான்குக ழிந்தெட்டுப் பூரக
மேவிய கும்பகஞ் சார்ந்திடவே

15. அகர முதலவ் வெழுத்துக்கு நூல்சுத்
தறுபது நாழிகை யோடுவது
பகருமி ருபத்தோ ராயிரத் தறுநூறு
பாயும் சுவாசந்த னிலிருந்து

16. ஏழு வகைத்தோற்ற மெண்பத்து நான்குநூ
றுயிரஞ் சீவபே தாதிகளும்
சூழப்பிர்ம் மாண்டங்க ளாக வகுத்த
துறவுகள் மாயையின் கோட்டையடி

17. எங்கெங்குந் தானுயி ருந்தர சாட்சிக
ளெப்படிச் செங்கோல் செலுத்துவது
அங்கங்குந் தன்னை யறியாம லேபூத
சாட்சியாய் நின்றது மூல்மடி

18. எண்ணத் தொலையாத அண்ட சராசர
மேகமாய் நின்ற பரஞ்சோதி
கண்ணற்ற பாவிகள் கெட்ட ரகசிய
காரணம் யாவ ருரைக்கவல்லார்

19. மும்மல மாணவ மாயைகன் மங்களும்
முக்குண முப்புரந் தானுகி
அம்பல மாகிய வாணவக் கோட்டை
யலங்காரஞ் செய்தது பாருங்கடி

20. இராசத தாமச சத்வ குணங்களும்
நானென்ற ராட்சதப் பூண்டாகிப்
பாசம் படர்ந்து கொடிதளிர் பூகாய்
பழுத்துச் சொரிந்தது பாவியர்மேல்

21. இராகத் துவேஷங்க ளெட்டோ டுபின்னி
நன்றுய்ப் படர்ந்து வளர்ந்தேறி
மோகித்த போகங்கள் யாரா லுஞ்சொல்லி
முடியாதென்றேப ழமொழிகள்

22. மந்தம னம்புத்தி சித்தம கங்காரம்
மாயாதி பூதபொ றிபுலன்கள்
ஐந்துவி தமலர்க் காய்க னியாகி
அகண்டமு மானத ளவில்லையே

23. இத்தனை கோலமு மித்தையென் றேகண்
டிகபர மிரண்டையுந் தான்கடந்து

அத்தன் திருவடி சாரா மல்இன்று
ஐயப் படுவதற்றியாமை

24. அன்னை வயிற்றிற் பிறந்து மிறந்து
மனைக்குசென்மங்கள் தவமிருந்தும்
தன்னை யறியச் சதாநிட்டை யாயோக
சாதனஞ் செய்து முணராமல்

25. கன்னல் மொழிபேசும் வன்ன மயிலேயுன்
காரண மெல்லாந்தெ ரிந்துகொண்டேன்
சின்னுபின் னமாகச் செய்ததோர் தீவினை
செப்பக் கணக்குண்டோ தேவியரே

26. அன்ன நடையுள்ள பெண்ணர சேயுன்றன்
அன்பின் வழிசெல்லப் பாடுபட்டேன்
முன்னும் பின்னுமாகத் தானலைந் துகெட
மோசங்கள் செய்தாயிம் மாநிலத்தில்

27. பெண்ணர சேயுனை நம்பிக்கெட் டகதை
பேசவிர் திசேட ஞல்முடியா
மண்ணுல கத்தாரும் விண்ணுல கத்தாரும்
மாண்டார்க ளுன்றன் மயக்காலே

28. நம்பிக்கை மோசங்கள் செய்ததி ஞலுனை
நம்பவொண் ணுதடி கோதையரே
தும்பிக்கை யானைமு கவன ருள்வந்து
தோன்று தடிபர மானந்தமாய்

29. ஒற்றைக்கொம் பன்கழல் கண்டுகொண் டேனடி
யுத்தம மானவ ழியேகப்
பற்றுகள் விட்டுப் பரத்தை விரும்பியான்
பற்றறப் பற்றுமி டந்தனிலே

30. அத்துவி தவுண்மை யாரறி வாரடி
அற்பம தல்லவே ஆரணங்கே
சித்தந் தெளிந்து சிவமா ஞலருள்
செல்வம்வந் தெய்திடுஞ் சீரடைய

31. பொல்லாத மாயைதனைக் கடந் தால்பரி
பூரண மாகுமென் றேதெரிந்து
எல்லா முணர்ந்த பெரியோர்கள் பற்றி
யேக வழியாய்த் துறந்தார்கள்

32. அங்கத்தி னுள்ளும் புறம்பும் பரிசுத்த
மானமெய்ஞ் ஞானி பதம்பணிந்து
திங்க ளணிதில்லை வான நடம்புரி
சேவடிக் கர்ப்பணஞ் செய்துவிட்டேன் 66.

---

பல்லவி

தூங்குகின் றாயோ கணேசா—தூங்குகின் றாயோ

அநுபல்லவி

ஓங்கி வளர்ந்த விருட்சத் தடியில்
உல்லா சத்துடன் வீற்றி ருந்துநீ (தூங்கு)

சரணம்

1. பாமுல கந்தனில் நீதியே யில்லை
பஞ்சமா பாதகர் செய்கின்ற தொல்லை
ஏழைகட் கிங்கே யிருப்பிட மில்லை
என்செய்வே னேருத்த ரஞ்சொல் லேநீ (தூங்கு)

2. நம்பிக்கை யாகவே பங்கி கொடுத்தான்
நாணயக் கள்வ ரிருவர்கள் தானே
வம்புத் தனஞ்செய் சிதம்பரஞ் செட்டியின்
வார்த்தையை நம்பியே சர்ச்சி கொடுத்தான் (தூங்கு)

3. ஊழ்வினை யென்றே அரிகர புத்திரன்
உள்ளந் தெளிந்தா னுனக்கப யமென்று
தாழ்வை யடைந்தவன் பெண்பிள்ளை வந்துன்
சந்நிதா னந்தனில் தாபதஞ் சொல்வதேன் (தூங்கு)

4. அன்பெனு மரிகர புத்திர னுக்கிந்நாள்
அப்பீலில் விடுதலை யாமென் றுரைத்தாய்
துன்பமில் லாமன தாயோர்மை கொண்டு
துரைத்தனத் தாரால்ஐக் கோர்ட்டி லப்பீல்செய்து
(தூங்கு)

5. நின்செய லால்பிரஞ்சுத் துரையுத வியாலே
நீதமுள்ள பார்த்த சாரதி தானும் வந்துற்று
என்செய்தாய்க் கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்புத் தனை நீக்கி
இரங்கினு யேழைத னக்கிரங்கி நின்ருயே (தூங்கு) 67.

---

## உபதேசம்

1. ஒப்பற்ற செய்கைக ளெவை யானுலும்
உலகத்திற் செய்யாதே உண்மை சொன்னேன்
தப்பிதங்கள் வந்துவிடும் நமனுக் காளாய்த்
தாங்காத வறுமைவந்து தவிப்பா யப்பா
முற்பிறப்பிற் செய்தவினைப் பாக்கிக் காக
மூட்டிவிட்டான் ஈசனவன் புவியின் கண்ணே
இப்பிறப்பி லதையறிந்து நடவா விட்டால்
எமன்கையிற் சிக்குவது திண்ணந் தானே 68

2. கங்கைதனில் நீராடிக் காசாயங்கள் தரித்தவர்போல்
அங்கமுழுதும் நீறணிந்தே அரனைத்தொழுதங்
[கடிபணிந்தே
எங்குந்தொழுவர் கண்மூடி யிருப்பர்மௌனஞ்
[சாதிப்பர்
மங்கைதிருடுங் கள்ளரப்பா மாயவலைக்குள்சிக்காதே69

3. அங்கவன் செய்த நன்றி யறிந்துநீ நடந்தாயாகில்
இங்குமுன் செய்தபாவம் இனித்தொட ராதுகண்டாய்
பொங்கமா யிச்சென்மத்தே புரிந்திடுந் தபசினுலே
சங்கரன் பாதஞ்சேரத் தாமத முண்டோ நெஞ்சே 70

4. ஆடுகின்ற கூத்தெல்லா மரன்கூத்தே யல்லாதிவ்
[வவனி மீதில்
தேடுகின்றபொருளெல்லாமுன்னதென மதிக்கின்ருய்
[தேகம் பொய்யே
நாடுநகர் பொருளெல்லாம் நம்மைவிட்டு டிகலாதோ
[நமன்வந்துற்ருல்
ஓடுகின்ற ஓட்டமல்லால் பாழ்மனமே எனக்கிங்கே
[ஒருக்கா லுண்டா 71

5. ஆசைகொண்ட பாழ்மனமேஅகிலமதிலேன்பிறந்தோ
(மய்யன்பாதம்
நேசமுடன் விரும்பிமுன்னுள் செய்வினையை யகற்றுங்
(கால் நித்தம் நித்தம்
பூசனைசெய்வதுமன்றிப்பேதாபேதம்நீக்கிப் புலன்கள்
(யாவும்
பாசமற நீக்கிப்பே ரின்பானு சுகமடையப் பகுத்த
(வாறே 72

---

## வண்ண விருத்தங்கள்

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன -தனதான

1. சீவனென தெனமனம்வி டாமலது தொடரவினை
சேரும்வகை யாவதென —வறியேனுன்
சீறுமல மாயையொடு கூடிவிளை யாடுமெனைத்
தேடிமதி யாவர்சொல —வருவார்கள்

பாவியெனு மோர்குறைக ணீதிகெட யார்செய்தது
பாலனெனை யேதொடர—வழியேது
பாவமிது வோமுன்செய்த பாவமென யாரறிவர்
பாரிலுளோ ரேசுவது—முறையோசொல்

காவுகொடுப் போர்கள்வினை காலனணு காதபடி
காலனைக்கா லாலுதைத்த—கருணேசா
காமகணை யாலுருகி நாவுதடு மாறியிது
காலம்வரை யானுழல்வ—தறியாயோ

யாவுமறி யாதவுனை யாவரறி வார்களிது
யானுமறி யேனெனது —குறைதீராய்
யாதுமறி யேனுனது பாதமதை நாடும்வகை
நாதனே யெனக்கருள்செய்—குருநாதா 73

---

தானத் தனதன தானத் தனதன
தானத் தனதன தானத் தனதன
தானத் தனதன தானத் தனதன—தனதான

2. கானற் சலமென வேயுற் றிடுசக
மாயைக் குழுமல வாதைப் படுவது
காமக்ரோதலோபமோகத் தொடுபுனல்-கருவாகிக்

காருற் றிடுகுழல் மாதுட் புகவெய்த
காலத் த்ரயமது யார்செப் பிடுமுறை
காதற் படுமக வாயிக டமது —வெளியாகி

ஈனப் படுசிறு வாலைப் பர்வமதி
லேகற் றிடுகல்வி யேதுக் குதவிசொ
லேகப் படுமன தாகித் தெளிவது—மெதுநாளோ

ஏனிப் படியுற வாகிப் ப்ரணவசொ
ரூபத் தினிலய மாகிக் கொளுமடி
யார்கட் கினிதுற ஏவற் பணிசெய — அருள்வாயே

ஞானக் கிரிவல மேகச் சொலுமொழி
யானெப் படியறி வேனக் காலமதில்
ஞானக் கனியென வேயுட் புகவலம்—வந்துநேரே

நாதக் கனிதனை யேபெற் றிடுமத
வேழச் சுவைதனை நாவிற் பெய்தருள
நானிப் படியுற வாகக் கண்டதுவும்—நிசமாமோ

மோனக் கனிபெற ஞானக் குரவனு
மோகித் தொருமையி லேறிக் கனலொளி
மூளக் கிரிவல மாகிக் கொண்டகனி—யிதுதானே

மோகப் படுமடி யேனுக் கருள்செய்த
மூலக் கனிருசி யார்செப் பிடவலர்
மோகித் தெழுமடி யார்கட் கினியகனி—இது
(தானே 74

———

தானனு தத்ததன தானனு தத்ததன
தானனு தத்ததன தானனு தத்ததன
தானனு தத்ததன தானனு தத்ததன—தனதான

3. ஆறதா ரத்தின்வழி மூலதா ரக்கனலை
ஆவியோ டொத்துநிலை நாதவிந் துக்கனியை
ஆசையோ டொத்தமரர் மூவர்தே டிச்சிறிது—மறியாத

ஆதியாய் நித்யபர மேவவே யுத்தமர்க
ளாவிகா யப்பொருளை நேயமாய்த் தத்தமளித்
தானதோர் சற்குருவின் பாதமே நித்யமென—அடைவார்கள்

வீரமே சத்யமென சோரனு கிப்ரபல
வேசிபோ லிச்சையுள மோகனு கித்திரிந்து
வேதபா டத்தின்மொழி நீதியாய்க் கற்றுணர—அறிவாரோ

வேதமே சத்யமென நீதியாய்க் கற்றுணர்
விவேகமே பெற்றுய்வகை யாவர்போ திப்பர்சொலும்
வேதவே தத்துவிகள் நீயலா துற்றுணர—அறிவாரோ

காரணு கர்த்தனன்றி வேறலா துத்தமர்கள்
காணவே செப்புமொழி யாவர்சோ திக்கவலர்
காமியேன் செப்புமொழி யாவர்தா னெப்புவர்கள்—கணநாதா

காலகா லத்திலெனை மாலைகூ டக்கங்கணங்
காதலாய்க் கட்டியினிச் சேர்தலா லட்டியென
காதலீ பக்குவமி லாததோ கற்புநிலை—தவறேசொல்

பூரணு னுக்ரகம்வைத் தாளுவா யிப்படிப்பொ
ருமையேன் வைப்பொருத்திப் போதமோ யிக்கருத்துப்
பூவையா ளுக்கிசைத்த பாவமோ எக்கருத்து—மறியேனே

பூவின்மே லிப்பிறப்பு நீதமோ கற்றவர்க்குப்
பூதபே தத்தின்வகை யாதியா லிச்செனிப்பின்
போதமே சிக்கறுத்துன் பாதமே நித்யதத்வ—மருள்வாயே 75.

———

நாமுடை- ஆதி

தனஞ தனதன தந்த தனத்தன
தனஞ தனதன தந்த தனத்தன
தனஞ தனதன தந்த தனத்தன — தனதான

4. மனமே யருள்பெற வஞ்சக மற்றுநல்
வழியே கவுமொரு மந்த்ர மிருக்குத(ம்)
மதுவா மிர்தமதை நெஞ்சில் நினைப்பது — மரிதாகி

மனையா ளொடுதினம் நின்று சுகப்படு
மதனு மிர்தமதை யுண்டு களிப்புறும்
மயலா னதுபெரி தென்றுநினைப்பது-முறவாமோ

வினையா லிதுசடம் வந்த தெனப்பட
விரிவா யந்தணர் மறைபல செப்பிடும்
விதமே நடைபெறு குங்கன வுத்தம — நுறவாகி

விரைவாய் மங்கைய ருறவுக ளற்றினி
விலகா திருமவு னத்தனி லிக்கணம்
விடயா திகள்பல வந்துக ளற்றுநன்—னிலையாகி

கனவா யுறுசெக மன்றென நித்திய
கருணு நிதிபதம் நன்றென வுட்கொளு(ம்)
கதிரோ னெடுமதி சென்றிடு மட்சர — வழியேகி

கனகா பீடமதில் நின்று நடித்திடு
கரிமா முகனடி சென்று துதித்திடு
கணநா தவொலிகள் கிண்கிணி பற்பல — இசை
பாடும்

நினைவே யதிலுரு கும்படி வைத்துநன்
நியமா திகள்தனை நெஞ்சி லழுத்தியந்
நெறியே கடைப்பிடி பந்தம கற்றிவிண்—
ணொளியாகி

நிழல்போ லதனிடை யன்புமி குத்திடில்
நெடுமா லயனெடும் உம்பர்கள் மெச்சுவர்
நிருவா ணச்சகஜ நின்மல சாக்கிர —
நிஷ்டையாமே 76.

———

தனதான தத்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன தனதான தத்ததன— தனதான

5. செகசால வித்தையென நடிகோல மெத்தவுள
திருவாச கத்தையொரு மனுவாக வுற்றெழுது
திருவாச கத்தில்மன மொருவாச கப்படுவ— துரையாயோ

திருவா யுதித்துருகு மணிவாச கத்தினுரை
தெரிவா ருளத்திலரு மறையே யெனப்புகல
திடமா யருட்குரவ வடிவா யுரைத்தமொழி— யறியேனே

பகையா யெனைக்கைவிடல் முறையோ வுனக்கபயம்
பரிபாஷை செப்பவுன தடியா ரெனச்சுந்தரர்
பரிபாக அப்பரொடு திருஞான மெய்க்குரவ— ரெனுமூவர்

பறைபோட விப்புவியில் மறைநால்வர் செப்புமொழி
பணியாக முற்றுநவ மணியா யிழைத்துனது
பரிபாக பக்வமதில் வருவோர் தமக்குதவு— மணிமார்பா

வகையான பொக்கிஷமுன் னருகே யிருக்கநல
மறியாத பக்குவனை யெளியே னெனக்கருதி
மனநோக விட்டிடுதல் தகுமோ வெனக்கொருவர்— துணையேது

வரும்வேதை யத்தனையும் பொறுக்கே னினிச்சிறிதும்
மகவான இக்குழவி பரிதாப முற்றுருகல்
மனமோ வுனக்குருக விலையோ திருக்கருணை— யிதுதானே

நகையா திருக்கும்வழி யெவர்தா னுரைக்கவலர்
நயமா யுரைக்குமுரை செவியோ திறக்கவிலை
நறுமா தவத்தினர்கள் பதமே தொழச்சிறிது— மறியேனே

நடுவாக வைத்தபொரு ளுனதோ வெனக்குமது
நடுவான பொற்சபையி லுறைவோர் தமக்குமது
நமனுர் தமக்குமிலை பகைவோர் தமக்குமிலாப்— பொருள்தானே 77

தானதத்த தத்ததத்த தானதத்த தத்ததத்த
தானதத்த தத்ததத்த தானதத்த தத்ததத்த
தானதத்த தத்ததத்த தானதத்த தத்ததத்த—தனதான

பூர்வ கல்யாணி ஆதி

6. மூலவித்தி னைப்பரப்ப வேரறத் திருத்திவெட்டி
மூவகைப் படுத்தியுச்ச மாநிலத்தில் வித்தையிட்டு
மோனவித் தெனத்தளிர்த்து வானம்விட் டிறக்குசுத்த—சலமோடி

மோகனப் படக்குளிர்ச்சி யாய்வளர்த்த கொப்புமுட்டி
மூலவட்ட சக்கரத்தி னுடலுற்ற தைப்பிடித்து
மூதுணர்த்தி வித்தசித்ர கூடமட்டு முட்படுத்தி—நிறைவாகி

வேலதைத் தொடுத்துவிட்டு சூரரைப் பிளக்கவெற்றி
வேல்மயில் குகன்நடத்தி வேகமுற்றிடத் துரத்தி
வீரமுற் றவுணர்சுற்றம் மாளவெட்டி வெற்றிபெற்று—நிலையாகி

வீடுபெற்றிடப் பகைத்த சூரரைச் சிதைத்துநித்ய
வீடளித்த சித்திபுத்தி நாயகத்தை நித்தநித்தம்
மேவினர்க்கு அச்சமுற்று தாள்பணிக்கு இச்சையுற்றுப்பொறையாகி

ஓலமிட் டுரைத்தலுத்த பாலருக் கனுக்ரகித்த
ஓர்மையைப் பிடித்தசுத்த மாயையைச் சழக்கறுத்து
ஓமெனக் கருத்துள்வைத்து(ள்) ஓசையைக் கலக்கநித்த—முறவாடி

ஓரெழுத்து ளுற்பவித்த காலசித்ர குப்தனுக்குள்
ளோர்படத் துளெக்கணக்குஞ் சீர்திருத்த வொப்புவித்தே
ஓர்நிமிடத் துக்கடத்துள் பாரெனத்திரட்டிவைத்த—குருபாராய்

தூலசூக்கும காரணத்தர் பூபுவர் சுவர்க்கமட்டும்
தூலமுன்கன் மஞ்சலித்தெல் லாஞ்சலித் துரப்பிநிற்க
சூழ்வினைப் படம்பதித்த தீவினைப் பயன்செலுத்து—முறைதானே

தூய்மையுற்ற நிர்க்குணத்தின் வாய்மையுற்ற திற்றொடர்ச்சி
சோர்வறக் கடைப்பிடித்தெந் நாளுமச் சுகக்கடற்குள்
சோதியிற் கலக்கநிர்த்த மாடுபொற் பதத்திலைக்ய—மிதுதானே 78.

தனதனன தந்ததந்த தனதனன தந்ததந்த
தனதனன தந்ததந்த தனதனன தந்ததந்த
தனதனன தந்ததந்த தனதனன தந்ததந்த—தனதான

7. மதியொடு புனைந்தகங்கை மகுடமணி கொன்றைதும்பை
மலையரச னன்றுதந்த மதனவிழி கொண்டசுந்த்ர
மனைவியொடு சென்றமர்ந்த மரபையறிகின்றதந்த்ர—மறியாமல்

மனலகரி கொண்டுசிந்தை மகிழ்வொடு திரிந்துபெண்கள்
மயலது சுழன்றுபொங்கி மருவியது பின்றொடர்ந்து
மலமதி லிடைந்துநொந்து மகவுபடு துன்பமென்றும்—விலகாதோ

பதிதனிலுறைந்த அன்பர் பவமது கடிந்து உன்றன்
பதமிசை படிந்துவிந்தை பகருதிரு மந்த்ரமென்றன்
பவகடல் கடந்துவந்த பரவுணர்வு கொண்டுதங்க—முடியாதோ

பலவித குணங்களைந்த பருவமது மிஞ்சுகின்ற
பரிதிமதி சென்றிலங்கு பருவத மெனப்புகன்ற
பரமநிலை கண்டதொண்டர் பணிவிடையி லன்புகொண்டு—
[தவறாமல்

துதிபெறு குணம்பொருந்த துணிவுபெறு சிந்தைதந்து
துறவுகள் பதம்பணிந்து துகளறு தலம்புகுத்து
துணையென அறிந்துணர்ந்து துரியநிலை சொந்தமென்று—
[அருள்வாயே

துவிதமொ டிருந்துகந்த துயர்கள்பல வுந்தவிர்ந்து
துரிதமுள சந்த்ரவிம்ப சுடர்தனி லழுந்திநந்தி
துஜகருட கம்பமென்ற துருவ நிலையந்தமென்று—மறியேனே

கதிபெறவு நன்றுநன்று கணவனை யறிந்தமங்கை
கருதியருள் சென்றணைந்த கலவியில் நயந்துகொஞ்சு
கனியமிர்த முண்டவஞ்சி கனவிலுமறந்து நெஞ்ச—மயர்வாளோ

கபடமன வஞ்சநெஞ்ச களவுகொலை தஞ்சமென்ற
கயவரை மறந்து அஞ்சி கசடறமொழிந்தவிஞ்சை
கருணைபொழி மந்த்ரமொன்று கடைப்பிடி திருந்தவென்றும்—
[நிலையாமே 79.

---

தனதான தத்ததன தத்தத் தனத்ததன
தனதான தத்ததன தத்தத் தனத்ததன
தனதான தத்ததன தத்தத் தனத்ததன—தனதான

8. முடிவான முப்பொருளை முத்திக்கு வித்தகனை
முறையே கருத்துட் திருத்தப் பழுத்தொழுகு
முதலான நற்கனி வடித்துத் தனித்தரசம்—பருகாமல்

மூலமாதர் பட்சமதி லிச்சித் திருப்பதுவு
முறையோ நமக்குப் பழிப்புச்சொ லித்தனையு
முதவா தெனப்பகர்வ தைப்பற்றி நிற்பதுவும்—நலமாமோ

பிடிவாத முற்றுப் பொருட்பெற்ற சித்தரடி
புரையோட நத்திப் பிடிக்கக் கிடைக்குமருள்
பொதுவான சித்தம் பலத்தைக் குறிக்கும்வழி—இதுதானே

புலவோர் தமக்குட் களிப்புற்ற சிற்கசுன
புரமேவ நித்யத்வ நிர்க்குண மிகுத்திலகு
புலியா சனத்தைத் தரிக்கும்பரிபக்வமது—வெளியாகும்

கொடிதான துஷ்டருட னிஷ்டமது நீக்கிப்பொய்
கொலைகாம கட்களவு சற்றுமில தித்தனிமை
கொழுவா யுனக்குநிக ரித்தல மிருப்பரென—புகல்வாரோ

குரவோர்கள் பட்சமது கிட்டப் பரத்வநிலை
குணமாகு முற்சனன வித்தைக் கொளுத்திவிடு
குறைவேறு நிற்சலன முற்றுப் பிறப்பறுதல்—தெளிவாகிப்

படியேற வுச்சிவெளி சித்திக்கு நற்கருணை
பரபோக மிச்சிப்ப தெத்தனை தவத்தினர்கள்
பரையேக சிற்சபை நடிக்கக் கருத்துருவ—மதைநாடு

பரநாத கொர்ச்சிதமும் பற்பல விதத்தொனியும்
பரிதாப முற்றுணரு முத்தமர்க ளுக்கிசையும்
பலகாலு முத்திநெறி கைக்கொளுவ திப்படியென்—றுணர்வாயே 80

தனதானன தந்த தனந்தன
தனதானன தந்த தனந்தன
தனதானன தந்த தனந்தன — தனதான

9. அறமேபொரு ளின்பம் விளைந்திடு
மதுவேபெரி தென்று நினைந்திடில்
அறிவோடருள் வந்து பொருந்திடு—துணையாகும்

அணுவேனு மறந்திடில் நம்செய
லறியாமை யெனும்பெயர் கொண்டிடு
மனைவோர்களும் நிந்தனை யும்புரிந்—திகழ்வார்கள்

குறமாதை யணைந்திடு சம்ப்ரம
குகவேள்துணை தந்தி முகன்பதம்
குறியாக வணங்கிடு மன்பர்க—ளடிசாருங்

குழல்சோரிட நின்றிடு மங்கையர்
குயில்போலிசை யுங்குர லின்புறு
குணமோடு செறிந்து மயங்குத—லுறவாமோ

பரமேயுற வென்று துறந்திடில்
பவமானது வெந்து தணிந்திடும்
பகர்மாமறை சங்கை தெளிந்திடும் — விரைவாகப்

பனிமாமதி செங்கதிர் தங்கிய
பதிமேல்நட னம்புரி கின்றது
பணிபாத சிலம்பு கலின்கலி — னென்றுபாட

மறையோர்தொழு மம்பல முந்திரு
மகமேரு வெனுஞ்சுழி கண்டவர்
மனமானது செந்தழல் கண்படு — மெழுகாகும்

மவுனதிக ளுந்திற மென்றிட
மணிமேடையி லன்பு சுரந்திடும்
மதுவாமிர்த முண்டு சுகம்பெறும்—வழிதானே 73.

———

தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன—தனதான

10. ஆதி யிற்ககன சோதி முச்சுடர்கள்
ஆவி யிற்பொதிய தேயு அப்புவொடு
ஆக மத்தின்வழி நீதியிற் ப்ருதிவி —சமனுக

ஆலி னிற்றுயிலு மால்தனக் குமரு
கானனப் புகலு மோத கப்பிரிய
னுன விக்கினவி நாய கத்தினடி —மறவாமல்

ஓதி வைத்தகுரு மூல மித்தனையு
பாயம் வைத்துமுண ராதிருப் பதுமுன்
னுள்வி தித்தவிதி தானெனப் பகர்வ—தறியாமை

ஓர்மை கெட்டமன மேஇனிச் சொலுவ
தூக மற்றசெய லேஎனக் கருதி
யோக நிட்டைபுரி மாத வத்தினர்கள் – அடிசேரும்

வீதி யிற்சரச மாய்ம யக்கவரு
மேல்மி னுக்கியிந்த்ர சால வித்தைசெய்மின்
னுர்க ளிச்சையைவிடாதி ருப்பதுவு—முறைதானு

வீண ரிப்படிய னேக மிப்புவிவி
வேக மற்றுமலை வார்க ளிக்கரும
மேன்மை யைத்தரவொ ணுதெ னக்கருதி
—விடுவாயே

நீதி யைப்பெறவி சார முற்றுநெறி
யாய்ந டக்கமறை யோர்கள் சொற்படிநல்
நேம நிட்டைதவ ருதிருப் பவர்கள் —துணையாகும்

நீள்பி றப்புமினி யேது நற்றவநி
ராம யப்பொருள்கை கூடு மிச்சமயம்
நேசம் வைத்துநமை யாதரித் திடுவர்
—பெருமானே 74.

———

தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன—தனதான

11. கதிரொளி பெற்றுக் கழுத்தி லேஅணி
கனக மிழைத்துக் கோத்த மாமணி
கருமுகி லொத்துத் திகைத்த நீள்குழ
—லொடுசோரக்

கலவி விளைத்துப் பருத்த மா நகில்
தனிவரு டிக்கொண் டணைத்து நாவில்தான்
கனியமிர் தத்தைப் பெருக்கி யேமத—கணையாலே

பதிசய னத்திற் குவித்த மாமலர்
பரிமள மிட்டுக் களிக்கும் வாசனை
பலதொழி லெட்டிற் குறித்த லீலைகள்—தவருமல்

பகவ னிடத்திற் சுகித்த பார்வதி
பரவச முற்றுத் தனித்த வோருரை
பகருவள் புத்ரப் பலத்தை யேபெற—சிவனும்

சதியுடனொப்புக் கொடுக்க வேகண
பதியும் வயிற்றிற் செனிக்க நாடினர்
சலனமு மற்றுத் தவத்தி லேயிரு—வருமாகத்

தபசு முடிக்கத் துதிக்கை கோடொடு
தளதளெனக்குஞ் சரத்து மாமுகன்
தழுவி யெடுக்கப் பருத்த பேழையின்—வயிருக

மதிவத னத்தைக் குறித்த பார்வையள்
மகவினை முத்தங் கொடுத்து பால்தனை
வயிறு நிரப்பப் புசிக்க வேயிவ—ளரனோடும்

மடிதனில் வைத்துச் சிரித்த கோலமு
மகிழ்வொடு பெற்றுக் களித்த பாலகன்
மலரடி பற்றக் கதிக்கு நேர்வழி—புரிவோனே.75.

———

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன — தனதான

12. திடத்து நின்றிடு குறமகள் குரலிசை
தினைப்பு னந்தனில் மயிலொடு குயில்களுந்
திகைத்து நின்றது நமதுற விதுவென—முறைகூற

திருக்கு ழந்தையி னருகினில் வர்வர
சிறப்பு டன்பணி கலைகளு மசைவுற
திருக்க ரங்கவ ணெறிகிற சுழலொடு — குழலாட

உடுக்கை வென்றிடு மிடைதுவ ளஎறிகல்
லொலிக்கி ளம்பவும் உணவுகொள் பறவைகள்
உரத்தெ ழும்பியெ அவரவர் கிளையொடு
—மறைவாக

ஒருத்த ரின்றியெ பரணத னிலுலவி
உரைத்த பண்களு மதிவத னமுமிவள்
உருக்கமுந்திருவிரைகுல மெனமயில்—குயிலோடு

நடுக்கம் வந்திரு கிளைகளும் வழிசெலும்
நடக்க வின்புற ரகசிய மறியுநா
ரதப்ர புஞ்சர வணபவ னெடுவிள—மயலாகி

நரைக்கி ளம்பிய வயதொடு புனமதில்
நடிக்கும் வஞ்சியி னருகிவர் பசியென
நகைக்க உண்டிடு மதுவொடு விரவிய — தினை
மாவைக்

கொடுத்த பைங்கிளி கரமதில் வளையல்கள்
கொடுக்க வும்பல தினசுக ளுடன்வரு
குகப்ர பும்பல வடிவுட னுரைசெய்து—முடியாமல்

குறித்த தந்திமு கவனடி தொழுதிட
குலத்தி லுஞ்சிறு துணைவனெ னவுருகி
குறப்பெண் மங்கல முடிவுசெய் தருளிய
—பெருமானே. 76.

———

தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன
தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன
தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன—தனதான

13. முத்திக் கொருத்தநவ ரத்னப் பதக்கமணி
முற்சித் திபுத்தியிரு கக்கத் திடுக்கியபின்
முற்கற் பிதப்பிரமன் பக்கத்தில் வைத்தசரஸ்—வதியாளே

முற்பாற் கடற்றுயிலும் விட்ணுக்கு லட்சுமியும்
முத்தர்க் குருத்துடைய ருத்ரர்க் கருட்பார்வதி
முக்கட் பரப்பிரமர் சித்தப் படிக்குமகேஸ்—வரியாளும்

சித்ரச் சபைக்கருகில் நிர்த்தப் படக்கருதி
சித்தர்க்கு ஒப்புவமை யற்றுக் களித்திலகு
சித்தம் பலச்சதா சிவத்திற் குஹத்தமனேன்—மணியாகிச்

சிற்சித்தி பெற்றகுக னுக்குப் பரத்தியொடு
சித்துக் குறத்தி யிவர்கட்குப் பறக்குமயில்
சித்திக்கு முத்திதரு மத்திக்கு மூஷிகவா—கனமூர

உற்பத்தி செய்ப்பிரம னுக்குப் பருத்த அனம்
ஒத்துக் களிக்குமரி பட்சத் தினிற்கருடன்
ருத்ரர்க்கும் மற்றயிரு வர்க்குத் தனித்தரிஷ—பமுமேகம்

ஒப்பற்ற சக்திகளு முட்பட் டிருக்கவுமை
பெற்றுக் களித்தமுத லுக்குப் பருந்தவயி
றுற்பத்தி யைப்புகல வெப்பத் தருக்குமுடி—விலஙகி

சர்ப்பத்தை முற்சிற் றிடைக்கச் செனப்பணிகொள்
சர்ப்பத்தி னிற்சயன முற்றுச் சிறக்குமரி
சர்ம்பத்தி னேச்சிவனு மொத்துக் கழுத்திலணி—வதுமேனே

சற்சித்தி புத்தியுமை லக்ஷ்மிக்கு ஒப்புடைய
சட்டத்தை மெய்ச்சுருதி கற்பிக்கு மர்த்தமது
சர்ப்பக் குணத்தைவிடு வித்துப் பரத்திலுறை—
(தவமாமே 77.)

---

தானன தானன தந்த தந்தன
தானன தானன தந்த தந்தன
தானன தானன தந்த தந்தன—தன தான

14. ரேசக பூரக கும்ப கந்தனி
லேயெழு வாசியில் நின் றி லங்கிடும்
நேர்மையை யாரறியுஞ்ச கந்தனில்—மனமேகேள்

நீள்சடை மேலணி கங்கை யும்பிறை
மாதுமை யாளொடு சென் றி டும்பர
னேசம தேதுணை யென் று நம்பிடு—வெளியாகும்

பாசமெ னுந்திரை யால்ம றைந்திடும்
ஆசையெ னுங்கட லேக டந்திடு
பாகமும் வந்திடு மோவெ னுந்திகி—லடையாதே

பாவம கன் றிட வேபு கன் றிடு
நீதியெ னும்படி யேந டந்திடு
பாரபெ ருங்கட லேக டந்திட —படகோர்வாய்

ராசத தாமத மென் றி ரண்டினில்
ஓடுபு லாதிகள் துன்பம் வந்தறும்
ஞாதுறு ஞேயம்வி டாமல் நின் றிடு—சுகமாகும்

நாதமு விந்தினி லேவி ளங்கிய
பூரண முங்குரு வாகி டும்பர
ஞானமும் வந்துகை கூடு மென்பது—மிதுதானே

கேசவ னும்பிர மாவு மன்பொடு
தேடியு முன்புகா ணுத சங்கைகள்
கேதுவும் ராகுவு முடாடி நின் றது—மறைவாகக்

கீழுல கம்மடி யேழு லோகமும்
மேலுல கம்முடி யேழு லோகமுங்
கேசரி யென்பதி லேயி ருந்துநீ—யறிவாயே. 78.

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன—தனதான

15. சுருதி மொழிபகர் குருவென அருளொடு
துயர முறுபவ வினைகளு மடியொடு
தொலைய வுலகினில் மனுவடி வெனவுரு
—கொளநாடி

தொழும கரிஷிக ளமரர்கள் பலரொடு
துரிய கணபதி கலியுக மதில்வரு
துறவை யொருவரு மறிவது கடினமென்
— றறவோது

அறுகு பலமலர் களபகுங் குமமொடு
அடியர் தொழுதிட அவனியில் வலம்வரும்
அரிய மகிமையை எளிதினி லுணரவும்
—வெளியாமோ

அறிஞர் திருவடி அனுதினம் வழிபட
அமிர்த குணமது பெருகிடும் வினையது
அகலு மனமது தெளிவுறும் ரகசியம்-வெளியாகும்

பருவ மிதுவெனு முதிர்சரு குகனிகள்
பருக நினைபவர் கருமிக ளெனுமறை
பகரு மொழிகளை நெறியென உணர்பவர்
--பெரியோரே

பருதி மதியிரு கலைகளு முறவுசெய்
பதியில் நடமிடு கரிமுக னடியிணை
பரவு மவுனிகள் மலைகுகை சருகுகள்— புசியாரே

சருவ மவனது செயலென வுருகுவர்
தரணி தனிலதி மகிமையை யுடையவர்
சலனம் விடுபடு சமரச நிலைகளு —மறவாரே

தரும நெறிகளும் வளரவு முயர்குல
சதுர்ம றைமுனிவ ரனைவரும் வெளியிடு
சமய முலகினி லசுரர்கள் குலமது—முடிவாமே.79.

தனனத் தனனதத்த தான தானன
தனனத் தனனதத்த தான தானன
தனனத் தனனதத்த தான தானன — தனதான

16. பருவத்தி னிடைமத்தி பார்பா ரென்சொலு
மறைகற் றுணரவல்லா ரார ரென் சொல்வேன்
பொறுமைப் படுதல்பற்றி மேலு லாவிடு
—நிலையாகும்

பொறிசற்று மசைவற் றிராது மாய்கையில்
ஒருமைப் படுதல்நித்ய மோவென் றேசொலும்
புலனற்றனுதினமும் நீதியோடுசென்—றுறவாடி

குருவைக் கண்டடிபணிந் தேத்து வாயிரு
வினைபற் றுதுனைவிட் டுப்போகு மேகசற்
குணமுற் றியுனை நற்றி யேவிடா தருள்-கனிவாகும்

குரவர்க்கு வீடளித்த நாளி லேபல
சிறுமைப் படவும்வைத்த கோலமே கண்டு
குமரக் கடவுள்செப்பும் நீதி யேகும்ப—முனியேக

பருவப் படுதல்சத்ய மேமுன் னோர்களுஞ்
சுருதிப் படிநடந்து போர்செய் தேயிந்தப்
பரதக் கண்டமுழுது மாண்ட யோகிகள்
— வெகுகோடி

பதமிப் படியிருக்க மூட ரானவர்
கலைகற் றுநெறிதப் பியே நடந்திடும்
பவமுத்தி யுலகத்தி லேமெ யங்கிடும்—வழிகூடா

வறுமைப் படுதல்நன் று தீதென் றேயினி
மருவிச் சுழியிலயன் றேனு மாய்கையில்
வழிதப்பி யிருளுக்கு ளேம றைந்துநீ—நழுவாதே

வரினிப் படிநடந்து ராஜ யோகத்தின்
மவுனத் திருந்துமுத்தி சேர லாமென்ற
மரபைத் தெரிந்துசித்த மேதெ ளிந்திட
—லயமாமே. 80.

---

தனதனன தனதனன தனதான தத்ததன
தனதனன தனதனன தனதான தத்ததன
தனதனன தனதனன தனதான தத்ததன—தனதான

17. குருவுருவ மருவமெனும் மறவாது நிட்டைபுரி
குணரகித மினிமையொடு நெடுநாளு நிர்த்தமிடு
குரவரெதிர் படும்வரவை நடுவீதி பற்றுபதி—சதியோடும்

குலமுழுது மடிமையென பலகாலு முத்தர்பணி
குருவினடி தொழுதுநறு மலர்தூவி யிட்டமுது
கொளுமெனவு முறுகியறு சுவையோ டளித்தமிர்த—
[மெனவூட்டும்

பெருமைபெறு தவமகிமை யழியாத முத்திநிலை
பிறவிவினை யகலவொரு தவம்வேறு செப்பவிலை
பிரமநிலை வுணர்பகவ ளறனூல் விதித்தவிதி—இதுதானே

பெருமையிது பெருமையிது யெவரா லுரைக்குமொழி
பிசகொ ரணிவிலையெனவு மறையோர் களிப்புறுதல்
பிறர்கருதி பிறர்கருதி யிவர்போல் நடக்கமன—முறுவாரே

பருவமெனு முபநிடத மறைநூ லிலக்கணமும்
பகருமொழி யனுதினமு முருவே செபித்திலகு
பதவுரைக ளனுவளவு மறவா தியற்றுகுண—முடையோராய்

பகலிரவி லொருகணமு மசையாது நற்கனிகள்
பருகிருசி யதிகமுள ரசமே வடித்துநிறை
பசிதீவி ரதமுடைய தபசீல ருக்கமிர்த—வுணவாகும்

சிறுகுழவி கதறியழு திடவோல மிட்டகுரை
சிறைபடுதல் முறைமையல எனவே தொடுத்தரசஞ்
செவிடுபட வசுரர்கிளை கெடவே ரறுத்ததிற—மிதுதானே

செகுணதரி கிடதொமென திருமால்கை மத்தளமும்
செனுதசெனு ததிகணதொ மெனவாடு நிர்த்தனமுஞ்
செயசெயென அருள்பொழிய மவுனதி சித்தர்சபை—
(புகுவோனே 81.

தனன தான தான தத்த
தனன தான தான தத்த
தனன தான தான தத்த—தனதான

18. பழைய வாணி பாடி முத்தர்
கிளேகள் கூடி யேப முத்த
பழமு ளேக மாய்வ டித்த—ரசமோடு

பரிதி மேலு லாவு சித்ர
மதியி லோடும் வான மிர்தம்
பருகு வார்க ளேயி யற்று—மறைநீதி

தழைப லாபி ஞேர்வ ருக்கை
சுளேயி னூடு மேவ டித்த
சரிதம் யாவ ராலு ரைக்க—முடியாதே

தமிழ்வ லோர்க ளேம திக்கும்
அருமை யான யோக சித்தர்
தரும சீல ரோடு மிக்க—வுறவாடி

விளேயும் ஞான பூமி மட்டும்
மசைவி லாது காடு வெட்டி
வெளியில் நாத கீத மூட்டி—யொளிவீச

விசித மான தாளி லிட்ட
பணிக ளோடு மேமு டித்த
விபுதர் நாவி ஞலு ரைத்த—தனிநூலே

மழைகள் வானி லேசெ னித்து
பொழிய நீதி மாநி லத்தில்
மருவி யோடு வாரி திக்கு—நதிமூலம்

வரிசை யாக மாத வத்தர்
கருணை யாக வேமு டித்த
மவுன ராச யோக நிட்டை—புரிவாரே. 82.

தனதத்த தனதத்த தனதத்த தனதத்த
தனதத்த தனதத்த தனதத்த தனதத்த
தனதத்த தனதத்த தனதத்த தனதத்த—தனதான

19. வயிரத்தி னடுபச்சை பவழத்தி னெடுமுத்து
மருவிக்கோ மேதகத்தி னிடைபுஷ் பராகமிட்டு
மகிழப்பெ ருமாணிக்க வளைவிட்ட நீலமொய்த்த—
[வைடூரியமோடு

மகுடத்தில் நவரத்ன மிலகச் சிரசிலிட்டு
மகிழுற்ற ப்ரசனத்து வதனத்தி னழகிற்கொள்
வடிவைக் கண்டடிபற்றி யடிமைப்ப டுவதெப்போ—கண
[நாதா

உயிர்பற்றி நிலைநிற்க கடமெத்த கைவிளக்கும்
உடல்பற்றி யுயிர்க்கும் விதமெப் படிநடக்கும்
உணவற்ற மனதிற்கு வெதுசத்ய மெதுநித்ய—மறியேனே

உலகத்தி னெறிபற்று மலசத் திகள் மறைத்து
உருவத்தி லளவற்ற சனனத்தி லீடுபட்டு
உருகிக்க ணீர்வடித்துச் சிறுமைப் படவும்விட்ட—
[குறையேதோ

தயிருக்கு ளெழுவெண்ணெய் யுறியிற் றுருடியுண்ட
சகளக் கோபாலகிருஷ்ண வரிபக் தரெனுநித்ய
தருமக் கொடிபறக்க அடிமைக் கருள்செய்வித்த—
[குருநாதா

சகுணக் கிரியைப்பற்றி மனத்தை துணிவுறுத்தித்
தனிமைப் படவிரக்தி யடையக் கிருபைசித்தி
சகசப் படநிறுத்தி யருணிற் குணமேமுத்தி—யெனும்வீடே

கெய்சர் செர்மனிப்பட்ட மெய்யாய்ப் பனிரெண்டாண்டு
கெடிவைத் துறுதிபற்றும் நிருப மெத்தனைகோடி
கீழ்நா மக்காரர்கள் தெள்ளிய வரசாட்சி—யருளோடும்

கெர்வித் தசுராசுத்தம் படவெட்டிக் கொடிகட்டிக்
கிளைசெப் புமமரசர்க்கு முனிசித் தரிஷிகட்குங்
கிருபைக் கண்ணொளிபற்றி யமரர்க் குச்சிறைமீட்கும்—
பெருமானே 83

தனன தனதனன தனன தனதனன
தானத் தத்த தனுதன தந்தன
தனன தனதனன தனன தனதனன
தானத் தத்த தனுதன தந்தன
தனன தனதனன தனன தனதனன
தானத் தத்த தனுதன தந்தன—தனதான

20. கதிரவ னொளிபெறும் மணிமகு டாதிகள்
காணக் கண்கள னேக தவம்புரி
கனக சபையிலக நடன மிடுந்திரு
காலிற் பூட்டு சிலம்பு கலீரிடக்
கருமுகி லிணைகுழ லசையு மதிவதனி
காளிகங் காளித்திரி சூலியோ டாடிய—
[மறைபாராய்

கருவி கரணுதிகள் சலனமி லாதிரு
காரண சற்குரு பாதங் கதியெனுங்
கலைகள் சரசமொடு சுழிமுனை யேகிடுங்
காலம றிந்துதே வாமிர்த முண்டு
கனலில் மெழுகெனவு முருகி மவுனநிலை
கண்டே குந்திட மொன்றே யருணிலை—
[யெனநாடு

பதிபசு பாசலக் கணமறி வோர்மல
பாசத் தோடுற வாடி மருந்திடல்
பருவ மிதுசகச நிலையெனு முணர்வது
பத்திப் பந்த மறுத்து வெறுத்திடு
பழகுமும் மலப்பகை விலகநிர் மலமயிர்ப்
பால மேறிநெருப் பாறது கடந்திடத்—
[துணிவாயே

பகலி ரவுமடியர் பணிகொளு மிருவினைப்
பாசம் போக்கி நிராசை பெருக்கிடும்
பலகலை பருகிடு கனிரச மொழுகிடும்
பாக முறைக்கெந் நாவது கிட்டாப்
பவமது விலகிடு மறைமொழி யனுபவம்
பார்த்துத் தேங்கி யழுது தொழுதிடிற்—
[கனிவாகும்

சுதிகொள் மத்தள முரசதிர வீணைபல
சுத்தி மிர்தங்க முழங்கிப் பாவலர்
சுரர்கள் விருதுகொடி பலதிசை பரவிடச்
சூர மாயுத வீரர் நெருங்கித்
துரித மானபரி கரிதேர் படைரதஞ்
சூழ வுலகில்மறை நீதி செலுத்திடும்—
[அரசாமே

சுடரெழு சுகரதி முனிவ ரிஷிகள் தனித்
தூல சூக்குமங் காரண மூன்றுடல்
துவித பாவனைகள் மமதை யகந்தைகள்
சுட்டிச் சுட்டி யானென தென்பதைத்
துணிவுறும் வாள்கொண் டறுத்து ஞானிகள்
சோதித் தெழுநிலை மாடமி தேறுவர் —
[சுயமாக

மதியோ டிரவி கலந்துற வாடிட
வாசி வசப்பட் டேறியொ டுங்கிடும்
மனமே மாசறு திங்கள் கங்கைசடை
வைத்தென் னுள்ளங் கவர்ந்த வரனுமை
மரகத வடிவினள் கனக சபைநடுவில்
மாறி மாறியெதிர்த் தாடிடும் ரகசியம்—
[மிதுதானே

மடமை யிருள்வடிவ மகல முடிவுபெறும்
வானத் தேகதிர் கோடிகள் வீசிடும்
மறைகள் பகருமனு பவநிலை கதிபெற
வாய்க்கு மனோவாக் கின்பம் விளைத்திடும்
மவுன மலரிணையி னருகி லுறையும்வழி
மார்க்கங் கண்டு துறப்பது வீடென—
[வறிவாயே 84.

---

உறு ஸோதி ரூபகம்

தனனதான தானன தனனதனன தானன
தனனதான தானன—தனதான

21. வினைகளோடு போராடி மனதினூடு மாமாயை
விதிகள்யாவு மோராம—லிடையூருய்
விரகராக மோகாதி தனைவிடாது சேருடி
வெறியனுகி நாடோறு—முழல்வேனே

சனகராதி மேலான பதியிலோர்மை யாய்மோன
சபையிலேறி யேஞான—நிலையானர்
தபசினேர்மை யாகாய வெளியில்வாசி வேல்கூர்மை
தரையின்மீது பூபார—வடிவாகி
கனகமேரு தூரோடு வளையநாணி சேடாதி
கருணைமூல பாணுதி—விடுவோனே
கலியில்நீதி சீரோடு தொலையநீத மோவேறு
கதியிலாது மேலோர்கள்—பெறுமாறென்
றுனேவிடாது வாதாடு மடிமைகாலம் வீணுகி
உறவுகூடி வாழாது—தவிர்வேனே
உருகிவாடி யேபால னிடைவிடாதுன் வீடேக
உலகபாசம் வேரோடு—களைவீரே 85.

---

தனன தனந்தன தாஞ தந்தன
தனன தனந்தன தாஞ தந்தன
தனன தனந்தன தாஞ தந்தன—தனதான

22. அருவ மெனும்பொரு ளாதா ரங்களும்
அடிமுடி நடுவுடன் ஆதே யங்களும்
அளவு கடந்துனே யார்தான் காண்பர்க—
[ளரிதாமே

அடிமையும் விண்டுசொ லாதே நாணிட
அறிவது பொங்கியே மெய்ஞ்ஞா னந்தனே
அடைய விரும்பிய தேநெறி நின்றதுன்—
[னருளாகும்

சிறுதுளி யும்பனி நீர்போ லேயணு
வளவு கலந்திட மாபூ தம்பொறி
திடபுல னும்பர மாகா யந்தனி—லுருவாகித்

திரிகர ணங்களும் வாதா டும்படி
சிசுவெனும் நம்பியோர் மாதா வும்பெற
செகமதி லும்பலர் சீசீ யென்றிடு—குறைவேதோ

திருவடி தந்துநீ யாள்வா யென்றுனே
வலமது வந்திடு வோமோ சந்ததம்
தெளிவு பொருந்தியெ வாறே சென்றிட—
[லறியேனே

திடமது கொண்டுமே நாடோ றும்பணி
செயுமெளி யேன்கலி தீரா தோசொலும்
செனன மறும்படி தேவா நின்கழல்—தருவீரே
கிருபை யெனுங் கடல் நீரா டவருட்
கருணை புரிந்தெனைக் கூடா யோபர
கெதிபெற விண்டெனல் வேதா சாரமு—
[மறைவானேன்
கிரியை சரியையெனும் யோகாம் சங்களின்
கிளைகள் பெருகிவளர் பூகாய் பண்டுகள்
கிளைஞர் முனிவரிஷி தேடி யுண்டதற்—
[கனிதானே 86.

---

தானதன தானதன தானதன தானதன
தத்ததன தத்ததன தத்ததன தந்ததன
தானதன தானதன தானதன தானதன
தத்ததன தத்ததன தத்ததன தந்ததன
தானதன தானதன தானதன தானதன
தத்ததன தத்ததன தத்ததன தந்ததன-தனதான

23. ஆதிதிரு நான்மறைக ளோதுமுடி வானபொருள்
அத்துவித முத்திபெறு தத்வமசி யென்றுணர்வர்
ஆகமபு ராணகலை ஞானநெறி யேவும்வழி
யற்பமல சிற்சபைத னிற்புகுவ தானதது
நீயுமது வானபெரு வீதியது ளச்சமொடு
உச்சிநிலை நிற்சலன முற்றுவிடி லத்துவித—
[வுண்மையாகும்
ஆவலுட னேதுகுரு தேடியுற வாடுமல
மற்றவிடம் நித்யமெனு முற்றுணரு வாயுருகி
ஆவிபொருள் காயமொடு தானமேகை மாறெனவு
மத்தனடி யைத்தொழுது தத்தமிடு வாயுதக
மாருதல மூடுருவி யேறுதனி மாடமதி
லப்பனெடு நிர்த்தமிடு சத்தியுமை பொற்பிடமு—
[மிதுதானே
பேதமறு ஞானிகள் குழாமறியும் வேதபொருள்
பெத்தநிலை நிற்பவர்கள் கற்றுமுண ராதவர்கள்
பேசரிய ஞானநிலை பேசமுடி யாமவுனப்
பெட்டகம் நிறைத்தபணி சுத்தநின்ம லத்துரிய

பேதமோ டபேதமறு சாதனமெ லாமொழுகிப்
பெற்றவர்க ளுத்தமர்க ளிப்பிறவி தப்பும்வகை—
[யறிவாயே

பேதமகல் வாயரிய சாதனமெ லாம்புரிய
பித்துமன மேயிருவி னைக்குமூல மேசிறிதும்
பேசவறி யாமலச ரீரமெடுத் தேயுயிர்கள்
பெற்றகதி முற்பிறவி யிற்செய்பவ மிச்செனனம்
பேயுலக மீதுறவை நீவிடுவை யேலுயர்வு
பெற்றிடுவை மெய்ப்பொரு ளருட்கனி பழுத்
[தொழுகும்—விரைவாக

சாதிமத மார்சமய மாதிசைவ மாகவெகு
சத்திகளும் வெற்றிபெறச் சத்துரு செயக்கொடியுந்
தாவுபரி யானைரதம் வானுலக ளாவிவரச்
சப்தரிஷி ரத்னமிழை பொற்சிவிகை நிர்த்தமிடத்
தாசர்களு மேலுலக வாசிகளும் வேகமொடு
சக்கர நெறிப்படிய றத்தினை வளர்க்கவரு—மரசாமே

தாணுவொடு சாதுதவ யோகிகளும் ராசரிஷி
தத்துவம் விளக்குசிவ தத்வரகஸ் யப்படைகள்
தாலமுழு தாசைபடு போர்நடன மாடுவது
சத்தியம் நிலைப்படவும் நித்யகர்ம முட்கொளவுந்
தாடசுரர் வேர்களைய மூவுலக மோர்குடைகள்
தற்பரன் விதிப்படி செலுத்தும்விரு துக்கொடிக—
[ளிதுவாமே

சூதுகலி காலநிலை மாறுதலை யாயிரத்துத்
துட்டசன நிக்கிரக சிட்டபரி பாலனமுஞ்
சோதிமக மேருகிரி சாகரமெ லாமதிரத்
துற்கபட சித்தர்களை சித்ரவதை முற்புரியச்
சோதனைசெய் தேமுனிவர் கோசரம கோசரமாய்ச்
சொற்பன சுழுத்திநிலை தத்துவம் வெளிப்படுவ—
[துணர்வாரே

தோகைமட மாதர்மயல் மீதுனது வேர்செயல்கள்
சுத்தமென நத்தியிடை துக்கவலை சிக்கியெழு
சோர்வுகடல் மேலலைக ளோடுதுரும் பாடிவரு
துர்ச்சபை விலக்குபிற விக்கடல் தொலைக்குமிது
சோகமுயர் பாவனைவி டாதுணரு வார்கள்வினைத்
துச்சமொழி சிற்கனக வெட்டவெளி யைக்யநிலை—
[பெறுவாயே 87.

உ

ஸ்ரீமத் இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# இரெட்டியப்பட்டி சுவாமிகளின்

அடியார்கள் பாடிய

# தோத்திரப்பாக்கள்

---

### ஆசிரிய விருத்தம்

ஆரணப் பொருளைத் தானு மறிந்திட வொருவ னாகிக்
காரண சொரூபங் காட்டிக் காசினி யடியார் தம்மைப்
பூரண வடிவ மாக்கிப் பொய்யெலாம் நீக்கியாள
வாரண ரெட்டி பட்டி வள்ளலைப் பணிகுவோமே. 1.

---

## முதுகுளத்தூர்ப்புலவர் சுபகிருதுஞான பாடியது.

### ஆசிரிய விருத்தங்கள்

1. நிதிபெருகும் பதியில்வளர்ந் தோங்கும் நாதா
நீணிலத்து மாந்தர்கணோய் நீக்கி யெங்குந்
துதிசெய்பவ ரிருதயத்தில் வாழுங் கோவே
சுந்தரமந் திரமணியே அருளைக் காட்டும்
மதியேசெந் தேனேயென் னிருள கற்ற
வல்லாயெம் பெருமானே மயக்கந் தீர்த்துன்
கெதிபெறவே யருள்புரிய வந்து தித்தாய்
கீர்த்தியுள்ள ரெட்டிபட்டிக் கிருபையானே. 2.

2. இரெட்டிபட்டி சாமியென நாமம் பூண்டே
யிருளடைந்தார் தமைக்காக்க வந்து தித்தாய்
சுட்டிநீ யுன்னருளை யுலக மெங்குந்
துலங்கவைத்தாய் மெய்யன்பர் தமக்குக் காட்சி
கெட்டியாய்க் காட்டவென்று கொடியும் நாட்டிக்
கிண்கிணியு மார்ப்பரிக்க நடனஞ் செய்யும்
இட்டகுல தேவதையும் நீயே யாகும்
என்குருவே ரெட்டியபட்டிக் கிருபை யானே. 3.

பேதமோ டபேதமறு சாதனமெ லாமொழுகிப்
பெற்றவர்க ளுத்தமர்க ளிப்பிறவி தப்பும்வகை—
[யறிவாயே

பேதமகல் வாயரிய சாதனமெ லாம்புரிய
பித்துமன மேயிருவி னைக்குமூல மேசிறிதும்
பேசவறி யாமலச ரீரமெடுத் தேயுயிர்கள்
பெற்றகதி முற்பிறவி யிற்செய்பவ மிச்செனனம்
பேயுலக மீதுறவை நீவிடுவை யேலுயர்வு
பெற்றிடுவை மெய்ப்பொரு ளருட்கனி பழுத்
[தொழுகும்—விரைவாக

சாதிமத மார்சமய மாதிசைவ மாகவெகு
சத்திகளும் வெற்றிபெறச் சத்துரு செயக்கொடியுந்
தாவுபரி யானைரதம் வானுலக ளாவிவரச்
சப்தரிஷி ரத்னமிழை பொற்சிவிகை நிர்த்தமிடத்
தாசர்களு மேலுலக வாசிகளும் வேகமொடு
சக்கர நெறிப்படிய றத்தினை வளர்க்கவரு—மரசாமே

தாணுவொடு சாதுதவ யோகிகளும் ராசரிஷி
தத்துவம் விளக்குசிவ தத்வரகஸ் யப்படைகள்
தாலமுழு தாசைபடு போர்நடன மாடுவது
சத்தியம் நிலைப்படவும் நித்யகர்ம முட்கொளவுந்
தாடசுரர் வேர்களைய மூவுலக மோர்குடைகள்
தற்பரன் விதிப்படி செலுத்தும்விரு துக்கொடிக—
[ளிதுவாமே

சூதுகலி காலநிலை மாறுதலை யாயிரத்துத்
துட்டசன நிக்கிரக சிட்டபரி பாலனமுஞ்
சோதிமக மேருகிரி சாகரமெ லாமதிரத்
துற்கபட சித்தர்களை சித்ரவதை முற்புரியச்
சோதனைசெய் தேமுனிவர் கோசரம கோசரமாய்ச்
சொற்புன சுழுத்திநிலை தத்துவம் வெளிப்படுவ—
[துணர்வாரே

தோகைமட மாதர்மயல் மீதுனது வோர்செயல்கள்
சுத்தமென நத்தியிடை துக்கவலை சிக்கியெழு
சோர்வுகடல் மேலலைக ளோடுதுரும் பாடிவரு
துர்ச்சனபை விலக்குபிற விக்கடல் தொலைக்குமிது
சோகமுயர் பாவனைவி டாதுணரு வார்கள்வினைத்
துச்சமொழி சிற்கனக வெட்டவெளி யைக்யநிலை—
[பெறுவாயே 87.

உ

ஸ்ரீமத் இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# இரெட்டியப்பட்டி சுவாமிகளின்

அடியார்கள் பாடிய

# தோத்திரப்பாக்கள்

---

### ஆசிரிய விருத்தம்

ஆரணப் பொருளைத் தானு மறிந்திட வொருவ னாகிக்
காரண சொரூபங் காட்டிக் காசினி யடியார் தம்மைப்
பூரண வடிவ மாக்கிப் பொய்யெலாம் நீக்கியாள
வாரண ரெட்டி பட்டி வள்ளலைப் பணிகுவோமே' 1.

---

### முதுகுளத்தூர்ப்புலவர் சுபகிருதுஞல பாடியது.

### ஆசிரிய விருத்தங்கள்

1. நிதிபெருகும் பதியில்வளர்ந் தோங்கும் நாதா
நீணிலத்து மாந்தர்களுேய் நீக்கி யெங்குந்
துதிசெய்பவ ரிருதயத்தில் வாழுங் கோவே ..
சுந்தரமந் திரமணியே அருளைக் காட்டும்
மதியேசெந் தேனேயென் னிருள கற்ற
வல்லாயெம் பெருமானே மயக்கந் தீர்த்துன்
கெதிபெறவே யருள்புரிய வந்து தித்தாய்
கீர்த்தியுள்ள ரெட்டிபட்டிக் கிருபையானே. 2.

2. இரெட்டிபட்டி சாமியென நாமம் பூண்டே
யிருளடைந்தார் தமைக்காக்க வந்து தித்தாய்
சுட்டிநீ யுன்னருளை யுலக மெங்குந்
துலங்கவைத்தாய் மெய்யன்பர் தமக்குக் காட்சி
கெட்டியாய்க் காட்டவென்று கொடியும் நாட்டிக்
கிண்கிணியு மார்ப்பரிக்க நடனஞ் செய்யும்
இட்டகுல தேவதையும் நீயே யாகும்
என்குருவே ரெட்டியபட்டிக் கிருபை யானே. 3.

3\. சரியைகிரி யாயோக பதங்கள் ஞானம்
தனைக்கடந்த மெய்ப்பொருளே தவத்திலுள்ளோர்
அறிவுபெற வந்துதித்த வமரர் நாதா
வற்புதமே கற்பகமே யகண்டத் தப்பால்
துரியதுரி யாதீதச் சுடரா யெங்குஞ்
சுத்தபரி பூரணமாய் நிறைந்து நிற்கும்
நெறியேநிற் குணமேநிஷ் களங்க மான
நித்தியமே ரெட்டிப்பட்டிக் கிருபை யானே. 4.

---

செங்கோட்டை, சுப்பிரமணியம் பிள்ளை பாடியது

பதிகம்

1\. காதல்கொண்ட பதார்த்தங்கள் பணிகள் நேமி
கனகமுயர் மாடங்கள் மனைவி மக்கள்
நீதிநெறி பத்திசித்தி யனம்பால் நெய்யும்
நீங்காத வித்தைபுத்தி திடங்கள் போத
சாதனங்கள் தத்துவங்கள் ஞான மோனம்
தந்தருள்வான் சாதிபுன்னை தெங்கு சூழும்
பாதலத்தி லுயர்ரெட்டி பட்டி சுவாமி
பாதகம லம்மிரண்டும் பணிகின் றோர்க்கே. 5.

2\. சிதம்பரத்தி னுடல்பல கோடி யென்று
செப்புகின்ற செகத்தோரே கண்ணுற் காணீர்
சதம்பத்து கோடிவித லீலை காட்டத்
தரணிதனி லவதரித்தா னவனு ரென்னில்
பதகநோய் களைப்போக்கி யருளைக் காட்டப்
பரன்சைவ குலமரபி லருள வந்தான்
உதகநிறை தடங்கள்மா டங்கள் சூழ்ந்த
வுயர்ரெட்டி பட்டிநகர்ச் சுவாமி தானே. 6.

3\. சாமிகுகன் கணேசனைய னிவனே யாகுஞ்
சங்குவர மரிருத்ர னிவனே யாகும்
வாமிமகேஸ் வரிமணத்தா னிவனே யாகும்
வரைமகள்பா கச்சிவனு மிவனே யாகும்

நேமிமுதற் ககனம்வரை யிவனே யாகும்
நீணிலத்து மாந்தர்கள்நோய் நீக்கி யாளும்
தாமிவனே ரெட்டிபட்டி நாதன் தன்னைச்
சர்வக்ஞ னெனத்துதிப்பீர் தரணி யோரே. 7.

வேறு

4. துதித்துநிதம் போற்றினவர்த் தொடர்பவத்தை [முடுக்கும்
சுதந்திரமாம் மனைவிமக்கள் தனம்நிலங்கள் [கொடுக்கும்
முதிர்ந்துவரும் வாதபித்த மையமுதல் தடுக்கும்
மோகனவ சியமுதலட் டசித்தி கொடுக்குங்
கொதித்தமனத் தரைநிறுத்துங் குணரசத்தை யருத்தும்
கோபியர்வஞ் சகரைநற்கு ணம்பெருகத் திருத்தும்
விதித்தவிதி யினைமாற்றும் வேதாந்த நாத
வீரனெனும் ரெட்டிபட்டி சுவாமிவிம லோனே. 8.

5. கொல்லாத விரதங்கள் கொடுக்குமது கடலே
கொடுநரகத் தோரேறக் கொன்றுசுகத் திடலே
கல்லாலி னல்வருக்குக் கருணைசெய்த திறமே
கண்ணப்பன் பூசனைக்குக் கருத்துகந்த பரமே
வல்லாள ராசனுக்கு மகனுன சுதனே
மாநார தன்னிசைக்கு மகிழ்கொளுமிங் கிதனே
எல்லாமா யெவ்வுயிர்க்கு மிரங்குமருட் டேனே
இரெட்டிபட்டி நகரில்வள ரெந்தைபெரு மானே 9.

6. சிந்துரமா முகத்துடைய தேவனெனுந் தேவே
தெவிட்டாத வுணவளிக்குந் தேவருல காவே
சந்ததமெல் லாம்வல்ல சித்தனெனுங் குருவே
சகலவுயிர் சுகமுறவே சடமெடுத்த வுருவே
சுந்தரமந் திரமணியே சுவர்னவரைப் பெட்டி
துதிப்பவர்க ளுரைக்கின்ற சுகமதுரக் கட்டி
எந்தனுளத் தெண்ணப்படிக் கேயருளல் வேண்டும்
ஏரிசூழ் ரெட்டிபட்டி நகரிலுறை வோனே. 10

வேறு

7. நற்கமலக் கழற்சிரத்தை நான்முகனும்
நாரணனுங் காணு ரென்ருல்

பொற்கமலப் பதமுகத்தை யாரறிவார்
போதமுளார் பொலிந்து காண்பார்
துற்கமலச் சடம்பிளக்கத் துவாதசாந்
தத்தமிர்தஞ் சுரக்கச் செய்வாய்
கற்கமலப் பிரகாசன் கமழ்வீசும்
ரெட்டிபட்டிக் கருணை யானே. 11.

8. நிம்பத்தா ரணிகின்ற நின்றசீர்
நெடுமாறன் றனக்கு ஞான
சம்பந்தர் சுரத்திநோய் தவிர்த்தாரே
தமிழ்மறையைச் சாற்றி யந்நாள்
அன்பந்த லீலைதனை யாரறிவா
ரகிலமதில் நம்மோர் காணத்
துன்பந்த நோய்நீக்கச் சுகரெட்டி
பட்டிநகர்ச் சுதன்வந் தானே. 12.

வேறு

9. வந்தவன்றன் சிரத்தில்மதி முதலாங் காணோம்
மான்மழுவுஞ் சூலமுதற் கரத்திற் காணோம்
கந்தகணே சன்னவன்ற னருகிற் காணோம்
கமலபத வுமையுமிடப் பிறத்திற் காணோம்
சந்ததமும் பணிப்புலியும் பாம்புங் காணோம்
சர்வநோய் தீர்க்கவிவ னலாமோ வென்றால்
மந்திரதந் திரநோய்கள் தீர்க்குங் கர்த்தன்
மகிழ்ரெட்டி பட்டிநகர் வரதன் றானே. 13.

10. மதியாத்தி கொன்றைமத்த முதற்சி ரத்தும்
மான்மழுசூ லமுடிக்கை முதற்க ரத்தும்
பதிவிநா யககந்த னிருபு யத்தும்
பதுமமலர்ப் பதவுமையா ளிடப்பு றத்துந்
துதிபுலியும் பாம்புமுகப் புறத்து மாகக்
சுகரெட்டி பட்டிநகர்ச் சுவாமி யென்போன்
அதிமதுர வடியாருட் டோன்றுந் தோன்றும்
அவர்க்கன்றி யவனிதனி லறியொ ணாதே. 14.

11. ஆமைபோ லைந்துறுப்பு மடக்கி வந்த
ஆதிரெட்டி பட்டிநகர் நாதன் றன்னை
மாமறைதக ளேயுள்ள மனித ரெல்லாம்
மனங்குவிந்து போற்றறியார் செர்வங் கொள்வார்
தீமைபவத் தைக்கெடுத்தே யாளு தற்குத்
தேகிவடி வாயிருக்கும் பரம ஞான
தூய்மைநிலைத் தேசிகன்றன் கமலம் போன்ற
துணைப்பதத்தி னருகிருந்து துதிகொண் டோமே.

பிலவஞ்ஞ, ஈராச்சி பார்வதிநாதம் பிள்ளை பாடியது

பல்லவி

வேடிக்கை பாராய்-ஐயன் திருவிளை-யாட்டை நேராய்

அனுபல்லவி

தேடு மடியவர்கள் தெரிசித் தருள்சுரக்க
நாடும் ரெட்டியப்பட்டி நாத ரவதரித்த (வேடிக்கை)

சரணம்

1. தேவாதி தேவன் சகலவினை தீர்க்குமுதாரன்
பாவாணர் போற்று மற்புதகுண பரமதயாளன்
நாவி லுதிக்குமந்த்ரம் நலமென்று துதிப்போர்க்குப்
பாவ வினைகளெல்லாம் பறந்தோடிப் போகுதென்ற
(வேடிக்கை)

2. தேசாதி தேசமெங்கும் நிறைந்து திசைகட்டியாளக்
காசினி யோர்கள்கொண் டாடிடுங் கருணையே
[வுருவாய்த்
தேசிக னுகவீசன் றிருந்த வடிவெடுத்து
நேசமு டன்பரி சோதனைகள் செய்திட்ட (வேடிக்கை)

3. அனுதினம் நீராடி யையன் கணேசனைத்தொழுது
தினந்தின மூன்றுபிர தட்சணஞ்செய்து முடித்துக்
கனம்பெறு சுக்கிரவாரங் கனிவாய் விரதமென்று
தினமுமுவெந் நீர்மருந்து சேர்க்கக்கூ டாதென்ற
(வேடிக்கை)

4. தெய்வங்கள் தனக்குமுன் பிரார்த்தனை செய்தோர்
[கடனை
உய்யவே முடித்தினி மேல் நேர்ச்சியொன் றுமே
[வேண்டாம்
மெய்யான தெய்வத்தை விரும்பித்திரு நீறிட்டால்
வையகத் தோர்வினை மாய்ந்துமே போகுமென்ற
(வேடிக்கை)

5\. நேரான தெய்வம்ரெட்டி பட்டிச்சுவாமி யின் நாமம்
பாராதி யெங்குந்துதித் திடப்பகை வரைவெல்லும்
தீராத வல்வினை தீர்த்துக் கலியகற்றக்
காரானை மாமுகக் கணபதி யாகவந்த (வேடிக்கை)

6\. நிர்த்தனம் புரியுஞ்சிவ காமிநே சனுமிவனே
பற்பல காலமவ தரித்தபர மனுமிவனே
கர்த்தன் பரசமயக் கடவுளு மொன்ருகிச்
சத்திக ளொடுங்கூடித் தரணியை யாளவந்த (வேடிக்)

7\. சோதனை செய்துட்டரை வெல்லத் துடுக்காகவந்த
நாதன்பேர் சொல்லுலக மெங்கும்நன் மையுண்டாகும்
நீதிதவறும்பேரை நிர்த்தூளி செய்யவே
பூத கணங்களோடு புனிதமா கவேவந்த (வேடிக்கை)

8\. ஆராலுங் கூடன்ிச்ச யங்களை யறியவொண்ணு
வீராதி வீரனன்பரைக் காக்கும் மிகுந்தகுணுளன்
சூராதி சூரனைத் துதிக்கு மடியார்வினை
நீருக்கிச் சாயுச்ய நிலையைக்கொடுக்கவந்த (வேடிக்)16

---

## அடியாரொருவர் பாடியது

### அடைக்கலப் பஞ்சகம்

1\. ஆதிமுத லெட்டெழுத்தும் நீயாய் வந்தாய்
அரும்பொருளாய் வந்துதித்தாய் ரெட்டிபட்டி
சோதனையாய்ச் சோழன்மா ளிகையிற் சென்று
துட்டர்களைச் சம்மாரஞ் செய்ய வந்தாய்
வேதனைப்பட் டவர்களுன்ற ஞமஞ் சொன்னல்
வேண்டியவ ரங்களெல்லா மவர்க்கே யீவாய்
வீதியெல்லா முன்ஞமந் துதிக்க வென்று
விடைகொடுத்தாய் கும்பகோ ணத்திற் சென்றே.

2\. திரும்புமையா தெட்சணமே பார்க்கத் தானே
திகம்பரமாய் வந்துதித்த அமரர் நாதா
விரும்புமையா அடியார்க்கு வரங்கொ டுக்க
வேதாந்த மெய்ப்பொருளே விமலா சாமி
கரும்புபோ லுனைத்தேடி யெளியோ ரெல்லாங்
காத்திருக்கா ருன்னுடைய அருளைக் காண

எஞ்புகடை யானைதலை யாமு யிர்க்கும்
இகபரமாய் வந்துநின்றே யிரட்சிப் பாயே. 18.

3. இப்போதே யிதுசமயம் வரவே வேண்டும்
என்னுடைய விடைஞ்சல்களைத் தீர்க்க வேண்டும்
ஒப்புடனே வுன்னை நான் காண வேண்டும்
உன்பாதந் துதித்துநின்று வணங்க வேண்டும்
எப்போது முனைத்துதிப்பா ருலகத் தோர்கள்
ஏழையடி யார்க்கிரங்கி வாவா சாமி
அப்பனே ரெட்டிபட்டி யுதித்த சாமி
அன்புடனே யென்னைவந் திரட்சிப் பாயே. 19.

4. இப்போதே யிந்தமுகந் திரும்பி வாவா
எளியேனைக் காத்திரட் சிக்க வாவா
எப்போது முனைமறவேன் குறைக ளில்லை
யேகபர மாய்வந்த கருணை மூர்த்தி
செப்புமையா வாய்திறந்தே யடியேன் முன்னே
செய்தகுற்ற மின்னதென வறிகி லேனே
அப்பனே ரெட்டிபட்டி யுதித்த சாமி
அன்புடனே யென்னைவந் திரட்சிப் பாயே. 20.

4. கார்வண்ண மேனியனும் நீர்தா னுகும்
கடம்பவன நாதனுமே நீர்தா னுகும்
ஏர்வண்ண மாகவந்து லோக மெல்லாம்
இறையவனுய் வந்துவிளை யாட வந்தாய்
பார்வண்ண மாகப்பரஞ் சோதி யாயும்
பார்த்தவர்க்குக் கலியுகத்து மெய்ய னுயும்
சீர்வண்ண மாய்வந்த ரெட்டி பட்டியைச்
சிதம்பரந்போல் பாடுதற்கு வகைசொல் வாயே.

---

**ஊத்துப்பட்டி, சங்கரபாண்டியன் அவர்கள் பாடியவை**

1. திங்கள்தா தகிதும்பெ யென்பணியு மெம்பிரான்
சீதரன் முகுந்தன்வேதன்
சித்தங் கனிந்துநல் முப்பத்து முக்கோடி
தேவர்கள் ரிஷிகளோடுந்

துங்கமா யுலகத்தி லவதரித் துப்பரி
சோதனைகள் செய்து நன்ருய்ச்
சொரூபமது மாறியும் பலவே ட மாகியுந்
துட்டரைக் கண்டதட்டிப்
புங்கமுய ரட்டகா ளிகளெட்டும் நடனம்
புரிந்திடச் சங்கரித்துப்
புனிதமா யன்பரை யிரட்சிக்க வின்பமாய்ப்
புவிபரந் திடவந்தவா
பங்கயத் திருவதன ரெட்டிபட் டிசாமி
பத்தருப காரி யேபொற்
பாதா யெனக்குனருள் தாதாவி னேதா நன்
னீதா பரஞ்சோதியே. 22.

2. சுவர்னமய மானசிவ சோதியெ மெஞ்ஞான
சொரூபியே சுடர்விளக்கே
துய்யனே மென்மலர்க் கையனே நல்லபரி
சுத்தனே கற்பதருவே
அவனிதனி லுதித்தடிய வர்களிடர் தவிர்த்துறையு
மையனே யானடைக்கலம்
அம்புயத் திருமலர்கள் தந்துதெரி சனமுகந்
தருள்செய்வித் தென்னிருதயக்
கவலையுந் தீர்த்துவெகு சுபசேம லாபமுங்
கனயோக முங்கொடுத்துக்
காப்பதும் நின்கடமை யாதலா லிதயங்
கனிந்துகலி யாவும்நின்செய்
பவமுழுதும் நீக்கியாள் ரெட்டிபட்டி சாமி
பத்தருப காரியேபொற்
பாதா வெனக்குனருள் தாதாவி னேதா நன்
னீதா பரஞ்சோதியே. 23.

3. கரந்தனே ஞானபரி சுத்தனே செம்பொனே
கடவுளே யெந்தனிதயக்
கமலா சனத்தில்வளர் நிமலா விசேடமிகு
கையா சிறந்த மெய்யா

துத்திய மிகுந்தசுக வாரியே பகைவெல்லுஞ்
சூரியே மற்றுயர்ந்த
துங்கமா சற்றசுய தங்கமா மேருவே
தூயகற் பகதாருவே
முத்தே யெழிற்சுருதி வித்தே மனத்துயர்
முழுதுந் தவிர்த்து நன்றாய்
முக்கியமாய் நின்னும சங்கீர்த் தனஞ்செய்யு
முன்னமுந் தினம்வணங்கும்
பத்தியுஞ் சுபமுமருள் ரெட்டிபட் டிசாமி
பத்தருப காரியேபொற்
பாதா யெனக்குனருள் தாதாவி னேதநாதன்
னீதா பரஞ்சோதியே.

4. நெடியவரை துளபமா லிகையணியு மாதவன்
நேர்த்தியுயராத்திசூடும்
நிமலனய னிவர்மூவ ரோருருவமாகியும்
நீணிலத் தவதரித்தே
அடிபணியு மடியவர்க ளிடர்கலி யகற்றியும்
அலகையெண் படைகளோடும்
அட்டகா ளிகளெட்டும் நடனம் புரிந்திட
வாதாளி யிட்டெழுந்து
கொடியதுட் டரையிமொரு நொடியில்வே லாயுதங்
கூர்மைமிகு சூலாயுதங்
கொண்டுகுத் தியும்வெற்றி வாளினல் வெட்டியுங்
கொன்றும்கு டமுமணிந்து
படிபுரந் திடவந்த ரெட்டிபட் டிசாமி
பத்தருப காரியேபொற்
பாதா யெனக்குனருள் தாதாவி னேதாநன்
னீதா பரஞ்சோதியே. 25·

வேறு

5. சத்தியந் தவரு மாந்தர் தன்னைரட் சிக்குந் தெய்வம்
குற்றமில் லாத வெங்கள் குருரெட்டி பட்டி சுவாமி

வித்தகப் பதம்ப ணிந்து விநாயகர் கோவில் தன்னை
நித்தமும் வலம்வந்தோர்கள் நீடுழிவாழ்வர் தாமே.26.

6. ஓடிடும் பில்லி சூன்ய மொருதலை மண்டைக் குத்து
வாடிடும் வயிற்று நோயும் மாரகங் குன்மம் யாவும்
நாடிநின் பதியைச் சார்ந்துன் நாமமே பஜனை செய்யக்
கூடினோர் வறுமைதீர்க்குங் குருரெட்டி பட்டிசுவாமி.27.

7. தினந்தினம் ரெட்டி பட்டி தெய்வத்தைமனதி லெண்ணி
மனங்களி கூர்ந்தேவூற்று மாநகர் தன்னிற் சென்று
கனம்பெறு சுக்ர வாரக் கற்பூர தீபங் கண்ட
சனங்களின் கணங்கள் பீடை சகலமுந் தவிருந்தானே

8. சகலபீ டைகளும் போகச் சந்ததி மிகவுண் டாகப் 28.
பகலிருள் பருதி காணப் பறந்திடு மாறுபோல
இகலதுற் சனர்கள் நெஞ்ச மீடறித் திடுவ னென்றே
மருமகன் பிதாவின் தேவி வாலையம்பிகைசொன்னளே.

9. குருவரு ளாலே யிந்தக் குவலய மனுக்க ளெல்லாம் 29.
வருவதுன்னிடத்திற்சுக்ர வாரங்கள் தனிலென்கையாற்
பெறுவதுப்தீருநீற்றன் பாற்பெற்றபேர்பிணிகள்யாவும்
வெறுவியபேயகளெல்லாம்விடுவிடென் ரேடுந் தானே

10. வாழ்வெலாம் பெருகு மூற்றுமாநகர் தனிலெந் நாளுந்
தாழ்விலாச்சங்கரபாண்டியன் தயா நிதிதன்சிந்தெங்குங்
கேள்வியா லுலக மெல்லாங் கிளத்துக ணேசன்கோயில்
கோளிலா ரெட்டி பட்டிக் குருகடாட் சமும்பெற் ருனே.

வேறு

11. தத்திச் சமய மறிந்தென்னைத் தற்காத் திடுவாய் ரெட்டி
[பட்டி
முத்திக் கருணை நிதியான மூலப் பொருளே வூற்றுநகர்
சித்திரப் படத்தி லெழுந்தருளுந் தேவா நின்தாளர்ச்
[சனைப்பூப்
பத்திரக்குடலை யெடுக்காதார் பாழுங் குடலை யெடுத
[தாரே.

---

அடியாரொருவர் பாடியது

பல்லவி

வேடிக்கை பாராய்—ஐயன்திருவிளை—யாட்டைக் கேளாய்

### அனுபல்லவி

தாடிதலை வளர்த்து சந்நியாசி ரூபங்கொண்டு
பாடிப் பாவனையுடன் பத்தரைச் சோதிக்கவந்த (வேடிக்கை)

### சரணம்

1. கோமான் குலத்துதித்துக் குருவென் றவதரித்து
நாமம் ரெட்டிப்பட்டி சாமியென் றோதுகின்ற (வேடிக்கை)
2. ஓத முபதேசத்தா லுண்மையே தோணுமென்று
நீத மென்றுணர்ந்து நிச்சயப் படுத்துகின்ற (வேடிக்கை)
3. நீதி நெறிகள் யாவும் நெருங்கியே வருமென்று
ஆதி வினைகளெல்லா மழிவது திண்ணமென்ற (வேடிக்கை) 33.

---

## அடியாரொருவர் பாடியது

### பல்லவி

பூலோக கயிலாசன்—ரெட்டி மாநகர்
புரந்திடு மருள் நேசன்

### அனுபல்லவி

நீல கண்டதிரு நேத்திர னெனுஞ்சிவ
கோலங் கொண்டமத யானை யெனவுதித்த (பூலோக)

### சரணம்

1. மந்திர குருநாதன்—உலகமெங்கும்—வளரவந் திடுநீதன்
தந்திர முளயோகன்-சைவகுளத்தில்-தயவுட னவதரித்தோன்
கந்தக் கடம்பனென்றும் கார்வண்ண மேனியனென்றும் (பூலோக)
முந்த வுதித்தோனென்றும் மூலக் கடவுளென்றும்
2. அன்பரைக் காக்கும்வீரன்—துதிப்பவரு-ளானந்தமுள்ள தீரன்
இன்பங் கொடுக்குமாரன்-அடியவரை-யீடேற்ற வல்லசூரன்
துன்பங்கள் யாவைந் தொலைக்க வல்லநிபுணன்
வன்பரை யொழித்திட வந்த பரசமயன் (பூலோக)
3. பற்பல வதாரம்-முன்செய்ததொரு-பரப்பிர்மமு மிவனே
சொர்க்காதி புவனமெங்கும்—நிறைந்திருக்கும்-சூட்சாதி சூட்ச [மிவனே
துற்சங்கம் யாவையுந் தொலைத்துக் கலியுகத்தில்
வெற்றிபுரிந் தாளவந்த வீரபோக னுமிவனே (பூலோக)

---

## திருத்துறைப் பூண்டி
## வேளூர் T. G. கலியபெருமாள் பிள்ளை பாடியவை
### பதிகம்

உந்தமது பேர்சொலிக் கையில்வெண் ணீறெடுத் தோங்கார ரீங்காரமே
உவ்வுரிவ் வுஞ்சௌவு மையும்ரெட் டியபட்டி யுருவேற்றி மேற்றெளித்தா
லந்தங் குலேந்துமட மாதர்கரு வைக்கெடுத் தகலாத பேய்முனிகளை
யடித்துச் சவுக்கினுற் கைச் சாட்டை யால்வளைத் தாட்டிவாய் விட்ட லறவே
வெந்தழற் கொண்டெரித் தோட்டிவிடு செயசிங்க வீரப்ர தாபமூர்க்க
மிகுபுய பராக்ரகெம் பீரநய தந்திர விநோதசா மர்த்யவைய
மந்திரவி லட்சண சுலட்சண விலாசனே வளரெட்டி பட்டிதன்னில்
மதிமந்திரி யெனரத்ன மணிமேடை யதிலுற்று வாழுமென் குருரெத்னமே

வட்டவா ரிதியுலகி னல்லநிய மங்களொடு மலர்கொண்டு பூசித்துனே
மறவாம லருமைகுரு சிங்கமே யென்றுனே மதிக்கின்ற மனிதர்மீது
ஒட்டியஞ் சல்லியங் கருமான மந்திரமோ டொடிபில்லி விடுமடையரை
ஊட்டியை யரிந்துதிறம் விட்டியு முறிஞ்சுநின் னுதிரவாய் சேருடவே
கட்டுக் கடங்காத இட்டகுல காலனே கண்சாடை யாயிராமற்
கடிகடி பிடிபிடி யடியடி கொல்லுகொல் கட்டுகட் டுயிர்போக்கிடு
மட்டுமித மில்லாத இட்டகுல தெய்வமே வளரெட்டி பட்டிதன்னில்
மதிமந்திரி யெனரத்ன மணிமேடை யதிலுற்று வாழுமென் குருரெத்னமே.

எந்தமக் கெதிர்நின்று தர்க்கித்து மற்கட்டி மிதுவல்ல வதுவல்லவென்
றெத்திப் பவட்டுத் தினஞ்சொலு முலுத்தரை யிழுத்துப் பிடித்துதைத்தே
அந்தங் கெடப்பல் லுடைத்தெழு மகத்தையு மடக்கிச் சரீரத்தையும்
அனல்கொண்டு வாட்டிப் பிழிந்தம்மி மேலிட் டரைத்துக் கரைத்திடுவாய்
செந்தழற் கண்ணனே யெந்தைபெரி யண்ணனே சிமுத நிறவண்ணனே
சித்தனே பக்தர்புதழ் கர்த்தனே நித்தமுஞ் செகதலமெ லாந்துதிக்க
வந்தருள்செய் சுந்தர புரந்தர நிரந்தரா வளரெட்டி பட்டிதன்னில்
மதிமந்திரி யெனரத்ன மணிமேடை யதிலுற்று வாழுமென் குருரெத்னமே.

நீங்காத குன்மவலி யாசனப வுத்திரம் நெஞ்செறிவொ டீளையிருமல்
நீரழிவு வெண்குட்ட மேகமரை யாப்புபுண் ணினைவுபே தகமயக்கம்
தாங்காத வெடிசூலே மார்பாணி துடைவாழை தலேவலி வாந்திபேதி
சன்னிமூ லங்கபம் பாண்டுபித் தஞ்சூடு சகலவித பிணிகளொடினு ந்
தீங்கான பற்படு விடங்கடு விடங்களுஞ் செழுமேக வணனென்றுனேச்
சிந்தையி னினேந்துவெண் ணீறெடுத் தோதித் தெறிக்கப் பறந்தோடுமே

வாங்காத மனமொடு பிரியா திருப்பைநீ வளரெட்டி பட்டிதன்னில்
மதிமந்திரி யெனரத்ன மணிமேடை யதிலுற்று வாழுமென் குருரெத்னமே.

எத்தனை விதத்தெய்வ மெத்தனை விதக்கருப் பெத்தனை விதப்பிசாசம்
எண்ணிற் கடங்காத கோடானு கோடியென் றியம்பவுமென் வாய்வலிக்கும்
அத்தனை விதத்தையு மறிந்துகொண் டொல்காம லவ்வழி நடப்பதரிதென்
றையனே கரிகால வெய்யனே யென்றுன்னை யண்டியவே னுதலாலே
சித்தம திரங்கியுன் னெப்பரிய பரிவார தேவதைகள் சூழநடுவில்
திகழ்கின்ற மணிமேடை யதினின்று விளையாடுஞ் செய்கைகண் டிருகை
[முடிமேல்
வைத்தெதிர் வழங்கநல் வரமருள்க சமயமிது வளரெட்டி பட்டிதன்னில்
மதிமந்திரி யெனரத்ன மணிமேடை யதிலுற்று வாழுமென் குருரெத்னமே

தந்தைநீ தாயுநீ தமருநீ யுறவுநீ சமயங்க ளோராறுநீ
தரையாதி பூதநீ பொறியுநீ புலனுநீ சந்திர னிரவியுயிர்நீ
விந்துவொளி நாதநீ பரவெளிக ளேழுநீ வேதமுய ராகமமுநீ
வேதாந்த முடிவுநீ சித்தாந்த நிலையுநீ விண்ணுலக புவனங்களீ
சிந்தையொடு கரணநீ பல்லுயிர்க் குயிருநீ செகமெலா மீன்றவனுநீ
தேறுமுக் குணமுநீ யைந்தொழிற் செல்வநீ திகழ்சச்சி தானந்தனீ
வந்துமிகு கவிராச ரன்புமிகு சிவனேசர் வந்தனைகள் செயவோங்கிவாழ்
மாவரத வெனரத்ன மணிமேடை யதிலுற்ற வளரெட்டி பட்டிமணியே 40.

துப்பளவு புனன்மே னடக்கலாம் வடவையுந் தோன்றுநீ ராச்செய்யலாஞ்
சொல்லரிய கேசரி மீதிவர்ந் தேகலாந் தொட்டரவி னைப்பூணலாம்
வெப்பளவு வேங்கையைக் கட்டியே தழுவலா மிகுமணற் சோறுண்ணலா
மேதினியர் காணுது லாவலா மிருநிதிகள் வேண்டுமுன் வரச்செய்யலா
மொப்பளவு விடமுத லெட்டியுந் தின்னலா மோட்டினைப் பொன்னுக்கலாம்
முயர்மறை முடிப்பொரு ளுனையன்றி வேறில்லை யுண்மையென் றெந்தநாளும்
வைப்பளவு மாதேவ சம்புவென் றுன்னடியின் மனமிளகி யுருகலரிதே
மாவரத வெனரத்ன மணிமேடை யதிலுற்ற வளரெட்டி பட்டிமணியே 41.

பாட்டளி துதைந்துநின் றிசைபாடி நனையுண்டு படியும்பன் மலர்கள்சூடும்
பனிதந்த தகரவார் குழல்காட்டி முல்லைநிகர் பல்வரிசை காட்டிவாட்க
ணுட்டமுற மைதீட்டி மணிகலவை கொண்டுபொன் னுகமொத் தடிபரந்து
நனிசுணங் கெழில்தரக் கச்சற நிவந்தொளிர் நளினமென் முலைகள்காட்டித்
தேட்டமுறு கண்டமுது பாகனைய மொழிசொலிச் செந்தொடிக்கைகணீட்டிச்
சிங்கார நடைநடந் தேமையல் வலைவீசு சிறுமியர்க் காட்படாது
வாட்டமறு மாதவர்கள் பாடிப் பழிச்சுநின் மலரடி கொடுத்தாளுவாய்
மாவரத வெனரெத்ன மணிமேடை யதிலுற்ற வளரெட்டி பட்டிமணியே. 42

இருபொருள்க டம்மினுங் கல்வியாஞ் செல்வமே யிகபர சுகந்தந்திடு
மேற்றமிக் குடையதென் றெண்ணிலேன் புன்மையே னென்செய லிருந்து
[வாளா
பொருமருவு வேலையங் கண்ணியர்களின்பமே போந்தநெறி யென்றுழன்று
போதமு மிழந்தறிஞர் நீதமு மிழந்துபுரு டார்த்தநெறி யும்மிழந்து
துருமருவு செம்பென மலத்தொடக் குற்றயான் றூயநின் சேவைகண்டு
சுகமெய்தி வாமுநா ளிந்தநா ளென்றுநீ சொலவேண்டு மென்றனரசே
மருவார ணங்களொடு மாறுபா டின்றியே மஞ்சுறுஞ் சாரல்கொண்ட
மாவரத வெனரத்ன மணிமேடை யதிலுற்ற வளரெட்டி பட்டிமணியே 43.

காருற்று மின்னித் தழைத்தெழு மாணவக் காட்டினைப் பஞ்சாக்கரக்
கட்கத்தி னுற்றடிந் தப்பா லகக்கழநி கண்டுநன் கேதிருத்திப்
பாருற்று மறியாத மோனவித் திட்டுமெய் பத்தியா மெருவட்டியான்
பாடுநீ ரிட்டுவன் காமாதி களையொரீ இப் பதியுறூஉம் நிட்டைவேலி
நேருற் றுறக்கட்டி மாயையாம் பறவைகள் நெருங்கிவந் திடாதுகாத்து
நின்றுவிளை யுண்மையறி வானந்த போகமுணு நின்னடியர் கூட்டமருள்வாய்
வாருற்ற செல்வக் களஞ்சியத் தேனெழுகு மம்பொன்மணி மாலையழகா
மாவரத வெனரத்ன மணிமேடை யதிலுற்ற வளரெட்டி பட்டிமணியே 44.

"தலையே நீ தலை வணங்காய்" என்ற மெட்டு

1. செய்வாய் நெஞ்சகமே ரெட்டி பட்டி யடியிணையை
ஐவாய் சென்றலை யாமற் றினந்துதி
செய்வாய் நெஞ்சகமே

2. உய்வார்க் கோர்மருந்தே ரெட்டி பட்டித் திருப்பாதம்
மைவாய்க் கும்பவ வன்பிணித் துன்பொழிந்
துய்வார்க் கோர்மருந்தே

3, கண்டால் சொல்மனமே எங்கள் ரெட்டி பட்டிநாதனை
அண்டா தெங்கு மலைந்தலைந் தென்பயன்
கண்டால் சொல்மனமே

4, உண்டா மோவினைகள் நம்ரெட்டி பட்டி வடிவங்
கண்டா மாமணித் தாளையுங் கண்டவர்க்
குண்டா மோவினைகள்

5. துறவே நன்னெறியாந் திருத் தொண்டர்கள்
[கொண்டாடும்
விறல்வேற் கொற்றவன் மெய்யரு ளெய்திடத்
துறவே நன்னெறியாம்

6. கற்ருே ரேபெரியோர் வருங் காதலொரு மூன்றுங்
அற்ரு சானருள் பெற்றக நின்றிடக்
கற்ருே ரேபெரியோர்
7. கல்லார் நல்லவரே சொல்லுங் காமக்கலை குதர்க்கம்
பொல்லாச் சூது புலைகள வாதியைக்
கல்லார் நல்லவரே.
8. வல்லா ராவர்களோ குரு வார்கழற் கன்பியற்ரு
தெல்லா வித்தையு மெண்ணறக் கற்கினும்
வல்லா ரவர்களோ
9 வாரா தொன்றுளதோ ரெட்டி பட்டி குருநாதன்
சீரார் சேவடி சிந்தனை செய்திடில்
வாரா தொன்றுளதோ
10. சாராய் நெஞ்சகமே குரு சாமி யருண்மொழியை
நேராக் கொண்டுநீ தம்ரெட்டி பட்டியைச்
சாராய் நெஞ்சகமே 45.

---

## அடியாரொருவர் பாடியது

### சந்தநாமாவளி

1. இரெட்டிய பட்டி மகாமணியே நேசர்வ ணங்குஞ்
[சிகாமணியே
நிதிதரு பதிதனி லமரர்கள் தொழுதிட
நீதி வழங்குகண் டாமணியே
2. பத்தர்கள் தேடும் நவமணியே பாரிலுள் ளோர்செபி
[செபமணியே
படிமிசை இருளற நடுநிலை யருள்புரி
பாச மகற்று சிரோன்மணியே
3. முத்தர்கள் பணியுங் குருமணியே மூவர்க் கெட்டாத்
[திருமணியே
முடியடி நடுவினு மொரு பொருளாகிய
முக்கண் ணுவெழிற் கருமணியே
4. சித்தி புரிந்திடும் நன்மணியே தேசமெ ல்ாம்புகழ்
[பொன்மணியே
சிந்தை தெளிந்திட வந்து நடம்புரி
தேசோன் மணியே சின்மணியே 46.

பிரஞ்சு இலாகா
புதுவையைச் சார்ந்த பாகூர் கொம்மீன்
பிள்ளையார் குப்பம்
**மணியம் பாபு ரெட்டியாரவர்கள்**
இல்லத்தில்
**ஸ்ரீமத் இரெட்டியபட்டி சுவாமிகளின் அருட்பெருக்கால்**
தற்போதும் நடைபெறும் பயனையுணர்ந்த
கூடலூர் தாலூகா புதுப்பேட்டை போர்டு ஆண் பாடசாலை
மாஜித் தமிழாசிரியரும்
ஷெ தாலூகா தம்பிப்பேட்டை பாளையமென்னும்
சோலை, ஸ்ரீமத் வீரசைவ சிவயோக சுவாமிகள்
மடாலயத்து ஆதீன தருமகர்த்தருமான
**மு. அப்பாதுரை ஐயரவர்கள்**
இயற்றியவை

---

பதினாறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

1. சிவமருவு வேதாந்த முடிபையு முணர்ந்துமே
சிவயோக சாதன மியற்றிச்
சித்திதரு சாதாக்கிய மெவருமே கண்டுய்யச்
சித்துருவ வைங்கரன் றனையே
எவமகலு மாலவாய் வைகையின் கரைமேவி
எண்ணலுறந் தாபித் தலொடே
வெந்நலமு மோங்குதிருச் செந்தில்வா ழறுமுகவ
னெழிலருளு முனிது பெற்றுப்
பவமகலும் பொதிகையி லரியதவ மிகப்பூண்டு
பத்தர்க்கு வாய்மை கொண்டு
பந்தமுறு முலகுதனி லுதயமுன் னீர்மூழ்கிப்
பத்தியுட னீறு பூசித்
தவமருவு கணபதியி னடியிணைகள் வழுத்தவுந்
தாங்கரிய நோய்கள் யாவுந்
தற்போதமும் நீக்கியெமை யெப்போதுங் காத்தருளுந்
தகுரெட்டி பட்டி குருவே 47.

2. உலகுதனி லுரியபெரு சாத்திர மனைத்தையு
முயரிசைப் பாடல் செய்ய
வுணர்பெரிய ரிவரென்ன வுறுமடிய ருளங்கொண்டு
வுன்னரிய பதிகள் பலவும்
நலமிக்க வபிடேக மாதிவிழாப் புரிந்தெவரு
நன்ஞான முணர்ந்து வந்த
நன்மையொடு குருநாதன் கூறியவை சட்டமென
நாட்டினிற் போற்றி நிற்கப்
பலமிக்க தாதான்மிய காட்சியொடு சித்திபல
தற்போது மளிக்கு நிதியே
பண்பினொடு யோகிகளும் பரப்பிரம சொருபரெனப்
பல்காலு மருவி சூழத்
தலமிக்க பிள்ளையார் குப்பத்திற் சிலபோது
தங்கியருள் புரிந்த தேவே
தளைவினைகள் நீக்கியெமை யெப்போதுங் காத்தருள்
தகுரெட்டி பட்டி குருவே. 48.

---

## கலிவிருத்தம்

3. சிந்தை மகிழ்ந்து சிறப்பொடு பூசனை
முந்தை யுன்னி முடிப்பவ ரோங்குக
எந்தை யிரெட்டி பட்டி யெழில்பெறு
விந்தை குருவின் வியன்பதம் வாழ்கவே ! 49.

---

## அடியாரொருவர் பாடியது

### குருநாதன் அருணிலைக் கும்மி

கும்மியடிப் பெண்கள் கும்மிய டியிரு
கொங்கை குலுங்கவே கும்மியடி
நம்மையா ளும்ரெட்டி பட்டி நாதனை
நாடிக் கும்மி யடியுங்கடி
கரிமு கத்தனுக் கன்பனடி காலங் கடந்த நாதனடி
கருவினை யொழிக்க வந்தான்டி யவன் கருத்தைப் பாடி யடியுங்கடி

வைய கத்தினில் வந்தான்டி யவன் வாலே யருளைப் பெற்றவன்டி
வைராக் கியமுடைய நாதனடி யவன் வரவைப் புகழ்ந் தடியுங்கடி

சிவனருள் பெற்ற நாதனடி யவன் சீல னுக்குப காரனடி
கவலே யொழிக்க வந்தவன்டி யவன் கருத்தைப் பாடி யடியுங்கடி

கனமனங் கரைய வடியுங்கடி யவன் காமத்தை வென்ற புனிதனடி
வன்புலக் குறும்பையொழிப்பான்டி யவன் வல்லமை பார்த் தடியுங்கடி

சடைமுடி யுடைய நாதனடி யவன் சண்முக னருள்பெற்ற நாதனடி
தொடை யுடைய மார்பனடி யவன் தோற்றத்தைப் பாடி யடியுங்கடி

மறைமு டிமீது நின்றவன்டி யவன் மாமயில் வீரப் புனிதனடி
கறைமிடற் றண்ணலே யடைந்தவன்டி யவன் கயிலே மேவிய கடவுளடி

துரிய நிலேயில் நின்றவன்டி யவன் சோதிசொ ரூபத்தைப் பார்த்தாயடி
ஆரி தயமு முணர்ந்தான்டி யவன் ஆதியைப் பாடி யடியுங்கடி

சாதிப் பிறப்பை யொழித்தான்டி யவன் சன்மார்க்க நிலேயில் நின்றவன்டி
ஆதி நாயகன் மகிழும்படி யவன் அங்க மொழிக்க வந்தவன்டி

மும்மலத் தொடக்கை யறுப்பான்டி யவன் மூஷிக வாகன நாதனடி
இம்மைக்கு மம்மைக்கு மருந்தான்டி யவன் இனிமையைச்சொல்லி யடியுங்கடி

ஊரைச்சொன் ஞலே போகுமடி பிணி பேரைச்சொன்ஞலே போகுமடி
யாருக்கு மன்பனிவன்தான்டி யவன் சீரினேச் சொல்லி யடியுங்கடி

தேச முய்ய வந்தான்டி யவன் நாச மொழிய வருவான்டி
ஆசா பாசத்தை நீத்தான்டி யந்தத் தாசனேக் கும்மி யடியுங்கடி

பார்த்த பேருக்குப் பரமனடி யவன் பாவிகண்ணுக்குச் சீலனடி
தேர்ந்து பார்த்தாலே தெரியுமடி யவன் சீர்மையைக் கண்டடியுங்கடி 50

---

## திருத்துறைப்பூண்டி வேளூர்,
## S. பெத்தபெருமாள் ஆச்சாரியார் பாடியது

பல்லவி

கொஞ்ச மேனுமுன் நெஞ்சமி ரங்கலேயா
குருநாதனே சர்வேசனே

அனுபல்லவி

அஞ்ச லென்றவர்கள் சஞ்சலந் தீர்த்திடும்
ஐயா குரு மெய்யா வருள் (கொஞ்ச)

சரணம்

1. இரெட்டியப் பட்டியி லுதித்த அவதாரா
நேச முடனேயடி யார்க்குப காரா
பட்ச முடன்வந்து பால னெனைக்காவாய்ப்
பரலோகமு மருள்வாயிரு நலனும்பெறத் திருவேகுரு
(கொஞ்ச)

2. பாவலர்கள் போற்றுங் கோவே யுனையன்றிப்
பண்பாக வேதுதித் தேன்துணை நீயன்றி
நாவால் புகழ்வதற்கு நானுஞ்சொல் லமுயன்று
நாதாவரத் தோதாவுப தேசாவருள் நீதாவரக்
(கொஞ்ச)

தொண்டர்கள் போற்றித் தினந்துதித் தேத்தியே
தூயாவு னையடியார் சிந்தையுள் நாட்டியே
பந்த வினையென்னும் பாசத்தை யோட்டியே
பாழாகிய சென்மமிதைச் சூழாவினை தொடராதறக்
(கொஞ்ச)

4. அனுடநட் சத்திரத்தி லடக்கமான யோகனே
அடியார்க் குபதேசித் தருள்தந்த வீசனே
ஐயா வுனையன்றி யாரெனக் குத்துணை
அருள்வாய் பெத்தபெருமாளுக்குத் தருவாயுன்
[னிருபாதத்தைக் (கொஞ்ச)

## அடியாரொருவர் பாடியது

### சுவாமிகள் அவதார அற்புத நாமாவளி

ஆதியந்த மிரண்டையுமே இவ ரடிமுடியாய் வைத்துக்கொண்டார்
நடுவே நிலைமையாக இந்த நாதனும் பூண்டுகொண்டார்
திரிலோக மூன்றையுமே இவர் திரிநேத்ர மாக்கிக்கொண்டார்
குண்டலி சத்திதன்னை இவர் குறிப்பாக வைத்துக்கொண்டு
சந்திரர் சூரியரை இவர் சரமாகச் செய்துகொண்டார்
நட்சத்திர மண்டலத்தை இவர் நாவாகச் செய்துகொண்டார்
நவசத்தி யொன்பதையு மிவர் நாகபட மாக்கிக்கொண்டு
கழுத்தி லணிந்துகொண்டார் நீல கண்டரென்று சொல்வதற்கு
வாயு பகவானை இவர் மார்பாகச் செய்துகொண்டார்
அக்கினி பகவானை இவர் அஸ்தமாகச் செய்துகொண்டார்
அட்டகுல பர்வதத்தை யிவ ரடக்கின ரிருபுறத்தில

சாகரங்க ளேழையுமே இவர் சரீரமாகச் செய்துகொண்டார்
பிருதிவி யொன்றையுமே இவர் பீடமாகச் செய்துகொண்டார்

பாதாள லோகமங்கு மிவர் பாதமாகச் செய்துகொண்டார்
ஆதிசேட னென்றையுமே யிவர் ஆசனமாய்ப் போட்டுக்கொண்டார்

மேகமண்ட லங்களையுந் திருமேனியி லழுத்திக் கொண்டார்
தொண்ணூற்றாறு தத்துவத்தை இவர் சூட்சமாச்செய்துகொண்டார்

அட்டமா நாகங்களை இவர் ஆபரணம் பூண்டுகொண்டார்
உலகம் கிரீடமாக இந்த வுத்தம ரணிந்து கொண்டார்

ஆகாயங் குடையாக இந்த அரனும் பிடித்துக் கொண்டார்
பதினெட் டாயுதமாய்ப் பதினெண் சித்தர்களைச் செய்துகொண்டார்

எண்ணுயிரம் சத்திகளை யிவ ரிடையிலிறுக்கிக் கொண்டார்
அந்தரம் வில்லாக ஆதி சேடனு ணுகக் கொண்டார்

சப்தகோடி மந்திரமும் வாயுந் தன்னம்பா வைத்துக்கொண்டார்
மகமேரு பர்வதத்தை இவர் மணிமந்த்ர மாக்கிக்கொண்டார்

அண்டபிண்ட சராசரத்தை யிவ ரவிழ்தமாகச் செய்துகொண்டார்
முப்பத்து முக்கோடி தேவர்களை முன்னும்பின்னு மாகவைந்தார்

அட்டதிக்குப் பாலகரை யிவர் அட்டதிசைக் காவல்வைத்தார்
நவவீர ரென்பவரை யிவர் நாலுபக்கம் காவல் வைத்தார்

இருநூற்றெழுபத் தெட்டுக்கோடி சத்திகளை ஏவலாகச் செய்து கொண்டார்
பூதகணங்களையெல்லா மொரு பொக்கிஷமாகச் செய்து கொண்டார்

பூதத் தலைவர்களை யிவர் பொக்கிஷம் சுமக்கவைத்தார்
சிவகணங்க ளத்தனையு மொரு திறவுகோலாய்ச் செய்துகொண்டார்

சிவகணங்க ளதிபதியைச் சித்ரபுத்ர ராக்கிக்கொண்டார்
இருபத்தெண்கோடி நரகமதை யிவ ரிடதுகையி லேந்திக்கொண்டார்

சொர்க்கமதை வலதுகையி லிவர் சுகமாக வைத்துக் கொண்டார்
வேதாந்தக் கோட்டைதன்னைத் தெரு வீதியாய் வகுத்துக்கொண்டார்

சித்தாந்தக் கோட்டைதன்னை யோர் சிவிகையாகச் செய்துகொண்டார்
சப்தரிஷி சிவிகை தாங்கத் தானுள் ளிருந்துகொண்டார்

பதினாறு கலையுடனே யிவர் பார்தனி லவதரித்தார்
கின்னரர்கள் கிம்புருடர் கெருடகெந் தருவர்களும்

இயக்கியர் விஞ்சையரு மினிய நரம்புதோல் கருவிகளும்
சித்திவித்தியா தரரும் இங்கே சேர்க்கை யாகமுழங்கிவரப்
பதினெட்டு வாத்தியமு மிவர் பக்கத்தில் முழங்கிவர

முப்பத்திரண்டுவகை மேளதாளம் முன்பக்கம் முழங்கிவர
முனிவர் ரிஷிகளுமா யிவர் முன்னாகப் பாடிவர
வேதக் கோஷ்டிகளுடன் வேதப் புத்தகங் கைப்பிடித்து
நாற்பத்தேழு வருடமாக இவர் நாற்றிசையுஞ் சுற்றிவந்து
பொக்கிஷங்கள் தாம்திறந்து இவர் பூமியெங்கும் பார்த்துவந்தார்
பனிரெண்டு வருடமாக அருள்காட்டிப் பரிசோதனை செய்து
நீதி விசாரணைக்கு மூன்றுவருடம் நித்தியன் கருணை வைத்தார் 52.

---

## 1080-ஆம்௵ ஆடிமீ அம்பா சமுத்திரத்தில்

## பிரமதேசம் செட்டியாரவர்கள் பாடியது

### சற்குருமகிமா நாமாவளி

இரெட்டிய பட்டி ஆண்டவரே இரத்தின சிம்மா சனபதியே
தீரா வினைகளைத் தீர்ப்பவரே செகத்திற் குருவாய் நின்றவரே
சுத்தசன் மார்க்க நெறியினரே தொல்புவி யாள வந்தவரே
உலகந் தழைக்க வந்தவரே உத்தம புருடர்க்கு நாயகரே

பூமி தழைக்க வந்தவரே புண்ணிய புருடருக்கு நாயகரே
சகல மதங்களின் சம்மதரே சகல கலைக்கும் வல்லவரே
இராஜநீதி தெய்வநீதி யிவைநிலை மைகள்தவ ருதவரே
பேரா னந்த முடையவரே பேரின் பானு சுகவமுதே
பேரானந்தங் காட்டவல்ல பேரின்பவெள் ளக்கடலே

எங்கு நிறைந்த பூரணரே யெல்லோ ருக்கும் நாயகரே
பத்தரைக் காக்க வல்லவரே பாவ வினைகளைத் தீர்ப்பவரே
நித்தியா னந்த நிட்களரே நேர்மையுள் ளோர்க்கு நாயகரே
துட்டநிக் ரகசிட்ட பரிபாலனஞ் சுகமாய் நடத்த வந்தவரே
அறிவில் லாத மானிடருக் கறிவு கொடுக்க வந்தவரே

தெரியாத மானிடர்க்குத் தெளிவு படுத்த வந்தவரே
அன்பர் மனதி னருகிருந்தே யாடுங் கருணைப் பரஞ்சோதி
பத்தர்களைச் சோதிக்கப் பலவே டங்கள் பூண்டவரே
பத்தி யுடைய புண்ணியர்க்குப் பத்தி காட்ட வந்தவரே
அன்புக் குரிய மாதவர்க்கே யானந்தங் காட்ட வல்லவரே
பரம பதத்தைக் கொடுப்பவரே பார வினைகளைத் தீர்ப்பவரே
பிறவிப்பிணியை நீக்கவந்த பெருஞ்செல்வத்தின் பெருமானே 53.

---

## கும்பகோணம், சோழன் மாளிகை அம்மையார் பாடியவை

### நிட்டானுபூதியிலிருந்து சுவாமிகளுக்குத் தூதுவிட்டது

பல்லவி

தூதுநீ சென்றுவாராய்--குரு நாதன்முன்போய்த்
தூதுநீ சென்றுவாராய்

சரணம்

1. வீதிக்கு வீதிநின்று விளையாடும் வேளையிலே
பாதபூசைக்குநின்ற பசுங்கிளி தேடுதென்று (தூது)
2. அற்புதக் காட்சியென்று மானந்தங் காட்டிநின்ற
சற்குரு நாதனைச் சகலமுந் தேடுதென்று (தூது)
3. காணாத காட்சியெல்லாங் கண்டு தெளிந்தபின்பு
பூணாரம் பூண்டுகொண்ட பொற்கிளி தேடுதென்று
(தூது)
4. பாத கமலந்தன்னில் பணிந்து பூசைகள்செய்யும்
சாதனந் தந்தகுரு சாமியைத் தேடுதென்று (தூது)
5. சோதி சொரூபமதைச் சுயம்பிர காசத்தனியாய்
ஆதியிலெனக்களித்த வையனைத்தேடுதென்று(தூது)
6. பிரியா திருக்கவென்று பேணி யிருந்தவென்னை
வெறிகொள்ளச் செய்துபோன வேடிக்கை தேடு
தென்று (தூது)
7. தோரண கம்பமெல்லாஞ் சொகுசா யலங்கரித்துக்
காரணந் தெரியாமல் கலங்கியே தேடுதென்று (தூது)
8. தேவால யங்களெல்லாஞ் சிறப்பா யலங்கரித்தே
ஏவல்கள் செய்துவைத்த எந்தையைத் தேடுதென்று
(தூது)
9. தெருவீதிதோறும்நின்று தியானங்கள் சொல்லவைத்த
அருமறைப் பொருளினை யனைவோருந் தேடுதென்று
(தூது)
10. அந்திப் பொழுதினிலே அரகரா வென்றுசொல்லும்
விந்தையைக் காணவைத்த வேதத்தைத் தேடுதென்று
(தூது)
11. முத்தி கொடுக்கவந்த மூர்த்தியை யெந்தநாளும்
பத்திகள் செய்துவந்த பாவைகள் தேடுதென்று (தூது)
12. சங்கீத மேளதாளம் தவறாமல் நடந்திட
இங்கிதக் கோஷ்டிசெய்த வின்பத்தைத் தேடுதென்று
(தூது)

13. அந்தணர் பெரியோர்க ளனைவோரும் வந்துகூடிச்
சென்றடி தொழுதிட்ட செல்வத்தைத் தேடுதென்று
(தூது)

14. பாவாணர் சங்கீதம் பாடி முழங்கிவரத்
தேவ விருதுடனே சென்றதைத் தேடுதென்று (தூது)

15. வேதத்தி னுட்பொருளை விவரித் துரைக்கவந்த
நாதனைக் காணுமல் நற்கிளி தேடுதென்று (தூது)

16. பத்தரைக் காக்கவென்று பரமகுரு வாய்வந்த
சித்தரைக் காக்கவென்று செகமெலாந் தேடுதென்று
(தூது)

17. வரும்வரு மென்று சொல்லி வழிபார்த் திருந்துநாளும்
சுருதி முடிவைக்காணச் சொர்னக்கிளி தேடுதென்று
(தூது) 54.

---

## கிட்டாறு பூதித் தூதுப் பாடல்

அன்னத்தைத் தூதனுப்பினேனெங்களாண்டவன் சற்குருநாதருக்கு
ஆண்டவன்திரு நடனங்கண்டல்லோ அன்னமும்வரக் காணேமே

நாரையைத் தூதனுப்பினேனெங்கள் நாதன்சற்குரு தேவருக்கு
நாதனிருக்கும் வடிவங்கண்டல்லோ நாரையும்வரக் காணேமே

மயில்களைத் தூதனுப்பினேனெங்கள் வல்லவர்சற்குரு நாதருக்கு
வல்லவர்விளை யாடல்கண்டல்லோ மயில்களும்வரக் காணேமே

குயில்களைத் தூதனுப்பினேனெங்கள் குருபரன்திருச் சேவைக்குக்
குருபரன்திருப் பாடல்கண்டல்லோ குயில்களும்வரக் காணேமே

கிள்ளையைத் தூதனுப்பினேனெங்கள் கெம்பீரர்சற்குரு நாதருக்குக்
கெம்பீரர்கொண்ட கோலங்கண்டல்லோ கிள்ளையும்வரக் காணேமே

கருடனைத்தூ தனுப்பினேனெங்கள் கருணையாங்குரு நாதருக்குக்
கருணைதங்கிய அருளைக்கண்டல்லோ கருடனும்வரக் காணேமே

வல்லூறைத்தூ தனுப்பினேனெங்கள் வரதர்சற்குரு நாதருக்கு
வரதர்செய்கின்ற மார்க்கங்கண்டல்லோ வல்லூறும்வரக் காணேமே

சேவலைத்தூ தனுப்பினேனெங்கள் செல்வர்சற்குரு நாதருக்குச்
செல்வரிருக்குங் குணங்கண்டல்லோ சேவலும்வரக் காணுமே

தாராவைத்தூ தனுப்பினேனெங்கள் தற்பரசற்குரு நாதருக்குத்
தற்பரசற்குரு சாலங்கண்டல்லோ தாராவும்வரக் காணேமே

புட்களைத்தூ தனுப்பினேனெங்கள் புண்ணியசற்குரு நாதருக்குப்
புண்ணியர்பேசும் புகழைக்கண்டல்லோ புட்களும்வரக் காணோமே

மாடப்புருவைத்தூ தனுப்பினேனெங்கள் மணிமந்த்ரசற்குரு நாதருக்கு
மந்திரசக்தியின் வலிமைகண்டல்லோ மாடப்புருவரக் காணோமே

வர்ணப்பட்சிக ளனேகமாகவே வலிமையாய்த்தூ தனுப்பினேன்
வாக்கினில்வரும் வேதங்கண்டல்லோ வர்ணப்பட்சிகளுங் காணோமே

இடபங்களைத்தூ தனுப்பினேனெங்க ளினியசற்குரு நாதருக்கு
இனியசற்குரு நிலைமைகண்டல்லோ இடபங்கள்வரக் காணோமே

புள்ளிமான்தூ தனுப்பினேனெங்கள் புகழ்பெற்றோங்கிய நாதருக்குப்
புகழ்பெற்றோங்கிய நாதரைக்கண்டல்லோ புள்ளிமான்வரக் காணோமே

கலைமானைத்தூ தனுப்பினேனெங்கள் கர்த்தன்சற்குரு நாதருக்குக்
கர்த்தனிருக்குங் கருணைகண்டல்லோ கலைமானும்வரக் காணோமே

மனவாக்குக்காய மெனமூன்றையும் மாயமாய்த்தூ தனுப்பினேன்
மலர்கள்தூவியே தெண்டனிட்டுமே வரதரும்வரக் காணோமே 15.

---

## நிட்டாநுபூதியிலிருந்து தேடுவது

சீரிலங்குந் திருவே யருள்தருஞ் செல்வப் பெருங்கடலே
பார்தனில் வந்தகதை முடியுமுன் பாலகி கண்டிலனே

எந்தன்குரு நாதனிங் கேயிருந் தெவ்வழி யேகினரோ
சொந்தமா யானிருந்தும் போனவழி தூரமோ கண்டிலனே

கட்டில் மெத்தைகளே திண்டுதலை யணைகளே நீங்கள்
சட்டமுட னிருக்கச் சுவாமிசென்ற சாலத்தைக் காணீரோ

நாற்காலி ஈச்சேர்களே யுங்களிடம் நண்ணி யிருந்தவருட்
பாற்குடம் போனவழி விடிந்த பகலிலுங் காணீரோ

ஆசாரச் சாவடியி லடிதொழு மன்பர்கள் காத்திருக்கப்
போசன சாலையுள்ளே புகுந்தவர் போனதைக் காணீரோ

கொல்லையில் கேணிகளே குளிர்ந்தசல மென்று ஸ்நானஞ்செய்த
எல்லையில் நீங்களெல்லா மிருக்க என்னெந்தையைக் காணீரோ

கருவேப் பிலைமரமமே நிறைந்த கதலியே தாழைகளே
பருவத்துட னிருக்குங் குணங்களைப் பார்த்துமெங் கேகினரோ

தெருவி லருமையுடன் விளையாடுஞ் செல்வக் குழந்தைகளே
பெரிய மனிதர்களே குருநாதன் பேட்டியுங் காணீரோ

ஆலயந் தோறும்நின்று விளங்குஞ் சிவானந்த மூர்த்திகளே
பால குருநாத னிந்தமுகம் பார்க்கவுங் காணீரோ

சங்கையாய்க் கூடிநிற்கும் பசுக்களே தனித்த கன்றுகளே
இங்கே யிருந்திரோ நாதன்வர இவ்வழி காணீரோ

வாவி தடாகங்களே வொன்றுகவே வாழுஞ்செந் தாமரையின்
பூவே குருநாத னிந்தவழி போகவுங் காணீரோ

நாத்து நடவுகளே வயல்களில் நன்றுய்ப் பயிர்த்தேறி
பூத்தசெந் நெற்கதிரே யிங்கேயொரு புண்ணியர் காணீரோ

நந்த வனங்கள் தோறும் பூத்துச்சொரி நால்வகைப் புட்பங்களே
இந்த வனத்தோடே குருநாத னேகியுங் காணீரோ

மந்தாரை பிச்சிமுல்லை மருவும ருக்கொழுந் தேமகிழே
சந்தனச் சோலைகளே யிந்தவழி சாமியைக் காணீரோ

சாலை நெடுந்தூர மிந்தவழி சார்ந்தவி ருட்சங்களே
நாலு வழியிலுமாய்ச் சென்றுவரும் நாதனைக் காணீரோ

புண்ணிய தீர்த்தங்களே நதிதோறும் போக்குள்ள மீனினங்காள்
கண்ணின் மணிவிளக்காய் விளங்குங் கருணையைக் காணீரோ

அன்றில் பேடுகளே மயில்குயில் அன்னமே தாராவே
செந்தலைச் சேவல்களே யிந்தவழி தேவனைக் காணீரோ

பட்சிப் பறவைகளே மணிப்புரு பஞ்சவர் ணக்கிளியே
இச்சையுள்ள கிளிதா னிந்தவழி யெப்போதுங் காணீரோ

வாச மலரெடுத்தே ஐயன்பதம் வாழ்த்தியே பூசைசெய்த
நேசர்க ளிங்கிருக்கச் சென்றதொரு நிலைமை காணீரோ

வண்டுகள் தும்பிகளே மலரோடு வாசனை யிங்கிருந்தும்
கண்டு மதுவையுண்ணுங் கருத்தினுல் கண்ணனைக் காணீரோ

என்றுயான் காண்பேனு ஐயன்பத மெப்படிச் சேர்வேனே
சென்றவி டங்களெல்லாந் தேடித்தேடிச் செப்பியுங் காண்கிலனே 56.

---

மகானொருவர் பாடியது

பல்லவி

கூவுதையோ சேவல் கூவுதையோ
கொக்கரித்துக் கூத்தாடிக் கூவுதையோ

அனுபல்லவி

கூவுகின்ற சத்தமதின் குறிப்பறி யாதவர்க்குக்
கொடிய நரகமென்றுங் கூவுதையோ

சரணம்

கணபதி வந்தாரென்றுங் கூவுதையோ அவர்
கலியுக வரதரென்றுங் கூவுதையோ

தேவர்கள் வந்தாரென்றுங் கூவுதையோ விந்தச்
செகமெல்லா மோர்குடைக்குள் கூவுதையோ

அரசாள வந்தாரென்றுங் கூவுதையோ ஈச
னவதாரஞ் செய்தாரென்றுங் கூவுதையோ

மும்மூர்த்தி வந்தாரென்றுங் கூவுதையோ விந்த
மூவுலகுங் கொக்கரித்துக் கூவுதையோ

ஏகபரா பரவஸ்து வாகி யிங்கே
யேசுவும் வந்தாரென்றுங் கூவுதையோ

ஈசா அலைகிஸ் சல்லாம் வந்தா ரென்றே
இங்கிதமாய்க் கொக்கரித்துக் கூவுதையோ

மகதி அலைகிஸ் சல்லாம் வருவா ரென்றும்
வகைவகையாய்க் கொக்கரித்துக் கூவுதையோ

திசாலும் வந்தாரென்றுங் கூவதையோ விந்தச்
செகமல்லாம் கொக்கரித்துக் கூவுதையோ

வீர போகவசந்த ரென்று சொல்லி நிதம்
விதவிதமாய்க் கொக்கரித்துக் கூவுதையோ

நீதிக்கொடி நாட்டவென்று தேவ ரெல்லாம்
நீணிலத்தில் வந்தாரென்றுங் கூவுதையோ

சாத்திரங்கள் சொன்னபடி தவரூமலிங்குச்
சகலரும் வந்தாரென்றுங் கூவுதையோ

ஆகாய மாய்ப்பறந்துங் கூவுதையோ வெண்ணி
லண்டமெல்லாஞ் சுற்றிவந்து கூவுவதையோ

இரவும் பகலுமாய்க் கூவுதை யோவதே
யேகாந்தமா யிருந்துங் கூவுதையோ

அற்புதங்கள் காட்டியுமே கூவுதையோ நிதம்
அந்தரமாய் நின்றுகொண்டு கூவுதையோ

வேதங்கள் சொல்லியுமே கூவுதையோ நல்ல
வேதாந்தங் காட்டியுமே கூவுதையோ

சாத்திரங்கள் சொல்லியுமே கூவுதையோ வுலகிற்
சகலருக்குத் தோணும்படி கூவுதையோ

மானிட ரூபங்கொண்டு தேவ ரெல்லாம்
வையகத்தில் வந்தாரென்றுங் கூவுதையோ

பொய்கொலை களவுகள் கூடாதென்றும்
பொருந்தவே கொக்கரித்துக் கூவுதையோ

துட்டர்மடி வாரென்றுங் கூவுதையோ யின்னும்
சொற்பநா ளிருக்குதென்றுங் கூவுதையோ

உலக மழியுமென்றுங் கூவுதையோ நிதம்
உத்தம ரிருப்பாரென்றுங் கூவுதையோ

வேதம் தவறுகின்ற மானிடர்க்கு நல்ல
வீரவாள் வந்ததென்றுங் கூவுதையோ (கூவு) 57.

---

அடியாரொருவர் பாடியது

பல்லவி

மாயவித்தை செய்கிறு ரையா—இரெட்டிய பட்டிசாமி
மாயவித்தை செய்கிறு ரையா

அனுபல்லவி

மாயவித்தை செய்கிறுர் காயமொன் றெடுத்துக்கொண்டு
நேயமான அன்பருக் குபாயமாகக் காட்டுகிறுர் (மாய)

சரணம்

1. உண்ணுகிறு ருறங்குகிறு ருளறுகிறுர் திரிகிறுர்
கண்ணகண்ண வேவந்து காட்சிகளைக் காட்டுகிறுர் (மாய)

2. கண்ணைமூடச் சொல்கிறார் கனவைப்போலக் காட்டுகிறார்
விண்ணைப்போலக் காட்டுகிறார் மெய்தனிலே காட்டுகிறார் (மாய)

3. பாட்டுப்பாடச் சொல்லுகிறார் பாவைகளைக் காட்டுகிறார்
கூட்டங்கூட்ட மாகவந்து குருவைவ ணங்கச் சொல்லுகிறார் (மாய)

4. ஆசையை யடக்குகிறா ரருள்தனைக் கொடுக்கிறார்
நேசமாக வெல்லோர்க்கும் நிட்டையைக் கொடுக்கிறார் (மாய)

5. வரசித்தி விநாயகனை வலமாய்வரச் சொல்லுகிறார்
கரங்கூப்பி யடிபணிந்தால் கர்மம்விலகு மென்கிறார் (மாய)

6. மேடை விநாயகனை மேதினியோ ரறியவே
கோடைவெய்யி லில்வைத்துக் கும்பிடவுஞ் செய்கிறார் (மாய)

7. வல்லபை மணாளனை வழிக்கரையி லேயமர்த்தி
எல்லோருங் கண்டுதொழ வருளளிக்கு மென்கிறார் (மாய)

8. பார்க்கப்பார்க்க வெல்லார்க்கும் பலன்கிடைக்கு மென்கிறார்
காக்கக்காக்க கடவுளுங் காட்சிதனைக் கொடுத்திடுவார் (மாய)

9. கண்ணப்ப ரைப்போலக் கருத்தி லுறுதிகொண்டால்
விண்ணுடர் மெச்சவே மெய்ப்பொருள் தந்திடுவார் (மாய)

10. ஆசானைக் கண்டவுட னன்புடனே நீவணங்கு
பூசனைகள் புரிந்துமே பூமியிற்ப டியதில்லு (மாய)

11. குருவைப் பணியவேணுங் கூடவே யிருக்கவேணும் (மாய)
கருத்தை யறியவேணுங் கடவுளென்று நம்பவேணும் (மாய)

12. ஏடாகூடம் பேசாதே ஏமாந்து போய்விடாதே
சாடாயூ ழியஞ்செய்தால் சற்குரு துணையிருப்பார் (மாய)

13. கண்டவிடஞ் செல்லாதே கருத்தைவெளி யாக்காதே
கொண்டவ னென்றாலுங்கூட வுண்மையை யுரையாதே (மாய)

14. நிட்டையிலே கிடைத்தபடி நித்தநித்தங் கவனம்பண்ணு
கட்டமின்றிக் காத்திடுவார் கடவுள்ரெட்டி பட்டிசாமி (மாய)

15. ஆசாரம் விட்டுவிடு அன்பர்களை நீவணங்கு
நேசமாக நீயிருந்தால் நிட்டையில் பொருளளிப்பார் (மாய)

16. ஆயாசப் படவேண்டா மன்புடனே யானுஞ்சொன்னேன்
காயாசங் கொள்ளவேண்டாங் கடவுளே துணையுஞ்செய்வார் (மாய)

17. கேட்டபொருளைக்கொடுப்பார் கிரமமாக நீயிருந்தால்
காட்டவேண் டாம்வெளியில் கடவுளுந் துணையிருப்பார் (மாய)

18. கோவிலுக்கேன் போகவேணுங் குனிந்துகும் பிடவேணும்
தாவித்தாவிப் பாடுபட்டால் தற்பரத்தைக் கண்டிடலாம் (மாய)

19. அன்னைபிதா முன்னிருக்க ஆசா னருகிருக்கச்
சொன்னபடி செய்யாமல் சூட்சுமத்தைக் காணலாமோ (மாய)

20. கல்லிலே யென்னவுண்டு கருத்திலெல் லாமிருக்க
வில்லா லடித்தல்லோ விசயன்பாசு பதம்பெற்றான் (மாய)

21. இந்தப் படிநடந்தா லெல்லாம்நீ பெற்றிடலாம்
சிந்தனைப் படவேண்டாம் சிவனுனை நான்சொன்னேன் (மாய)

22. வெளியிலே காட்டாதே வெட்டவெளி யாக்காதே
சலிக்காதே உனக்குள்ளே சஞ்சலப்பட்டிருக்காதே (மாய)

23. உன்னுடன் சொன்னதுபோ லொருவருக்குஞ் சொல்லவில்லை
தன்னுள்ளே வைத்துநீயும் சஞ்சலத்தை விட்டுவிடு (மாய)

24. அப்ப னிருக்கிறா ரார்க்கும் பொதுவாக
எப்படியுங் காத்திடுவா ரென்றேநீ நம்பியிரு (மாய)

35. நம்பியிரு நம்பியிரு நான்சொன்னேன் நம்பியிரு
அம்பலமாய் விட்டிடாதே அருளைக்கை விட்டிடாதே (மாய)

26. தென்பாக நீயிருந்தால் சேனைபொருள் கொடுப்பார்
அன்பரைக் காத்திடுவா ரதற்குச்சந் தேகமில்லை (மாய)

27. உறுதியாய் நம்பியிரு வுன்னுனை நான்சொன்னேன்
கருதியே வுள்ளத்தில் கஷ்டப்பட் டுறுதிகொள்ளு (மாய) 58.

---

## அடியாரொருவர் பாடியது

### பல்லவி

ஆனந்தங் கொள்கிறா ரையா—குருநாதரும்
ஆனந்தங் கொள்கி றாரையா

### அனுபல்லவி

ஆனந்தங் கொள்கிறா ரறிவைக் கொடுக்கிறார்
ஞானோப தேசஞ் செய்து நடித்தே யிருக்கிறார்(ஆனந்)

சரணம்

1. காட்சிகளைக் காட்டுகிறார் கவலைபிணி நீக்குகிறார்
ஆட்சியா யிருப்பதற் கழியாப்பதந் தருகிறார்
சீடர்களுக் காகவே சீமைசீமை யாய்த்திரிந்து
ஆசாபா சத்தைநீக்கி ஐவரை ஒடுக்குகிறார் (ஆனந்)
2. தெருவிலே திரிகிறார் திண்ணையி லிருக்கிறார்
கருவிலமைப்பென்று சொல்லிக்காலத்தைக் கழிக்கிறார்
சிறுவரோடுங் கூடுகிறார் தெந்தினங்கள் பாடுகிறார்
அறிவைக் கொடுத்து நீங்க ளஞ்சவேண்டா மென்கிறார்
(ஆனந்)
3. ஒன்பது வாசலையும் உள்ளே யறியவேண்டும்
ஐம்பத்தோ ரெழுத்தையு மதிலே தெரியவேண்டும்
கண்கூசா மலேபார்த்துக் கருத்தா லறியவேண்டும்
அண்டபிண்ட சராசரம் யாவுமங் கிருக்குதென்று (ஆ)
4. கூட்டமாகக் கூட்டுகிறார் குருவைவணங் கச்சொல்லு
[கிறார்
ஆட்டபாட்டம் பார்த்தக்கால் அவத்தையுண் டாக்கு
[கிறார்
தேட்டையாகச் சொல்லித் தெளிவையுண் டாக்குகிறார்
நாட்டுக் கணக்கையெல்லாம் நன்றாகச் சொல்லுகிறார்.
(ஆனந்) 59.

---

அடியாரொருவர் பாடியது

பல்லவி

மாயவித்தை செய்கிறு ரையா — இரெட்டியப்பட்டிசாமி
மாயவித்தை செய்கிறு ரையா

அனுபல்லவி

மனிதசென்ம மாகவந்து பூமியி லவதரித்தே
உலோக வசனமதைப் பார்க்க வுருவெடுத்து (மாய)

சரணம்

1. கேட்டவரந்த னைக்கொடுக்கவுங் கிலேசங்களைத்
[தீர்க்கவும்
நாட்டில்விளை யாடவந்த நாயகமே யென்சாமி (மாய)
2. வெள்ளிக் கிழமைதோறும் விரதங்க ளிருக்கவும்
மற்றைநாட் காலையவர் நாமத்தைத் துதிக்கவும் (மாய)
3. அடியாருக் கன்பனாகிக் கலியுகத்தில் மெய்யனாகி
எங்கும் நிறைந்தபொருளாக இருந்துகொண்டு. (மா)60

## அடியாரொருவர் பாடியது

### குயிற்கண்ணி

1. எங்கெங்கோ பார்த்தாலு மங்கங்கே நீயிருக்க
மங்கையர் மனம்போல ஏ குயிலே மயங்குவது காரணமோ
2. மயங்குவது காரணமோ மண்டலத்தி லுள்ளவர்கள்
மனதை யடக்கிவிட்டால் ஏ குயிலே மயக்கமது தீருமடி
3. மயக்கமது தீர்ந்துவிட்டால் மறைப்பொருளுங் கிட்டுமடி
மாநிலத்தி லுள்ளவர்கள் ஏ குயிலே மதிப்பார்க ளப்போது
4. மதிப்பார்க ளப்போது மகிமையுள்ள சற்குருவும்
ஆனந்தங் கண்டல்லோ ஏ குயிலே அருள்நிலையைக் காட்டிவைப்பார்
5. அருள்நிலையைக் காட்டிவிட்டால் அனந்தங்கோடி சீவன்களும்
உனதுள்ளே தோன்றுமடி ஏ குயிலே உற்றுநீ பார்த்தாயானல்
6. இகத்துக்கும் பரத்துக்கும் இவனே வழிகாட்ட
இரெட்டிய பட்டியிலே ஏ குயிலே ஏகாந்த வள்ளலடி
7. ஏகாந்த வள்ளலடி எங்கும் நிறைந்தவன்டி
பத்தர்கள் உள்ளத்துளே ஏ குயிலே பதிவாக வீற்றிருப்பான்
8. பதிவாக வீற்றிருப்பான் பலதொழிலுங் காட்டிவைப்பான்
பத்தியாய் நினைத்தபேர்க்கு ஏ குயிலே பரகதியுங் கொடுத்திடுவான்
9. வாலை வயதிலென்னை வலியப் பிடித்திழுத்துப்
பருவங்கள் காட்டிவைத்தான் ஏ குயிலே பரமபதமடைய 61.

---

## அடியாரொருவர் பாடியது

### நொண்டிச் சிந்து

ஓமெனும் பிரணவத்தில்—சகலகரித்
தோங்கார வட்டமதி லுள்ளே யமைந்து
ரீங்காரந் தன்னிலிருந்து—பரம்பொருளாய்
நின்மலசொ ரூபமதை நிரஞ்சன மாய்
சத்தி சிவமாகி—நாதவிந்து
தன்னிலிருந் தானந்த சதாசிவமாய்
மகேசுவரன் தானுகி—யெங்குநிறைந்து
வாகான ருத்திரன்விண்டு பிர்மாவாகி

பஞ்சபூ தங்களாகிப் — பொறிபுலனுய்ப்
பாதாதி கேசமுத லாதியந்தமாய்த்
திரண்டோ ருருவாகி—மானிடமாய்ச்
செகத்தி லவதரித்த திறங்கேளாய்
பதினுறு கலையுடனே — கலியுகத்தில்
பரமன வதரித்த பதிபகர்வேன்
அரசாண்ட பாண்டிநாட்டின்—எல்லை
அகத்தீசர் தாம்ரநதி வடபாகம்
திருநெல் வேலிஜில்லாவின் — நாகைநகர்
சேர்ந்தரெட்டி மாநகரந் தனிலிந்நாள்
சைவ குலத்துதித்து—வெகுகாலமாய்த்
தரணியுள வேதங்களைச் சமமாக
எல்லோர்க்குங் காட்டவென்று—அருள்சுரந்து
யேகபர மரயெங்குந் தானுகி
இரெட்டிபட்டி சுவாமியென்னும் — நாமம்பூண்டு
எல்லோரை யுங்காக்கும் நீதிசொல்வேன்
தபங்களும் தானுகி—யறம்பொருளின்
தர்மங்களும் நீதிகளும் தழைத்தோங்க
மதுரா புரிதனிலே—வடதிசையில்
வைகைநதித் தென்பாக மிரயில்மேற்காய்க்
கணபதி கண்காண—காட்சி தந்து
கலியுகமை யாயிரம் ஆண்டுக்குமேல்
நடக்கு மதிசயங்க—ளின்னவென்று
நாவா லுரைத்தாரந்த நகர்தனிலே
சர்வசித்து வருடமுதல்—கணபதிக்குத்
தானுயி ருந்துபூ சைகள்முடித்துக்
கடம்ப விருட்சமொன்று—தழைத்துவந்த
காரணத்தை யின்னதெனக் கருத்தில்கொண்டு
மன்மத வருடமுதல்—அவதரித்த
மாநகரம்சென் றீச னருள்காட்டச்
சட்டமொன் றுண்டாக்கிச்—சாலோக
சாமீப சாரூப சாயுச்சியம்

தடையின்றியடையவென்று — அய்யனவர்
சாற்றினதோர் சட்டமதின் சூக்ஷமமுரைப்பேன்
அனுதினமும்ஸ்நானஞ்செய்து—கணபதியை
அன்பாய்ப்பிரதக்ஷணங்கள் மூன்றுமுடித்து
வெள்ளிவிரதமிருந்து — தினந்தோறும்
வெந்நீரில்ஸ்நானபானங் கூடாதென்றும்
யெண்ணெயிட்டுக்கொண்டாலும்—சுத்த ஜலம்
யேற்றுக்கொள்ளவேண்டுமென்றும், யெண்ணெ [தனைக்
காய்ச்சவேகூடாதென்றும் — மருந்துகளைக்
கனவிலும்நினைக்காமல் மறந்துவிட்டு
வியாதிக்கஷ்டம்நேர்ந்ததென்றால்—ஔஷதமாய்
மெய்யானரெட்டியப்பட்டி சுவாமிநாமம்
துதித்துவிபூதிபூசி—உட்கொள்ளவும்
தொலையுமேவியாதிகளும் பேய்கள் பில்லி
வஞ்சனைசூனியமும்—ஏவலொடு
மாத்தான்கருப்பன்மொண்டி கட்டேரியும்
சப்பாணிமாயிருளன் — படாமுனி
சாத்திபேய்ச்சிபிரம ராக்ஷசியும்
இசக்கிமாடனுமே—துஷ்டதெய்வம்
யெங்குமுள்ளபேய்களும் பறந்தோடும்
கள்ளன் கருமாத்தன்—பெருவியாதி
கண்குருடுஊமைநொண்டி சப்பாணியும்
வெண்குட்டங்கருங்குட்டமும்—சயரோகம்
மேகம்விப்புருதிகுன்மம் வயிற்றுவலி
நீரிழிவுவெட்டைசூடு—பவுத்திரங்கள்
நீங்காதபாண்டுபித்தஞ் சன்னிசுரமும்
வலிப்புநோய்களுடன்—சென்மவினை
மாருதபாவதோஷம் பறந்தோடும்
சென்மங்களீடேறும்— நாமஞ்சொல்லித்
தேள்பாம்புபிடித்திட வணங்கிடுமே

இஷ்டங்கள் நிறைவேறும்—காட்சிதரும்
யெம்பிரான்சட்டமின்ன மியம்புகிறேன்

தெய்வப்பிரார்த்தனைகள்—முன்பாக்கிதனைச்
செலுத்தியினிமேல்நேர்ச்சை கூடாதென்றும்

வயித்தியன்மந்திரவாதி—கோடாங்கிகுறி
வகையுடன்கட்டிவைத்த ரட்சைகளைக்

களைந்துயெறிந்துவிட்டு—யிவர்களைக்
கண்டாலும்பேசாது மறைந்திடென்றும்

விஷத்தேள்பாம்புகளைக்—கொன்றுவிட்டால்
விஷங்களிறங்காதென்று மறுக்கச்சொன்னார்

இப்படிச்சட்டமொன்று—செய்ததுடன்
ஏத்தமுகமதியர் கிறிஸ்துரோமன்

அந்தந்தமதஸ்தர்களும்—அவரவர்
மார்க்கவழக்கப்படி வணக்கங்களும்

மற்றவிபரமெல்லாம்—சட்டமுள்ள
அறுதிப்படிநடக்க வுறுதிசெய்து

எல்லோர்க்குங் குருவாகி யுலகமதில்
எங்கும்நிறைந்தானந்த வஸ்துவாகி

மன்மதவருடமுதல்—சட்டமது
வழங்கும்படிக்கனந்தம் அருள்காட்டி

நான்குவருடம்வரை—அவதரித்த
நகரந்தனில்நடந்த அற்புதங்கள்

கோடானுகோடியல்லோ—அதின்
குணங்களுரைக்க ஆதிசேடனாலும்

விவரிக்கமுடியாது—அய்யன்திரு
விளையாட்டைக்கண்டவர்கள் வெகுகோடி

அடியார்கள்கூட்டங்கூடி—அன்புடனே
ஆனந்தங்கொண்டாடி அய்யனடியைத்

துதித்தார்வெகுகோடி—கர்மவினை
துன்பங்கள்நீங்கினவர் பலகோடி

மலடுசெவிடுமை—கண்குருடு
மாறினவர்நொண்டி சப்பாணிகளும்
பலவிததுன்பங்களும்—பேய்களாடிப்
பயந்தோடுமற்புதங்கள் பார்த்திருக்கக்
கடவுளென்றறியாமல்—உலகமெங்குங்
காட்சிகளைப்பார்த்துஞ்சிலர் மோசம்போனர்
அறிந்தோர்சாயுச்சியம்—அடைந்துகொள்ள
அய்யனுடையசூக்குமமதை யறிந்துகொண்டு
வெகுபேர்தேர்ந்தார்கள் — இன்னம்
வேண்டுந்தபசுகளை முடித்துக்கொள்ள
அனந்தம்பேரருள்கள்பெற்று—உலகமெங்கும்
அற்புதங்கள்காட்டிவரு மதிசயங்கள்
விகாரிவருடமுதல் —நாமந்துதித்த
விடமெல்லாங்கண்காட்சி புரிந்தவரும்
அற்புதங்கள்கோடியல்லோ—பரதகண்ட
மனைத்தும்விளங்கிவரு மதிசயங்கள்
கண்டார்வெகுகோடி—கண்டதின்
காரணத்தைப்பூரணமா யறியவில்லை
விண்டுசொல்லக்கூடாது—அய்யன்
விளையாட்டைக்கவனித்தோர் மெய்யராவார்
பத்துவருடமாக—அருள்காட்டிப்
பரதகண்டமுழுதும் பரவிவந்து
சோதனைகள்செய்துவரும் — சூக்மமதைச்
சொன்னலுந்தெரியாது கலியுகத்தில்
கலியன்மிகுந்ததனுல்—அய்யன்வந்து
காட்சிகளைக்காட்டிவேத போதனைசெய்தும்
தெரிந்து நடப்பவர்கள் —சொற்பமுண்டு
தெரியாதமானிடர்கள் பலகோடி
பின்வருங்காரியங்கள்—அய்யன் அனுப்
பிசகாமல்சொல்லியுமே தெரியவில்லை

சாஸ்திரங்க ளுணர்வாரில்லை—யுணர்ந்தவர்போல்
சமர்த்துகள்பேசியெங்குந் திரிவார்கள்

இனிமேல்திரிவாருண்டோ—கொஞ்சகாலத்தில்
யெமனுடைபட்டாளங்க ளிறங்குவதால்

தேவர்கள்வந்துகூடி—முன்சாஸ்திரத்தில்
தெரிவித்தபடிவந்து நீதிநடத்தும்

காரியங்களின்னதென்றும்—விபரமாகக்
கண்டுதெளிந்தவ ரனேகமுண்டு

தெளிந்தவரனைவருமே—சாயுச்சியபதஞ்
சேர்வாரென்றேமறைகள் ஒலியிடுதே

சந்தேகம்யாதுமுண்டோ—கலியுகத்தில்
சாயுச்சியங்கிட்டுவது யெளிதலவே

அறியாமானுடர்க்குக்—கலியுகத்தில்
அருமறையொலிப்பது தோணுது

தெளிவாகச்சொன்னாலும்—கலியுகத்தில்
தேருதுதேருது தேர்ந்துபாரே. 62.

---

கொடியேற்று விழாவில், ''குருநாதர் உபதேசம்'' என்னும்
பொருள்பற்றி விரிவுரை நிகழ்த்தியவரும்,
காஞ்சிபுரம் ஆண்டர்சன் உயர்தரக் கல்லூரித் தமிழ்ப்புலவருமான
திருவாளர்: வித்வான்
**அ. மு. பரமசிவானந்த முதலியார்**
அவர்கள் ஆக்கியது.

## உடையவன் திருக்கொடி

**ஆனந்தக் களிப்பு.**

உடையவன் திருக்கொடிபாரீர்—அங்கு
உயர்திருச்சாத்தனூர் ஓங்கியநிலையில் (உடை)

1. நந்தமை ஆண்டருள் புரியும்—உயர்
நம்பன்தன் திருக்கொடி நாட்டிய நாளில்
உம்பர் உவந்தனர் கண்டீர்—நம்மை
உடையவ னுணையி னேங்கிய ததுவே (உடை)

2. பத்திரண் டாண்டுகள் முன்னர்—வந்து
பண்புடன் நின்ற பெருந்திருந் தவத்தார்
நித்திய வாழ்வினை வேண்டி—வாயில்
நிறுத்திய திருக்கொடி கண்டனம் இன்றே (உடை)

3. இரெட்டியப் பட்டி யடிகள்—இங்கு
இருந்து அருள்புரிந் தாக்கிய செல்வம்
விரித்து ரைத்தார் அதன்பொருளை—இன்று
வித்தகத் தன்மையில் விளங்கிடக் கண்டோம் (உடை)

4. இராமலிங்கப் பெயரோனும்—அருள்
எங்குமிளிர்ந்த இறையவன் கொடியை
மருமலிருக்கும் படித்தான்—இங்கு
வந்திருந்தேற்றினன் மனமகிழ்ந் தடியார் (உடை)

5. தாதெனும் நற்பெரு ஆண்டில்—உயர்
தன்மைசேர் நற்புரட்டாசியா மதியில்
சீர்பெறும் பதினைரும் நாளில்—கொடியை
ஜெகமெலாம் கண்டிட ஏற்றினன் பாரீர் (உடை)

6. சாத்தனூர் தனியரசாளும்—நல்ல
தகைமைசேர் சீர்முத்து ரா்ம ரெட்டியார்
காத்து உடையவன் கொடியை—இன்று
கண்டிட யாவரும் காட்டினன் காண்பீர்! (உடை)

7. கண்டிடுவீர் அருட்கொடியை—கண்டு
காணரும் இன்பத்தின் மெய்வழி நிற்பீர்
பண்டும் இன்றும் என்றும் அருளும்—மெய்ம்மைப்
பண்ணவர் தம்அருள்பாலிக்கக் கொண்டே (உடை)

ஜனுப், மசா், சாகுல் அமீது சாயபு அவர்கள் பாடியன

அடிமைத் துயரமதை அகற்றிவைப்பதும் நீயே
மிடுக்கமதனையகற்றி மீட்டருள்வாய் தாயே
காலமெல்லாம் துதிசெய்துய்யக் கருதிய சாகுல்
அகமீதுக்கு
சீலமுடன் திருவடியே தந்தருள்வா யெந்தாயே

வேறு

என்னைப் பெற்ற தாயும் நீயே
என் பத்தியும் சித்தியும் முத்தியும் நீயே
உன்னை அன்றி வேறே
ஓர் அணுவும் அசையாதென்பதைப்
பற்றிப்பிடித்தேன் உன் திருப்பாதமே கெதியானேன்
அன்னமும் நீயே அருளதும் நீயே
எண்ணமும் நீயே எனக்கருள் தாயே
பொருளதும் நீயே பொக்கிஷமும் நீயே
அருளதும் நீயே அடியனுக்கருள் தாயே
சகலவஸ்துவும் நீயே சரணம் சரணம் நீயே
அகத்துக்குள் நீயே அடியேனுக்கருள் தாயே
வேதமும் நீயே வேதாந்தமும் நீயே
ஆதமும் நீயே அடியேனுக்கருள் தாயே
ஏகாந்த நிஷ்டையும் நீயே என்தமைக் காண்ப
தும் நீயே
மோகாந்தமும் நீயே முத்தித்தருவாயே
அண்டபிண்டமும் நீயே ஆலமெல்லாம் நீயே
குண்டலி வட்டமீதில் குடிகொண்டாய் தாயே

---

# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்

# தோத்திரப்பா

ஸ்ரீலஸ்ரீ திருப்பாதிரிப்புலியூர்

## ஞானியார் சுவாமிகள்

1923-ம் ஆண்டில் பாடிக் கொடுத்தது த்/

---

திரண்டிடு மடியார் தீவினை தீர்ப்பான்
திருவுருக் கொண்டஎம் சிவமே
அரண்தரும் நின்றன் அடிமரை மலரை
யனுதினம் போற்றிசெய் கின்றோம்
இரண்டறக் கலந்தின் புறவருள் செய்வாய்
இணையிலா துயர்ந்திடு பவனே
முரண்பட லில்லா ரெட்டியப் பட்டி
முதுநகர் வருகுரு பரனே. (1)

அன்புசெய் வார்க்கு வேண்டுவ தந்தே
யளித்திடு கருணையை யுடையோன்
வன்புசெய் வார்க்கு மறக்கரு ணையினல்
வகைபடு நலம்வரச் செய்வோன்
முன்புபின் பில்லா முதல்வனென் றின்னும்
முழுமறை முழங்கிடு தலைவன்
நன்மனத் தவர்சூழ் ரெட்டியப் பட்டி
நகர்தனில் குருவென வந்தோன். (உ)

தரைபுகழ் வளஞ்சேர் ரெட்டியப் பட்டித்
தனிநகர் வந்தடி யேங்கள்
உரைபுகழ் ஏற்றுன் கருணையை யளித்தாய்
உய்ந்தனம் உய்ந்தனம் என்றும்
வரையினிற் சிறந்த கயிலையை விட்டு
வந்தனை தந்தனை ஞானம்
குறைகட லுலகிற் கண்ணினிற் கண்ட
குறையிலாத் தெய்வநீ யன்றோ? (3)

கண்டிடும் பொருள்கள் பற்பலவாயும்
காணொணுப் பலபொருளாயும்
விண்டிட முடியாப் பல பொருளாயும்
வேறுமாம் பலபொருளாயும்
தொண்டரை யாளும் குருபரனுயும்
துலங்கிடு சத்தியப் பொருளே
மண்டலம் புகழும் ரெட்டியப் பட்டி
வள நகர்க் குருபரா போற்றி. 4)

கருத்தினுக் கெட்டாக் கடவுளே யுலகிற்
கலந்திடு மடியரைக் காப்பான்
உருக்கொடு வருவ ரெனப்பல நூல்கள்
உரைப்பன வுண்மையென் றடியேம்
தெரிந்திடத் தவர்சூழ் ரெட்டியப்பட்டித்
திருத்தலம் செழிக்கவந் திடுவோய்
விரிந்திடு மெங்கள் மனமிக வொடுங்க
வெளிவரு குருபரா போற்றி! (5)

## வேறு

பூந்தா மரைவதி புங்கவன் பிரமன்
படைத்திடுவுலகில் படர்ந்தபுண் ணியத்தான்
மானுடப் பிறவி மன்னிய வுயிர்கள்
அறமுதல் நான்கும் அடைந்துய்ந் திடுவான்
கருணைகொள் பரமன் கருமணி கண்டன்
அன்பே வடிவா யமர்ந்திடு பரமன்
சச்சிதா நந்தத் தனிப்பெருஞ் சோதி
முத்தன் பத்தர் முழுமலம் போக்கிப்
பரஞான ந் தருபரை யொரு பாகன்
தூம்புடை யெயிற்றுப் பாம்பணி சித்தன்
அழிவி லின்ப வருளுருக் கடவுள்
மானைக் காட்டி மான் பிடிப் பதுபோல்
மானுட வடிவ வள்ளல் என்ன
குற்றம் போக்கும் குருபர னென்ன
ஞானம் நல்கும் நாத னென்ன
ஊன மொதுக்கு முத்தம னென்ன
ஆதி அகற்றும் ஆப்த னென்ன
நோயினை நீக்கும் நுண்ணிய னென்ன
பிறப்பை யழிக்கும் பிஞ்ஞகனென்ன
இன்னன பலவா இயம்பிப் போற்ற
வருவ னென்ன வந்திடு மறைகள்
சொல்லுவ துண்மையாத் துணிந்தடி யேங்கள்
வாழ இத்தரையில் வந்த சற்குருவே
செந்தா மரைவதி செப மல்செ யுலகில்
மக்களாய்ப் பிறந்தோர் வாய்த்திடு நலங்கள்
அறம்பொரு ளின்பம் அமலவீ டென்ன
நான்கென அறைவர் ஞானஞ்சேர் பெரியர்
அந்நலம் நான்கி லழிவில் வீடே
மேலாக் கொள்வது விவேகிகள் கடமை
அந்தநல் வீடும் அமல ஞா னங்கொடே
பெறுதல் வேண்டும் பேதமை யகற்றும்
ஞானமும் இணையில் மானமர் கையன்
வலமமு வமர்ந்த வள்ளல் இளமதி
கங்கை யரவு கலந்துவாழ் சடையோன்

அடியவர்க் காக அருளில் யமனை
உதைத்துத் தன்னை யுற்றவ ரடையும்
நலமது தெரித்த நாதன் குருவாய்
வந்துணர்த் திடினன்றி வந்திடு மோதான்
ஏனைய சிறுவள னெல்லா மெய்திப்
பிறந்திறந் தயரும் பெற்றிய ரடியேம்
ஞானங் கொண்டே நணுகும் சிவபதம்
பக்குவக் கேற்பப் பயன் துயத் திடுவான்
அப்பர னிந்த அவனியர் புகழுந்
தமிழிளந் தென்றல் தக்க தரளம்
சந்தனம் இவற்றின் பிறப்பிட மாகும்
பாண்டி நாட்டி லீண்டிய நல்லோர்
கூடியேத்துங் குறைவில் ரெட்டியப்
பட்டி நகரில் பகர்வே ளாண்குலம்
விளங்கப் பிறந்த வீர பத்திரர்
ஆவுடை மங்கையர் ஆற்றிய தவத்தால்
ஞாலந் துதிசெய் நளவரு டத்தில்
திரட்டு மழைபொழி புரட்டா சியினில்
இரண்டாந் தேதி யிரேவதி செவ்வாய்
மாண்பு மிக்க மகரலக் கினத்தில்
ஞானிக ளேத்த நான்மறை துதிக்க
மாதவர் மழுத்த மன்னவர் பழிச்சப்
புலவர் புகழப் பொருவரு மற்றையோர்
துதிக்கத் தோன்றிய துணையில் செம்மை
அறிந்து துதிக்கு மாற்ற லில்லோம்
எளியரேம் வினைக ளில்லா தகலக்
கடைக்கண் செய்க கருணைவா ரிதியே
பிறவிக் கடலில் மூழ்கி மூழ்கிப்
பேரலு ருற்றேம் பிறவா வண்ணம்
ஞானந் தன்னை நல்க வெங் கட்டே
அறக்கலை முதலா அறைபல கலையும்
உணர்ந்து திறத்தை யுரைக்கவெந் நாளும்
வாய்மை முதலா வகுத்திடு குணங்கள்
எங்கள்பா லிருக்க என்று மருள்செய்
உடற்குறு நோய்போல உற்றிடா வண்ணம்
திரமருந் துதவித் திருத்திடல் வேண்டும்

காம மாதி கடும்பகை யெல்லாம்
கனவினும் வெல்லக் கடுந்திறல் தருக
வாட்டமில் மனத்தை வகுக்கநல் லருளொடு
எய்ப்பில் வைப்பே இணையில்சற் குருவே
கணபதி கழற்காற் கமல மரணுக்
கொண்டிடு வீரெனக் கூறுஞ் செம்மால்
தண்ணீர் தானே தகுந்த மருந்தா
எந்நோய் தனையு மேகு விக்கும்
வைத்திய நாத வள்ளால் போற்றி
அட்டமா சித்திசெ யாண்டவ நீதான்
அறுபத் தாறே ஆண்டிந் நிலத்தில்
விளங்கினை பின்னர் விளமபுதுந் துபியின்
மார்கழி யனுஷ மாண்புறு நாளில்
சோதியாய் விளங்குந் தூயவ னுனைய்
அன்றைத் தினங்கொண் டகத்தினி லுன்னி
வாயின் வாழ்த்தி வணங்கிஇம் மெய்கொடு
பேறது பெற்றுப் பெருகுகின் றனமே
இயல்வது கொண்டே யியற்று பூசனையை
ஏற்று நாங்க ளின்பமெய் திடவே
அருள்செய் பரம குருவே போற்றி
பாட்டுறு ரெட்டியப் பட்டி நகர்வாழ்
தேட்டக் குருவே தெளிவுறு குருவே
வாழ்க வாழ்க வகையுளி யென்றும்
வாழ்கநின் தாமரை மலர்நிகர் அடியே.

———

ஆனத்தூர் பாலகவி

**கே. வேங்கடராம செட்டியார்**

பாடிய 'குருபர வணக்கம்' என்னும் நூலில் இருந்து

எடுத்தது

## ம ங் க ள ம்

(இங்கிலீஷ் நோட்)

மங்க ளமெனப் பாடுவோம்
மறைமு தலருள் நாடுவோம்
மடமை யிருளைக் களைந்து மனத்துள்
மருவு மொளியைத் தேடுவோம். (மங்க)

துங்க வொளியைக் காணுவோம்
தூய நெறியைப் பேணுவோம்
சுமுக முடனே சுஜன ருடனே
சுகுணப் பணியைப் பூணுவோம். (மங்க)

இங்கி தமுடன் வாழுவோம்
எங்கும் அன்பொடு சூழுவோம்
இயற்கை யையடக் கிடுரெட் டிப்பட்டி
இருடி யருட்குள் ஆழுவோம். (மங்க)

சங்க மதனில் மேவு வோம்
சத்யத் துக்கலர் தூவுவோம்
சங்க டமனைத் துந்த விர்த்தருள்
சாந்திக் கரைக்குத் தாவுவோம். (மங்க)

### வேறு

மங்கள மெங்கள் குரு நாதர்க்கும் கணேசர்க்கும்
எங்குமெவ் வுயிர்களுக் கும்

கங்கை முதற்குமரி காறும்யாத் திசைசெய்து
துங்கநெ றியையார்க்கும் சொற்ற குருநாதர்க்கும்
தங்கு தடைகளற்ற தண்ணருட் கடலான
ஐங்கரத் தேவருக்கும் அன்பாய்மங் களமென்போம்
(மங்க)

துன்பம னைத்துந்தவிர் தூயசட் டத்தைத்தந்து
புன்பவ வினைமாய்த்த புண்ய வுருவாளர்க்கும்
இன்பக்க டலமுதை இனிதேயன் பர்க்குநல்கி
என்பிறப் பொழிப்போர்க்கும் என் றும்மங்கள
மென்போம். (மங்க)

வேறு

சற்குருவாம் நாதருக்கு ஜெயமங்களம்
சண்முகர்ச கோதரர்க்கு சுபமங்களம்
சொற்களங்க மற்றவர்க்கு ஜெயமங்களம்
தூயசக்தி மைந்தருக்கு சுபமங்களம்

இரெட்டியப்பட்டி ஸ்வாமிகட்கு ஜெயமங்களம்
இபமுகக் கடவுக்கு சுபமங்களம்
அருட்சுக மளிப்பவர்க்கு ஜெயமங்களம்
ஐங்கரக் கணபதிக்கு சுபமங்களம்.

அன்பமுத ருள்பவர்க்கு ஜெயமங்களம்
ஆரணமு தல்வருக்கு சுபமங்களம்
இன்பொளிவ ழங்குவோர்க்கு ஜெயமங்களம்
எவ்வுயிர்க்கும் நாதருக்கு சுபமங்களம்.

தத்வநிலை காட்டுவோர்க்கு ஜெயமங்களம்
சத்தியசொ ரூபருக்கு சுபமங்களம்
சத்வகுணம் நல்குவோர்க்கு ஜெயமங்களம்
சாந்தவடி வாளருக்கு சுபமங்களம். (சற்குரு

ஓம் சற்குரு.

---

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருளிய

# அருட்பாடல்

# அகராதி

அடியார்கள் பாடிய

## தோத்திரப்பாக்கள்

அகராதி

ஞானியார் சுவாமிகள் பாடித் தந்தன



## வாழ்த்து

நல்லருள் புரிந்து மெய்மை நாட்டி இவ்வுலகத் தென்றும்
புல்லர்கள் இல்லா துள்ள பொற்புறு தலைமை கண்டு
கல்லினும் வலியர் தாமும் கசிந்துள முருகச் செய்து
சொல்லுப தேசஞ் செய்த தூயவன் வாழி வாழி !

இரெட்டியப் பட்டி வந்து யாங்கணும் அருள் பரப்பி
அருட்டிற வள்ள லாரும் ஆண்டவன் ஆசி வாழி !
மருட்கெடச் செய்தான் நம்மை மலவழி நீக்கி ஆண்ட
தெருட்டருஞ் செல்வன் நீதி சீர்பெறச் சிறக்க வாழி !

வாழிஇவ் வுலகத் தென்றும் வள்ளல்தன் நியதி யெல்லாம் !
வாழிஇவ் வுலகி லன்னுன் வளம்பெரு அடியார் யாரும் !
வாழிஎந் நாளும் மெய்மை ! வாழ்கநல் லறங்க ளெல்லாம் !
வாழிஅப் பெரியோன் நாமம் ! வாழியே வாழி வாழி.!

